ஆண்மை —
ஒரு மாமேரு,
வீறுகொண்ட ஏறு,
சீறும் வல்லூறு,
சிறிதே ஏறுமாறு.
ஆண்மையின்
பன்முகப்
பண்புகளைப்
படித்தறிந்த படைப்பு
'எஸ்டர்காட்'




எஸ்டர்காட்®

அரசமகுடம் சூடும் ஆடவன்
'எஸ்டர்காட்' அணிபவன்.
'எஸ்டர்காட்' பாலியெஸ்டர்
இழைகலந்த காட்டன்
சூட்டிங்குகள்.

தவிர, இளம் சாயல்களிலும்,
எடுப்பான வண்ணங்களிலும்,
பெருமிதப் பிரிண்டுகளிலும்
'மெ..ப்ரின்' 100%
பாலியெஸ்டர் சேலைகள்,
பாலியெஸ்டர் இழைகலந்த
காட்டன் சேலைகள்; 'மெ..ப்ரின்'
பாலியெஸ்டர் இழை
கலந்த உடுப்புத் துணிகள்—

இலேசான லான்கள், கோடை
நிழல்படரும் கேம்பிரிக்குகள்,
கோலாகல நகை மிளிரும்
பாப்ளின்கள்; அதிநவீனமான
அரும்பெரும் அழகு
வண்ணங்களிலும்,
பிரிண்டுகளிலும் 'டெரோலைல்'
பாலியெஸ்டர் இழைகலந்த
காட்டன் ஷர்ட்டிங்குகள்.



மபத்லால்
க்ரூப்

AIYARS-M-172 TM




# பொருளடக்கம்



பரிதாபி ஞ சித்திரை 4 □ ஏப்ரல் 16, 1972



## இளைஞர் மலர்

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே ; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறுமாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ 23.00 | ரூ 11.50 |
| இதர நாடுகள் | ரூ 50.00 | ரூ 25.00 |
| இலங்கை(இலங்கைநாணயப்படி) | ரூ 27.00 | ரூ 13.50 |

கல்கி

மலர் 31
இதழ் 38



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# துவேஷம் தொலையட்டும்; அமைதி நிலவட்டும்!

கடந்த இரு மாதங்களாகவே பாரதப் பிரதமர், பாகிஸ்தான் அதிபர் ஆகிய இருவரும் ஒருவரையொருவர் சந்தித்துப் பேச்சுவார்த்தை நடத்த விரும்புவதாகக் கூறி வந்திருக்கின்றனர். ஆயினும் இரு நாடுகளுக்கிடையே இது குறித்து அதிகாரபூர்வமான கடிதப் பரிவர்த்தனை இல்லாமலிருந்தது. தோல்வியுற்ற நாடு என்கிற முறையில் திரு பூட்டோ நம் அரசாங்கத்துக்கு முதலில் எழுதியிருக்க வேண்டும் எனலாம். ஆயினும் தாழ்மை மனப்பான்மை காரணமாகவோ என்னவோ அவர் அவ்விதம் செய்யவில்லை. இரு அரசாங்கத் தலைவர்களும் சந்திக்க வேண்டும் என இப்போது ஸ்ரீமதி இந்திரா அவர்களே முதலடி வைத்துப் பூட்டோவுக்கு எழுதியிருப்பது பெருமைக்குரியது. எதிர்த் தரப்பை எதிர்பாராமலே போரை நிறுத்திய பிரதமர், போருக்குப் பின் அமைதி காண்பதிலும் தாமே முதலடி எடுத்து வைத்து, மீண்டும் பாராட்டுக்குரியவராகிறார்.

இரு நாட்டுத் தலைவர்களும் விரைவிலேயே சந்தித்துப் பிணக்குகள் தீர்ந்து, இணக்கம் ஏற்பட வேண்டுமென இறைவனை இறைஞ்சுகிறோம். இந்தப் பேச்சுவார்த்தையில் பலவிதமான சிக்கல்கள் எழுவதற்கு இடமுண்டு. முதலாவதாக, யுத்தக் கைதிகளைக் குறித்து ஒரு பிரச்னை உண்டாகலாம். இந்தியா சிறைப் பிடித்துள்ள பாகிஸ்தான் கைதிகளை அது வங்காள தேசத்திடம் ஒப்புவிக்கக் கூடாது என்று திரு பூட்டோ கருதுவதாகத் தெரிகிறது. நமது நேச நாடான வங்காள தேசத்தின் தலைவர் திரு முஜீப் இதற்கு மாறாகப் போர்க் கைதிகளைப் பாரதம் தன்வசம் தர வேண்டுமென விரும்பினால் இந்தியா அதைப் புறக்கணிக்க முடியுமா? இவ்விஷயத்தில் ஹேக் நகரில் உள்ள சர்வ தேச நீதி மன்றத்தின் ஆலோசனைக்கு இந்தியா, பாகிஸ்தான், வங்காள தேசம் ஆகிய மூன்று நாடுகளும் கட்டுப்பட்டு நடப்பதாக ஒப்புக் கொண்டால்தான் சமரஸத் தீர்வுக்கு வழிபிறக்கும் எனத் தோன்றுகிறது. அல்லது கட்ச் தீவு குறித்துக் காலஞ்சென்ற லால்பஹாதூர் சாஸ்திரி செய்ததுபோல், சர்வதேச மத்தியஸ்தக் குழுவுக்குப் பிரச்னையை விட்டு, அதன் முடிவுப்படி செய்யலாம்.

யுத்தத்தில் சிறைப் பிடிக்கப்பட்ட கைதிகள் விஷயம் ஒருபுறமிருக்க, கொடூர யுத்தத்துக்குக் காரணமாயிருந்த பாகிஸ்தானியர் மீது டாக்காவில் விசாரணை நடத்த வேண்டும் என்பது வங்காள தேசத்தின் விருப்பம். இவ்விஷயமாக ராஜாஜியின் கருத்து பெருமதிப்புக்கு உகந்ததாகும். டாக்காவில் இல்லாத குற்றவாளிகளின் மீது—வங்காள தேசத்தால் தண்டனையை அமுலாக்க முடியாத குற்றவாளிகளின் மீது — விசாரணை நடத்துவதன் நோக்கம், உலகுக்குப் பாகிஸ்தானின் அட்டூழியத்தை அம்பலப்படுத்துவது ஒன்றேயாகும். 'இந்தத் தார்மிக' வெற்றி பெறுவது தவிர, யுத்தத்துக்குக் காரணஸ்தர்களானவர்கள் மீது வங்காள தேசம் 'பௌதிக'மாக ஏதும் செய்வதற்கில்லை. ஏற்கனவே சர்வதேச நாடுகள் பாகிஸ்தானின் கொலை வெறியை அருவருத்துக் கண்டித்திருக்கின்றன. அதற்கு அதிகமாக இப்போது ஏதும் செய்வது சமாதானத்துக்கு உதவாது. எனவே, ருஷ்யா வலியுறுத்துவதுபோல், இனி நாம் அனைவரும் சமாதானப் பிரியர்களாகவே சகல நடவடிக்கைகளையும் மேற்கொண்டு, நமது பொருளாதாரத்தைக் காத்துக் கொள்வதுதான் அனைவருக்கும் க்ஷேமம் என்கிறார் ராஜாஜி. 'திரு பூட்டோ பெரிய கேள்விக்குறியாக இருக்கிறார். ஆனால் அவரது சிரமங்களையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும். அவரை ரத்தப் பசி கொண்ட ராஜாளிகள் பல சுற்றி வருகின்றன' என்கிறார் ராஜாஜி.

பாரதமும், பாகிஸ்தானும் பேச்சு நடத்துகையில் முளைக்கக்கூடிய இன்னொரு பிரச்னை, யுத்தத்தில் கைப்பற்றிய பிரதேசம் குறித்ததாக இருக்கும். 'பாகிஸ்தானின் மண்ணில் ஓர் அங்குலத்தைக் கூடப் பறிக்க நமக்கு எண்ணமில்லை' என்று நமது ராஷ்டிரபதியும், பிரதமரும் வெளிப்படக் கூறியுள்ளனர். எனினும், காச்மீரம் முழுதும் பாரதத்தைச் சேர்ந்தது

என்பது நமது சர்க்காரின் கருத்தாகையால், ஏற்கவே ஒரு போர்நிறுத்த எல்லையைப் பாரத அரசாங்கம் ஒப்புக் கொண்டிருந்தாலும், அதைக் கடந்து இப்போது கைப்பற்றியுள்ள காச்மீர அவுட் – போஸ்ட்களைப் பாகிஸ்தானுக்குத் திருப்பித் தரத்தான் வேண்டுமா என்ற கேள்வி எழலாம். ஏனெனில், இப்பகுதி ராணுவ ரீதியில் முக்கியத்துவம் பொருந்தியதாகக் கருதப்படுகிறது. இங்கிருந்துதான் பாகிஸ்தான் 1965-லிருந்து வாலாட்டி வந்திருக்கிறதாம். எனவே, இவ்விஷயத்திலும் பரஸ்பரப் பேச்சுவார்த்தை மட்டும் பலனளிக்காவிடில், சர்வதேச மத்தியஸ்தத்துக்கு விடும்படியாகவே நேரலாம்.

பாகிஸ்தான், வங்காள தேசம் இரண்டிடமும் நாம் நட்புக் கொள்ள வேண்டியவர்கள். பாகிஸ்தானுக்கும் வங்க தேசத்துக்கும் இடையே நல்லுறவு ஏற்பட வேண்டுமென்பதும் நமது விருப்பம். இந்தியாவுடன் பேச்சு வார்த்தை தொடங்குமுன்பே திரு பூட்டோ வங்க தேசத்தை அங்கீகரிப்பது யுக்தமாக இருக்கும். அவ்விரு நாடுகளும் தமக்குள்ளேயே நேரடித் தொடர்பை வளர்த்துக் கொண்டு, பிரச்னைகளைத் தீர்த்துக்கொண்டு நட்புப் பூணலாம். இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் இடையில் உள்ளதை விட, வங்க தேசத்துக்கும் பாகிஸ்தானுக்கும் இடையே உள்ள பிரச்னைகள் மிகப் பெரியவை. அவற்றிடை உள்ள பகை உணர்ச்சி தீவிரமானது. எனவே, இவ்விரு நாடுகளிடை நட்பு ஏற்படுவதில் இந்தியாவும் தன் பங்கைச் செய்யத் தயாராயிருக்க வேண்டும்.

பிரிவினை ஏற்பட்ட காலமாகப் பாகிஸ்தான் அரசாங்கம் இந்தியாவைத் தன் பகை நாடாகவே வருணித்து வந்திருக்கிறது. அந்நாட்டு மக்களுக்குப் பாரதத்திடம் நல்லெண்ணம் ஏற்படவில்லை. துரதிருஷ்டவசமாகப் பாரதத்திலும் பெரும்பாலோருக்குப் பாகிஸ்தானிடம் வெறுப்பே உள்ளது. இந்தச் சூழ்நிலையில் இந்திய சர்க்கார் சமாதானத்துக்காக எவ்வளவு தூரம் விட்டுக் கொடுக்க முன்வரும் என்று சொல்வதற்கில்லை. ஆயினும் சீனத்தோடும் அமெரிக்காவுடனும் சேர்ந்து கொண்டு பாகிஸ்தான் இந்தியாவின்மீது படை யெடுக்கக்கூடும் என்பது போன்ற ஹேஷ்யங்களை மனத்திலிருந்து அகற்றி நட்புக் கரத்தை முடிந்த மட்டில் நீட்ட வேண்டியது சர்க்காரின் கடமை. நமது சமாதான முயற்சிகளுக்கு ருஷியா பெரிதும் உதவும் என்ற மகிழ்ச்சிக்குரிய அம்சத்தை நினைவில் கொண்டு நடவடிக்கை எடுக்கவேண்டும். பாகிஸ்தானும் சமாதானத்தின் முக்யத்துவத்தை உணர்ந்து துவேஷத்தைக் கைவிட்டு, மாபெரும் பாரதத்துடன் நட்புப் பூணுவதே புத்திசாலித்தனம் என்று உணர்ந்து நடக்க வேண்டும். இந்தியத் துணைக் கண்டத்தில் துவேஷம் மறைந்து, அமைதி மலர, ஆண்டவன் துணை புரிவானாக!

# ராஜாஜியின கருத்துக்கள்

## அமெரிக்க அங்கீகாரம்

அமெரிக்கா வங்காள தேசத்தை அங்கீகரித்து விட்டது. பிரத்தியட்சத்தில் ஏற்பட்டு விட்ட ஓர் உண்மையைக் காலம் கடந்து ஒப்புக் கொண்டிருக்கிறார்கள், அவ்வளவே! இது காரணமாக அமெரிக்க சர்க்காரின் கொள்கையில் மாற்றம் உண்டானதாகக் கொள்வதற்கில்லை. இன்னமும் அமெரிக்க அரசு பாகிஸ்தானுக்கு ஆதரவு காட்டுவதாகவும், இந்தியாமீது துவேஷம் கொண்டிருப்பதாகவுமே தெரிகிறது.

## கடன் நிவாரணக் கொடுமை

தமிழக சட்டசபை நிறைவேற்றியுள்ள 'குத்தகை பாக்கி நிவாரணச் சட்ட'த்தை ஆதரித்து, ரிவின்யூ மந்திரி திரு ப. உ. சண்முகம் எவ்வளவோ சொல்கிறார். ஆனாலும், அது குத்தகை தராமல் வேண்டுமென்றே தப்புச் செய்வதற்கு ஊக்கம் தருகிற திட்டமேயாகும். மந்திரி ஏதோ எச்சரிக்கை விடுத்துள்ளார். ஆனால் அதற்குமேல் பெரிய குரல் எழுப்பி இந்தச் சட்டமே பேசுகிறது: ''எல்லா நிதிப் பொறுப்பிலிருந்தும் விடுபட வேண்டுமானால் குத்தகை பாக்கியை நீங்களே உண்டாக்கிக் கொள்ளுங்கள். பிறகு கடன் ரத்தாகும்போது பொறுப்பும் விடுபடும்'' என்கிறது.

தமிழ் நாட்டு அரசாங்கத்தின் கடன் நிவாரணச் சட்டமும், குத்தகை பாக்கி நிவாரணச் சட்டமும் சேர்ந்து ஏற்படுத்தும் நிகர விளைவு யாதெனில் இனி தனி மனிதர்கள் கடன் வசதி பெறுவது கணிசமாகக் குறைந்து

போகும். எந்த நோக்கத்துக்காக இருந்தாலும் சரி, கடன் கொடுக்க எவரும் அஞ்சுவர். கடன் வாங்குபவரின் நிதிப் பொறுப்பு எப்போது வேண்டுமாயினும் ரத்து செய்யப்படலாம் என்பதால் கடன் வழங்கத் தயங்குவார்கள். இது மக்களின் பொருளாதாரத்துக்கு நல்லதல்ல. முன்னேற்றத்துக்குக் கொடுக்கல் வாங்கல் அத்தியாவசியமாகும்.

### விதியை மீறி விளைவு உண்டாகுமா?

பொருளாதார விதிகள், ஸயன்ஸ் விதிகள் போன்ற இயற்கை விதிகள் எவையும் அரசாங்க உத்தரவுக்குக் கட்டுப்படமாட்டா. கான்யூட் என்பவன், தான் அரசன் என்பதால், கடல் அலையை நிற்கச் சொன்னதாக ஒரு கதை உண்டு. இன்றைய கான்யூட்களும் இயற்கை விதிக்கு உட்பட்டே தங்கள் சட்ட திட்டங்களைச் செய்ய வேண்டும். ஆட்சியிலிருப்பவர்கள் நாட்டில் சில விளைவுகளை ஏற்படுத்த விரும்பலாம். ஆனால் இயற்கை விதிகளின் மூலம்தான் அதற்கான காரியங்களை அவர்கள் செய்யலாமே தவிர, அவற்றை மீறிச் செய்ய முடியாது. விதிகளை மீறிப் புரட்சி செய்வதால் ஒரு நோக்கமும் நிறைவேறாது. பொருளாதார விதிகளை மாற்ற முடியாது என்ற உணர்வின்றி, தாங்கள் விரும்பும் சோஷலிஸ விளைவுக்காக, இவர்கள் செய்யும் காரியங்கள் செயற்கையான தட்டுப்பாட்டையும், கள்ளச் சந்தையையும் பெருக்கி, ஏழைகளைத் துன்புறுத்துவதிலும், மனச்சாட்சி அற்றவர்களைக் கொள்ளை லாபக்காரர்களாக்குவதிலுமே முடிகிறது.

# இஸ்மாயிலை இழந்தோம்!

பெருமகனாராகிய ''காய்தே மில்லத்'', முகமது இஸ்மாயில் அவர்களின் மறைவில் நமது அரசியல் வாழ்வு பேரிழப்பு அடைந்துள்ளது. ஆரம்பத்தில் காங்கிரஸ்காரராக இருந்து, பிற்பாடு முஸ்லிம் லீகில் சேர்ந்தார். தேசப் பிரிவினைக்குப் பின் அமைக்கப்பட்ட புதிய லீகின் தலைவராகக் கடந்த இருபத்தைந்தாண்டுகளாக இஸ்மாயில் அவர்களே இருந்தார். இந்தியாவிலுள்ள முஸ்லிம்கள் பாரதத்திடமே தாய்நாடென்று விசுவாசம் பூண வேண்டும் என்பதைத் தமது தலைமைத் தத்துவமாகக் கொண்டிருந்தார். அவர் உயர் பண்பாளர்; பெருந்தன்மை மிக்கவர்; களங்கம் அற்றவர்.

வியாபாரத் துறையில் சாமானிய வாழ்வைத் தொடங்கி, விடாமுயற்சியாலும் நேர்மையாலும் வளர்ச்சி கண்டார். வர்த்தகத் துறையில் பலரது வளர்ச்சிக்கும் உதவி தந்தார். பல கல்லூரிகளின் தோற்றுவாய்க்கு அவரே காரணஸ்தராவார். அவரது ஆத்ம சாந்திக்குப் பிரார்த்திக்கிறோம்.

இந்தப் பெரும் அரசியல்வாதியின் மறைவு குறித்து ராஜாஜி விடுத்துள்ள உருக்கமான செய்தி வருமாறு:

''முஸ்லிம் லீக் தலைவர் ஜனாப் முகமது இஸ்மாயிலின் மரணத்தில் என் நண்பர் ஒருவரை இழந்துவிட்டேன். ஹிந்து – முஸ்லிம் ஐக்கியம் குறித்து என்னுடைய கொள்கைகளை முற்றிலும் புரிந்து கொண்டவர் மறைந்துவிட்டார். மாசற்ற நடத்தை பொருந்திய அரசியல்வாதிகள் சிறுத்து வருகிற இக்காலத்தில், அச்சிறு கோஷ்டியில் இருந்த ஓர் அரசியல் தலைவரை நாடு இழந்துவிட்டது. ஜனாப் இஸ்மாயிலும் நானும் அபூர்வமாகவே சந்தித்துக் கொண்டோம். ஆயினும் இருவரும் ஒருவரையொருவர் புரிந்து கொண்டோம். அந்நிய விஷயங்களில் – குறிப்பாக கம்யூனிஸ ஆபத்தை உணருவதில் – ஒருமித்த கருத்து கொண்டிருந்தோம்.

''திண்டுக்கல்லில் பெரிய தோல் வியாபாரிகளான ஜமால் முகமது குடும்பத்துடன் திருமணத்தால் தொடர்பு கொண்டிருந்தார் ஜனாப் இஸ்மாயில். அவரது மாமனாராகிய ஜனாப் ஜமால் மகமதுவும், ஜனாப் ஜமாலின் தந்தையும் இஸ்லாம் மதத்தில் எவ்வளவு தீவிரப் பற்று கொண்டிருந்தார்களோ, அதே அளவு தேசப் பற்றும் கொண்டிருந்தனர். திண்டுக்கல்லின் ஹிந்து சமுதாயம் ஜமால் குடும்பத்துக்கு மிகுந்த மரியாதை காட்டியது. 1919ல் சென்னை நகரில் அந்தப் பெரிய தோல் வியாபாரியின் அலுவலகத்துக்கு ஜனாப் ஷவுகத் அலியும் நானும் சுதந்திர இயக்கத்துக்கு நன்கொடை கோரிச் சென்றபோது அவர் தாராளமாக ரூ.20,000 தந்தார். அப்போது இளைஞராயிருந்த ஜனாப் இஸ்மாயிலும் மாமனாரின் காரியாலயத்தில்தான் பணி செய்து கொண்டிருந்தார். அவரது மாமனார், ஹோம்–ரூல் இயக்கம், சுதந்திர இயக்கம் இரண்டுக்கும் இதயபூர்வமாக உதவி தந்தார்.

'' இந்தியாவிலிருந்து நல்ல மனிதர்களைக் கவர்ந்து செல்லக் காலன் ஆசைப்படுவதாகக் காண்கிறது.''



# அன்பார்ந்த நேயர்களுக்கு

வணக்கம்,

புத்தாண்டில் தங்களுக்கு எல்லா நலன்களும் குறையின்றிப் பெருக இறைவன் திருவருளை வேண்டிப் பிரார்த்திக்கிறேன்.

நமது எதிர்காலம் நம் தேசத்தின் எதிர்காலத்துடன் பின்னிப் பிணைந்திருக்கும் ஒன்று என்பதும் நாட்டின் எதிர்காலம் இன்றைய இளைஞர் சமுதாயத்தின் மனப்போக்கை அனுசரித்துத்தான் அமையும் என்பதும் ஒன்றையொன்று கொக்கி போட்டாற் போல் பிணைந்திருக்கும் விஷயங்கள்.

ஆகவே இன்றைய இளைஞர் சமுதாயத்தை நன்கு புரிந்துகொள்ள வேண்டிய அவசியமும் நமக்குண்டு. அதன் மனப் போக்கு சரியான திசையில் செல்லுமாறு வழிகாட்ட வேண்டிய கடமையும் நமக்குண்டு.

இன்றைய இளைஞர் சமுதாயம் என்றதுமே, தொய்ந்து தொங்கும் மீசை, குறுந்தாடி, நீண்ட கிருதா, பாகவதர் கிராப், ஸைகடெலிக் உடை போன்றவைதாம் சிலர் மனக்கண் முன் தோன்றி ஓரளவு அருவருப்புக்கூட அடைய வைக்கின்றன. அந்தச் சிலர், இவை இன்றைய வாலிப உள்ளங்களின் சுதந்திர மனப்பான்மையின் வெளிப்படையான சின்னங்களே என்பதை உணர்வதில்லை. அந்தச் சுதந்திர மனப்பான்மை மதித்துப் போற்றப்பட வேண்டிய ஒன்று. அதே சமயம் பொறுப்புணர்ச்சியும், தொன்றுதொட்டு வந்த தார்மிக - ஆத்மிக நெறிகளும் அந்தச் சுதந்திர மனப்பான்மையுடன் பின்னிப் பிணையுமாறு பெரியவர்கள்தான், அன்புவழி மூலம் பார்த்துக் கொள்ளவேண்டும்.

ஆனால் விசனிக்கத் தக்க விதத்தில், இன்று, இளைஞர் சமுதாயத்தைக் கவர்வதாக நினைத்துக் கொண்டு அவர்களை இழிவு படுத்துகிற விதமான கதைகளும் காட்சிகளும் மலிந்து விட்டன. இந்தப் போக்கு நமது தேசத்தின் எதிர்காலத்துக்கே ஆபத்தானது.

இத்தருணத்தில்தான் இளைஞர் சமூகத்துக்குத் தான் ஆற்றும் நற்பணியாகக் கல்கி ஸ்தாபனம் இளைஞர் மலர் வெளியிடுகிறது.

''இளைஞர் மலர்'' என்று இன்றைக்குத்தான் வெளியிடுகிறோம். ஆயின் கல்கியின் ஆரம்ப காலத்திலிருந்தே எந்தக் கதை, கட்டுரை அல்லது கவிதை பிரசுரித்தாலும் இளைஞர்கள் இதைப் படித்தால் பயனுறுவார்களா என்று பார்ப்பதோடு, இளைஞர்கள் இதைப் படித்தால் ஏதேனும் விரும்பத் தகாத விளைவு ஏற்படுமா என்றும் கருத்துடன் கவனித்து வந்திருக்கிறோம். துணுக்குகள் பிரசுரிக்கும் போதுகூட இவ் விஷயத்தில் கவனமாயிருந்திருக்கிறோம். அப்படிப் பார்க்கும்போது ஒவ்வொரு கல்கி இதழுமே ஓர் இளைஞர் மலர்தான்!

உலகத் தலைவராம் ராஜாஜியை நமக்கே உரிய அரும் பெரும் தலைவராகவும் அடைந்துள்ள நாம் எப்பேர்ப்பட்ட பாக்கியசாலிகள்! தொண்ணூற்று மூன்று வயது இளைஞரான அவர் வாரா வாரம் கல்கியில் எழுதி வருவதெல்லாம் நம்மையொத்த பிராயத்தினருக்காகவா? இன்றைய இளைஞர்கள் எதிர்காலத்தில் சுபிட்சம் மிக்க நாட்டில் தலை நிமிர்ந்து பொறுப்புணர்ச்சி மிக்க சுதந்திரப் பிரஜைகளாக நடமாட வேண்டும் என்ற பெரு நோக்குடன்தானே அவர் அல்லும் பகலும் அனவரதமும் பாடுபடுகிறார்?

ஸெக்ஸ், ஸினிமா, ஸிகரெட் என்ற மூன்றும் கல்கி பத்திரிகையை நெருங்க வேண்டாம் என்று அன்புக் கட்டளை விட்டார் ராஜாஜி. விற்பனை எண்ணிக்கை ஒன்றை மட்டுமே நோக்கமாகக் கொள்ளாமல், விளம்பரங்களை மறுதலிப்பதில் ஏற்படும் நஷ்டத்தையும் பொருட்படுத்தாமல் நாங்கள் அருமைத் தலைவரின் ஆக்ஞையைச் சிரமேற்கொண்டு பல ஆண்டுகள் ஆகிவிட்டன. எதற்காக இந்தக் கட்டுப்பாடு? இளைஞர் சமுதாயத்தின் நலனைக் கருதியே அல்லவா?

காஞ்சி ஆசார்ய சுவாமிகள் இளைஞர்களுக்கென்றே கூறியுள்ள பொன்மொழிகள் இந்த மலருக்குப் பெரு மதிப்பு அளிக்கின்றன. ஆனால் கல்கியில் இடம் பெறும் அவரது எந்தப் பொன்மொழிகள் இளைஞருக்காக இல்லை?

இந்த இளைஞர் மலரில் பல விசேஷ அம்சங்கள் இடம் பெற்றிருக்கின்றன. சில புதிய தொடர் அம்சங்களும் ஆரம்பமாகின்றன. பட்டியல் போட்டு விளக்குவானேன்? படித்தும் பார்த்தும் தெரிந்து கொள்ளப் போகிறீர்களே! எல்லாமே பயன் மிக்கவை; மிகவும் சுவையுள்ளவை. இளைஞர்கள் படித்து இன்புறலாம் என்பதால் பெரியவர்களுக்கு ரசிக்காது என்பதல்ல. இன்றைய இளைஞர் சமுதாயத்தைப் புரிந்து கொள்ளவும் தங்களது இளமைக் காலத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கவும் ஒவ்வொரு அம்சமும் உதவும்.

கல்கி இளைஞர் மலர், எதிர்ப்படும் பிரச்னைகளை ஒதுக்கிவிட்டு, கற்பனை உலகில் சஞ்சரிக்க வைத்து மனமகிழ்ச்சி ஏற்படுத்தும் மலரல்ல. யதார்த்த நிலையை உணர்ந்து, எதிர்ப்புகளைச் சமாளித்து, சுதந்திர உணர்வுடன் வெற்றி நடை போட ஓரளவேனும் இன்றைய இளைஞர்களுக்கு இது துணை புரியுமானால் எங்கள் நோக்கம் ஈடேறியதாகும். — ஆசிரியர்

# இளைஞர் கடமை

ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சங்கராசாரிய சுவாமிகள்





பிறருக்கு உபகாரம் செய்வதற்கே நமது சரீரம் ஏற்பட்டிருக்கிறது என்பது ஆன்றோர் மொழி. 'பரோபகாரார்த்தம் இதம் சரீரம்' என்பார்கள். தேகத்தில் நல்ல தெம்பு இருக்கிறபோதே, பிறருக்காக நன்றாக உழைக்க உடலில் சக்தி இருக்கிறபோதே, யுவர்கள் சேவை நெறியில் ஈடுபட வேண்டும். பிறருக்குச் சேவை செய்வதற்காகவே தேக பலத்தை நன்கு காத்துக் கொள்ள வேண்டும். தேக பலத்தை விட ஒழுக்க பலம் முக்கியம். நமது மதம் கூறுகிற சாசுவத தர்ம நெறியின்படி சுத்தமான வாழ்வு வாழ வேண்டும். இப்படி யெல்லாம் இருந்தால்தான் பிறருக்கு நல்ல முறையில் சேவை செய்ய முடியும்.

சமூக சேவை உண்மையாக இருக்க வேண்டுமாகில் சேவை செய்கிறவர்களுக்கு தர்மத்திலும், சத்தியத்திலும் தளராத பிடிப்பு இருக்க வேண்டும். அவர்களுக்குப் பயம் என்பதே கூடாது. பயமற்ற நிலை வேறு; ஹிம்சை வழியில் நடப்பது வேறு; இரண்டையும் குழப்பிக் கொள்ளக் கூடாது. யுவர்களுக்கெல்லாம் உதாரணமாக இருப்பவர் ஆஞ்சநேய ஸ்வாமி. அவருக்கு இருந்த பலம் மிகப் பெரியது. இருந்தாலும் சாந்தமாக இருந்தார். அவருடைய புத்தி பலமும் பெரிது. ஆயினும் பக்தியில் தோய்ந்து அடக்கத்துடன், விநயமே ஸ்வரூபமாகச் சேவை செய்து கொண்டிருந்தார். பயமென்பதே அவருக்கு இல்லை. ஆனாலும் ஹிம்சை வழியில் அவர் சென்றதில்லை. சொந்த நலனுக்காகப் பலத்தைப் பிரயோஜனப் படுத்தவில்லை. துர்பலருக்குக் கொடியவரால் கஷ்டம் ஏற்பட்டால் தம் நலனையும் பொருட்படுத்தாமல் பலவீனரை ரட்சிப்பதில் அஞ்சா நெஞ்சராகச் சேவை செய்தார். சிவாஜியும் இப்படிப்பட்ட ஓர் உதாரண புருஷர். தேக பலம், அஹிம்சை, பயமற்ற நிலை இவற்றோடு சொந்தக் கஷ்டங்களைப் பாராட்டாமல் பிறருக்கு உதவும் பான்மையும் சேர்ந்தால் அது மிகப் பெரிய சீலமாகும். இதற்கே 'க்ஷத்ர தர்மம்' என்று முன்னாளில் பெயர் சொல்லப்பட்டது. 'க்ஷதாத் கில த்ராயதே இதி க்ஷத்ரம்' — '(பிறரைத்) தீமையிலிருந்து காப்பதே க்ஷத்ரம்' என்பது இதன் பொருள். 'க்ஷத்திரியர்' என்ற பெயர் இதிலிருந்துதான் பிறந்தது. இப்போது நம் நாட்டு யுவர்கள் இந்த க்ஷத்ர தர்மத்தை மேற்கொள்ள நிரம்ப அவசியமிருக்கிறது. பலிஷ்டர்களைக் கண்டு பயப்படக் கூடாது. பலவீனவர்களை பயமுறுத்தவும் கூடாது. பலவீனர்களைப் பலவான் கொடுமைப்படுத்தாதபடி காப்பாற்ற வேண்டும். இதுவே சேவையில் ஈடுபட்ட யுவர்களின் தர்மம்.

துரதிருஷ்ட வசமாக இதற்கு நேர்மாறான போக்கைக் காணும்போது வருத்தமாக இருக்கிறது. பலவீனர்களைப் பயமுறுத்தி ஹிம்சை முறையால் பணிய வைக்கிற போக்கு நல்லதல்ல. இந்த மாதிரி செய்கிற ஸ்டிரைக், உண்ணாவிரதம், கொடும்பாவி கொளுத்தல், கிளர்ச்சி இவையெல்லாம் உண்மையில் இவற்றைச் செய்கிறவர்களின் பலவீனத்தைத்தான் காட்டுகிறது. தங்களுடைய லட்சியத்திலுள்ள சத்தியத்தின் சக்தியில் நம்பிக்கை இல்லாததால்தான் இத்தகைய நடவடிக்கைகளை எடுக்கிறார்கள். பலம் படைத்தவர்கள் பலத்தைத் துஷ்பிரயோகம் செய்யும்போது அதைக் கண்டு பயப்படுவதும், அதேபோல் தங்கள் பலத்தைத் துஷ்பிரயோகம் செய்து பலவீனர்களைப் பயமுறுத்துவதும் தேசத்துக்கு நல்லதல்ல. மக்களின் இந்த பலவீனம் சர்க்காரிலும் தானே பிரதிபலிக்கிறது. மறுபடி நாம் இந்த தேசத்தில் பயமில்லாத பிரஜைகளாகத் தலையை நிமிர்த்தி நடக்க வேண்டுமானால் க்ஷத்ர தர்மத்தை விருத்தி செய்ய வேண்டும். தனி மனிதர்கள் உறுதியும் ஆத்ம பலமும் கொண்டிருப்பது, அவர்கள் கட்டுப்பாட்டுடன் ஒன்றுகூடி ஐக்கியமாக உழைப்பது, தீமையையும் அடக்குமுறையையும் கண்டு அஞ்சாத நெஞ்சுறுதியுடன் போராடுவது — இவையெல்லாம் இந்த தர்மத்தில் அடக்கம். லோக க்ஷேமம் ஒன்றே லட்சியமாகக் கொண்டு இந்த தர்மத்தை நடத்திக் காட்டினால் நாட்டின் ஒழுக்கம் மிக உயர்ந்த நிலை அடையும். அரசாங்கத்தின் தரமும் தானாகவே உயரும்.



விக்கோ டெர்மரிக் வானிஷிங் கிரீமைத் தடவியவுடன் நூறு சதவிகிதமும் இயற்கையாக எண்ணெய்ப்பசை மாறுகிறது. இதில் மஞ்சள்'சத்து சுத்தமான சந்தன எண்ணெயுடன் கலக்கப்பட்டிருக்கிறது. பண்டைக் காலமுதலாகவே கிருமிநாசினியும், துலர்ஜி அழிப்பு சந்தனமுமான மஞ்சள் எழிலை ஒளிரச் செய்ய உபயோகிக்கப்பட்டுவருகிறது. அது தேவையற்ற பொடி ரோமம் வளர்வதைத் தடை செய்கிறது. மஞ்சளின் இத்தன்மைகள் பண்டையகாலம் முதல் அறியப்பட்டவையே !

கிருமி நாசினியான இந்தக்கிரீம் முக க்ஷவரத்திற்குப் பின் ஏற்படும் புண், வெட்டுக்காயங்களைக் குணப்படுத்துகிறது. முகச் சருமத்தில் சோப்பினால் ஏற்படும் கெட்ட விளைவுகளை அகற்ற உதவுகிறது.

## எழிலுக்கு இயற்கையானவழி...

# விக்கோ டெர்மரிக்

## வானிஷிங் கிரீம்







மேனி எழிலை அதிகப்படுத்திப் பாதுகாக்க மென்மையும் குளுமையும் கொண்ட விக்கோ ஸ்னோவும் இருக்கிறது. இதில் ''விட்ச்ஹேஸல்'' (Witch Hazel) என்ற புகழ் பெற்ற சருமத்தைலம் அடங்கியுள்ளது.



## விக்கோ லாபரெட்டரீஸ்

தாதர், பம்பாய் 14

TML

# அலை ஓசை

அமரர் கல்கி

## 26. மலர் பொழிந்தது!

அன்று இரவு மாப்பிள்ளை சம்பந்தி வகையராவுக்காகச் சாப்பாடு கொண்டு வைத்துவிட்டு வந்த பரிசாரகன் சங்கரனைப் பார்த்துச் சரஸ்வதி அம்மாள், ''ஏண்டா, சங்கரா! அவர்கள் என்னடா பேசிக் கொண்டிருக்கிறார்கள்? ஏதாவது உன் செவிட்டுக் காதில் விழுந்ததா?'' என்று கேட்டாள்.

''காதில் ஒன்றும் விழவில்லை, அம்மா! விழுந்தவரையில் அவ்வளவு சுவாரசியமாக இல்லை'' என்றான் சங்கரன்.

''என்னடா, உளறுகிறாய்? காதில் ஒன்றும் விழவில்லை, ஆனால், சுவாரசியமாயில்லை என்றால்?''

''ஏதோ சில வார்த்தை அரைகுறையாகக் காதில் விழுந்தது. பணங்காசைப் பற்றித்தான் பேச்சு. பதினாயிரமாம்! பதினையாயிரமாம்! இவ்வளவு படித்தவர்கள் — பெரிய மனிதர்களே இப்படி இருந்தால்...... ''

''அதனால் என்னடா மோசம்? பிள்ளையைப் பெற்றவர்கள் அப்படித்தான் பேசுவார்கள். நாளைக்கு நம் வீட்டுப் பிள்ளைகளுக்குக் கல்யாணம் என்றால் நாம் மட்டும் பணங்காசு இல்லாமல் பண்ணிக் கொண்டு விடுவோமா? அதிலேயும் அந்தப் பிராமணர் கொஞ்சம் கடிசல் என்று கேள்வி. அப்படியெல்லாம் வாய் கூசாமல் ரொம்பக் கேட்கக் கூடாது என்று பிள்ளைக்குத் தாயார் ஒருவேளை சொல்லிக் கொண்டிருந்தாளோ என்னவோ? என்னைக் கேட்டால் பேச வேண்டியதையெல்லாம் இப்போதே பேசிக் கரார் செய்து கொண்டுவிடுவதுதான் நல்லது என்பேன். அப்புறம் புகாருக்கு இடம் இருக்கக்கூடாது, பார்!''

இவ்விதம் சரஸ்வதி அம்மாள் வாய் ஓயாமல் பேசினாள். எனினும் அவளுடைய மனத்தில் இருந்த பரபரப்பு அடங்கவில்லை. சீதாவைக் கூப்பிட்டு, ''குழந்தை; அவர்கள் இறங்கியிருக்கிற வீட்டுக்குப் போய் 'வேண்டியதெல்லாம் வந்து விட்டதா? இன்னும் ஏதாவது வேண்டுமா?' என்று சம்பந்தியம்மாளை விசாரித்துவிட்டு வருகிறாயா? அதோடு சீமாச்சு மாமாவை இங்கே உடனே வரச் சொல்லு!'' என்றாள்.

சீதா அவர்கள் இறங்கியிருந்த வீட்டுக்குப் புறப்பட்டுச் சென்றபோது வழியில் சீமாச்சுவய்யர் வந்து கொண்டிருந்தார். ஆயினும் அவள் திரும்பாமல் மேலே சென்றாள். வீட்டின் முன்புறத்து ஹாலில் சௌந்தரராகவன் சாய்மான நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்தான். சீதாவைப் பார்த்ததும் அவன் நிமிர்ந்து உட்கார்ந்து, ''நீ மட்டும் வந்தாயா? உன் தோழியையும் அழைத்துக் கொண்டு வந்தாயா?'' என்று கேட்டான். சீதா சிறிது தயங்கிவிட்டுப் பிறகு, ''நான் மட்டுந்தான் வந்தேன்! நீங்கள்தான் லலிதாவைக் காபராப் படுத்தி விட்டீர்களே?'' என்று சொன்னாள்.

''அவள் இன்னும் அழுது கொண்டுதான் இருக்கிறாளா? அல்லது அழுகையை

நிறுத்தியாச்சா?'' என்று செளந்தர ராகவன் கேட்டான்.

''அழவும் இல்லை, ஒன்றும் இல்லை. எதற்காக அழ வேண்டும்?''

''அவளைப் பாடச் சொன்னதற்குப் பாடத்தான் இல்லையே? ஒரு வேளை அழ ஆரம்பித்து விட்டாளோ என்று பார்த்தேன். போகட்டும்; நீயாவது இந்த மட்டும் வாயைத் திறந்து பேசுகிறயே? சந்தோஷம். அவளைப் போல் நீயும் பேசாமடந்தையா யிருந்தால் ஆபத்துத்தான்'' என்றான்.

''என்னையும் யாராவது பெண் பார்ப்பதற்கென்று வந்திருந்தால் நானும் பேசாமடந்தையாகத்தான் இருந்திருப்பேன்!'' என்று சொல்லி விட்டு, இதற்கு மேல் அங்கே நிற்கக் கூடாது என்று எண்ணிச் சீதா உள்ளே சென்றாள். அவளுடைய நெஞ்சு எக்காரணத்தினாலோ படபடவென்று அடித்துக் கொண்டது.

காமாட்சி அம்மாளும் சாஸ்திரிகளும் கூடத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தவர்கள், சீதாவைப் பார்த்ததும் பேச்சை நிறுத்தினார்கள்.

''குழந்தை! எங்கேயம்மா வந்தாய்?'' என்று காமாட்சி கேட்டாள்.

''சாப்பாடு எல்லாம் சரியாய் வந்ததா என்று மாமி பார்த்துவிட்டு வரச் சொன்னாள்!'' என்றாள் சீதா.

''எல்லாம் சரியாய் வந்து சேர்ந்தது என்று சொல்லு. அவ்வளவுதானே?''

''அவ்வளவுதான், மாமி! லலிதாவைப் பற்றி ஒரு வார்த்தை நானே சொல்ல வேண்டுமென்று வந்தேன். இன்றைக்கு ஏதோ அவள் பேசாமல் நின்றாளே என்று எண்ணிக் கொள்ளாதீர்கள். எங்க லலிதாவைப் போல் இந்தப் பூலோகத்திலேயே சமர்த்துக் கிடையாது. கலகலவென்று பேசிக் கொண்டிருப்பாள். பாட்டு என்னைவிட எவ்வளவோ நன்றாய்ப் பாடுவாள். குரல், குயிலின் குரல்தான்! இன்றைக்கு என்னமோ கல்யாணத்துக்குப் பார்ப்பதற்கு என்று புது மனுஷர்கள் வந்ததும் கொஞ்சம் பயந்து போய்விட்டாள். அதைப் பற்றி நீங்கள் ஒன்றும் நினைத்துக் கொள்ளக் கூடாது!''

''இந்தப் பெண் வெகு பொல்லாத பெண்ணாயிருக்கிறாளே?'' என்றார் பத்மலோசன சாஸ்திரிகள்.

''அதனால்தான் உங்களுக்குச் சந்தேகம் வந்துவிட்டது போலிருக்கிறது;— இவள்தான் ஒருவேளை கல்யாணப் பெண்ணோ என்று!''

''அதனால்தான் என்ன; இவளுக்கும் ஒரு நாள் கல்யாணம் நடக்க வேண்டியதுதானே? ஏனம்மா, உன் தகப்பனருக்கு பம்பாயில் என்ன உத்தியோகம்?'' என்று சாஸ்திரிகள் கேட்டார்.



''எங்க அப்பாவுக்கு ரயில்வேயில் உத்தியோகம், மாமா!''

''சம்பளம் என்னவோ?''

''சம்பளம் மாதம் முந்நூறு ரூபாய். ஆனால் எவ்வளவு சம்பளமா யிருந்தால் என்ன? எல்லாம் செலவுக்குத்தான் சரியா யிருக்கிறது. என்னைப் பார்த்தாலே தெரிந்து விடுமே?''

''லலிதாவைப் போல் நகை நட்டுப் போட்டுக் கொள்ளவில்லை என்று அவ்விதம் சொல்கிறாயா? ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தியின் அருள் இருந்தால் நீயும் ஒரு நாளைக்கு வேண்டிய நகை நட்டுக்கள் பூட்டிக் கொள்வாய்!'' என்றாள் காமாட்சி அம்மாள்.

''இராமச்சந்திர மூர்த்தியின் அருள் கேவலம் நகை நட்டுக்குத்தானா வேண்டும்?'' என்றார் சாஸ்திரிகள்.

''நகை நட்டுக்குந்தான் வேண்டும்; மற்ற எல்லாவற்றுக்கும்தான் வேண்டும். அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது! இருக்கட்டும், சீதா! உன் கல்யாணத்தைப் பற்றி உன் அப்பா ஒன்றும் ஏற்பாடு செய்யவில்லையா? வரன் கிரன் பார்க்கவில்லையா?''

''மாமி! எங்க அப்பா 'எர்லி மாரியேஜ்' கூடாது என்கிற கட்சியைச் சேர்ந்தவர். நானும் என் அப்பா கட்சிதான். ஆனால் அம்மா மட்டும் ஓயாமல் வரன் வரன் என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள். உங்களிடத்தில்கூட நாளைக்கு ஏதாவது சொன்னாலும் சொல்லுவாள். நீங்கள் கவனிக்க வேண்டாம்.''

''ஏன், அம்மா அப்படிச் சொல்கிறாய்? காலா காலத்தில் உனக்கும் கல்யாணம் நடக்க வேண்டியதுதானே?'' என்றாள் காமாட்சி.

''நடக்க வேண்டியதுதான். ஆனால் ஐயாயிரத்தைக் கொண்டு வா, பத்தாயிரத்தைக் கொண்டு வா என்று கேட்கிறார்களே, அதற்கு எங்க அப்பா எங்கே போவார்? அதனால்தான் நான் கல்யா

"லலிதா மட்டும் என்ன? அப்பா அம்மா கிழித்த கோட்டைத் தாண்ட மாட்டாள், மாமா! நாளைக்கு உங்கள் பிள்ளைக்கு வாழ்க்கைப் பட்டு விட்டால் உங்களிடத்திலும் அப்படியே நடந்து கொள்வாள். நீங்கள் புறப்பட்டு வந்தபிறகு நான் அவளிடம் என்ன சொன்னேன் தெரியுமா? 'லலிதா! கல்யாணம் ஆன பிற்பாடு மாமனாரும் மாமியாரும்தான் அப்பா அம்மா என்று நினைத்துக் கொள். சொந்தத் தாய் தகப்பனார் கூட அப்புறம்தான்!' என்று சொன்னேன். லலிதாவும் 'அதற்கென்னடி சந்தேகம்?' என்றாள். கேட்டீர்களா, மாமி! இந்தக் காலத்து மாட்டுப் பெண்களைப் போல் மட்டு மரியாதை இல்லாமல், தாட் பூட்டணமே பண்ணிக் கொள்வதில்லை என்று வைத்திருக்கிறேன்."

"பெண்ணாகட்டும்; பிள்ளையாகட்டும் இப்படியல்லவா பெற்றவர்கள் விஷயத்தில் பய பக்தியோடு இருக்க வேண்டும்!" என்றார் சாஸ்திரிகள்.

என்று லலிதா நடந்து கொள்ள மாட்டாள். நான் ஏதோ சிறு பெண் சொல்கிறேனே என்று வித்தியாசமாய் நினைத்துக்கொள்ளாதீர்கள். எங்கள் லலிதாவைக் கல்யாணம் செய்து கொள்ள உங்கள் பிள்ளை கொடுத்து வைத்திருக்க வேண்டும். உங்கள் பிள்ளையைக் கல்யாணம் செய்து கொள்ள லலிதாவும் கொடுத்து வைத்தவள்தான்! சந்தேகமில்லை.''

''இந்தப் பெண் அபார சமர்த்தாயிருக்கிறாளே!'' என்றார் சாஸ்திரிகள்.

இதைக் கேட்டுச் சீதாவின் உள்ளம் குதூகலம் அடைந்தது. அதற்கு மேல் அங்கே பேசிக் கொண்டு நிற்பது நியாயமில்லை என்று உணர்ந்தாள். ''மாமி! நான் போய் வருகிறேன். ஏதாவது தப்பாய்ச் சொல்லி யிருந்தால் மன்னித்துக் கொள்ளுங்கள்!'' என்று கூறி விட்டுப் புறப்பட்டாள்.

போகும்போது வழியில் முன் இருந்த இடத்திலேயே இருந்த ராகவன், ''நீ அம்மாவிடம் சொல்லிக் கொண்டிருந்ததை யெல்லாம் கேட்டேன். பத்தாயிரம் ரூபாய் கொடுத்து வக்கீல் வைத்திருந்தால்கூட நீ உன் தோழியின் கட்சியைப் பேசியது போல் யாரும் பேசியிருக்க மாட்டார்கள்! உன்னைச் சிநேகிதியாகப் பெறுவதற்கு உன் தோழியும் ரொம்பக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்!'' என்றான்.

''தாங்க்ஸ்''-என்றாள் சீதா.

''எனக்கு எதற்கு தாங்க்ஸ்? நான் அல்லவா உனக்குத் தாங்க்ஸ் சொல்ல வேண்டும்?''

''நீங்கள் இப்போது தாங்க்ஸ் கொடுத்தால் நான் பெற்றுக் கொள்ள மாட்டேன். நாளைக்குக் கல்யாணம் நிச்சயம் செய்து விட்டுக் கிளம்பினால் அப்போது பெற்றுக் கொள்வேன்.''

''கல்யாணம் நிச்சயம் செய்யவேண்டியதுதான். ஆனால் அதற்கு இரண்டு கட்சியின் சம்மதம் அல்லவா வேண்டியதாயிருக்கிறது?'' என்று ராகவன் கூறி விட்டுப் புன்னகை புரிந்தான். அதற்குப் பிரதியாகச் சீதாவும் புன்னகை செய்துவிட்டுப் புறப்பட்டாள். சௌந்தரராகவனுடைய வார்த்தைக்கும் புன்சிரிப்புக்கும் பொருள் என்ன என்பது அவள் மனத்துக்குத் தெளிவாகவில்லை. ஆனால் அவளுடைய அந்தராத்மாவுக்கு ஒருவேளை அவற்றின் பொருள் தெரிந்திருக்கலாம்.

ஒரு விஷயம் நிச்சயம். கிட்டாவய்யரின் வீடு நோக்கிச் சீதா சென்று கொண்டிருந்தபோது வான வெளியில் தேவர்களும் கந்தர்வர்களும் கின்னரர்களும் நின்று அவள்மீது மணம் மிகுந்த நறுமலர்களைத் தூவினார்கள். தேவலோகத்து இசைக் கருவிகளை இசைத்துக் கொண்டு அமர கன்னியர் இன்ப கீதங்களைப் பாடினார்கள். அந்தக் கீதங்களுக்கு இணங்க ஆனந்த நடனமாடிக் கொண்டே சீதா அவ்வீதியில் நடந்தாள். தனக்கு என்ன நேர்ந்து விட்டது, ஏன் தன் உள்ளம் இவ்வளவு உற்சாகம் அடைந்திருக்கிறது, இதுநாள்வரையில் அநுபவித்தறியாத இன்பம் பொங்கி வருகிறதே, அந்த மகிழ்ச்சியின் மூலாதாரம் எங்கே?—என்றெல்லாம் அவள் ஆராய்ந்து சிந்தனை செய்யவில்லை. உள்ளக் களிப்பும் உடம்பின் பூரிப்பும் ஒன்றாகி நினைவு அழிந்து மெய்மறந்த நிலையில் நடந்து சென்றாள்.

வீட்டுக்குப் போய்ச் சேர்ந்ததும் ஒருவாறு பிரமை நீங்கிற்று. சரஸ்வதி அம்மாளிடம் நேரே சென்று ''மாமி! நீங்கள் கவலைப்பட வேண்டாம். லலிதாவைப் பற்றி நான் புகழ்ந்த புகழ்ச்சியில் சம்பந்திகள் அப்படியே சொக்கிப் போய் விட்டார்கள். மாப்பிள்ளைகூடக் கேட்டுக் கொண்டுதான் இருந்தார். நாளைக்கு அவசியம் கல்யாணம் நிச்சயம் செய்து கொண்டுதான் போவார்கள்'' என்றாள்.

சரஸ்வதி அம்மாள் உள்ளம் நிறைந்த நன்றி உணர்ச்சியோடு, ''உன்னுடைய சமர்த்துக்கு மற்றவர்கள் திருடப் போக வேண்டியதுதான்! வயதானவர்களுக்கெல்லாம் உன்னுடைய சமர்த்தில் ஒரு பங்கு இருக்கக் கூடாதா? வந்த மனுஷர்களை யாராவது போய் எட்டிப் பார்க்கிறார்களா?, பார்! எல்லாரும் இந்த வீட்டையே சுற்றிக் கொண்டிருக்கிறார்கள். சீமாச்சு மாமா என்ன சொன்னார் தெரியுமா? இந்த வரன் நிச்சயம் ஆகும் என்று அவருக்குத் தோன்றவில்லையாம்! இவரை யார் கேட்டார்கள்? ஏதாவது 'அபிஷ்டு' என்று சொல்லி வைப்பதே சிலருக்குத் தொழில்!'' என்று கூறினாள்.

## 27. இடி விழுந்தது!

கிட்டாவய்யர் வீட்டு வாசலில் போட்டிருந்த கோடைப் பந்தலில் ராஜம்பேட்டைத் திண்ணை மகாசபை கூடியிருந்தது. சிலர் பந்தலின் கீழே பெஞ்சுகளிலும் சிலர் திண்ணை ஓரத்திலும் உட்கார்ந்திருந்தார்கள்.

உள்ளேயிருந்து வந்த கிட்டாவய்யரைப் பார்த்துப் பஞ்சு அய்யர், ''கேட்டீர்களா! ஐயர்வாள்! உங்களுடைய பையன் சூரியா ஒரே போடாய்ப் போடு

# எண்ணிய வண்ணமே!

**உங்களைப் போன்றவர்களின்
ஆதரவில் அனைத்திலும்
விரைவாக விற்பனையாகும்
தூள் தேயிலையாக ஆகிவிட்டது!**

ரூபி டஸ்ட் நிறைந்த ருசி; நல்ல நிறம்;
நொடியில் தயாராகும் பானம்.
வேறெந்தத் தூள் தேயிலையையும் விட
அதிகக் கோப்பைகள் அளிப்பது கூட.

# லிப்டன் ரூபி டஸ்ட்

இந்தியாவில்
வெகு விரைவில்
விற்பனையாகும்
தூள் தேயிலை





LRDC-7/72 TAM



# ஊழியர்—தொழிலின் ஜீவநாடி



இயந்திரங்கள் மற்றும் மூலப் பொருள்களை விட ஊழியர்கள்—அதாவது, அவரவர்கள் தொழிலை கற்றறிந்து நன்கு பயிற்சி பெற்றவர்கள் இன்றியமையாதவர்கள் ஆவார்கள். 1921ல் ஜம்ஷெட்பூர் டெக்னிகல் இன்ஸ்டிட்யூட் நிறுவப்பட்டது முதல், கடந்த 50 வருடங்களாக இந்த உண்மை ஜம்ஷெட்பூரில் வலியுறுத்தப்பட்டு வந்திருக்கிறது. வருடம் 29 லட்ச ரூபாய் செலவுத் திட்டப்படி இயங்கி வரும் இந்த இன்ஸ்டிட்யூட் எங்கள் பணித்துறைத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொண்டு வருகிறது. மானேஜிங் டைரெக்டர் முதல், பள்ளி இறுதிப் படிப்பு முடிந்து பயிற்சி முடித்த முற்றும் புதிய ஊழியர் வரை இங்கு உருவாகின்றனர். பற்பல வருடங்களாக உருப்பெற்றிருக்கும் டெக்னீஷியன்களின் எண்ணிக்கை 19000. தவிர, சுமார் 2000 எஞ்ஜினீயர்கள் மற்றும் இயக்குனர்களுக்குப் பயிற்சி அளித்து கவர்மெண்ட் ஸ்டீல் ப்ளாண்ட்களுக்கும் சேவை புரிந்திருக்கிறது.

**டாடா ஸ்டீல்**

எங்கள் பலம் உறுதிமிக்க எஃகில் மட்டுமல்ல.
திறமைமிக்க ஊழியர்களிலும் உள்ளது.

கிறானே? நாலு நாள் கல்யாணம் நடத்துகிறதும் கல்யாணத்துக்காக ஏகப்பட்ட ரூபாய் செலவு பண்ணுகிறதும் ரொம்பப் பிசகாம். வரதட்சணை கேட்கிறது, வாங்குகிறது எல்லாம் மூடத்தனமாம்!'' என்றார்.

''அவன் சொல்வதிலே என்ன அதிசயம்? இந்தக் காலத்திலே எல்லாருந்தான் அப்படிச் சொல்லுகிறார்கள். ஏழைகள் கஷ்டப்படுகிற போது வீண் ஆடம்பரத்திலே பணம் செலவழிக்கிறது நியாயமல்லவென்று பேசுகிறார்கள்!'' என்று கிட்டாவய்யர் தம்முடைய குமாரனைத் தாங்கிப் பேசினார்.

'' அதோடு நிறுத்தினால் பரவாயில்லையே ? பணத்தை வீணாகச் செலவழிக்கக் கூடாது, செட்டாயிருக்க வேண்டும் என்று சொன்னால் சொல்லட்டும் ! அப்பா பாடு, பிள்ளை பாடு என்று விட்டு விடலாம். சூரியா பெரிய சோஷலிஸ்ட் மாதிரின்னா பேசறான்? குடியானவர்கள் நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபடுகிறார்களாம். அவர்கள் உழைப்பினால் வருகிற பணத்தை நாம் ஆடம்பரத்திலே செலவழிக்கிறோமாம். 'இதெல்லாம் ரொம்ப நாள் நடக்காது !' என்று எச்சரிக்கை வேறே பண்ணுகிறான் !''

''பின்னே என்னங்காணும் ! இப்படியே சதுகோடி வருஷம் நடக்கும் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீரா? உலகம் போகிற போக்கு உமக்குத் தெரியவில்லை. 'உழுகிறவனுக்குத்தான் நிலம்' என்று பிரசாரம் நடந்து வருகிறது. நீங்கள் கிணற்றுத் தவளைகளாய் இருக்கிறீர்கள் !'' என்றார் சிமாச்சுவய்யர்.

''அப்பா ! சிமாச்சு ! நீயும் அவன் கட்சியில் சேர்ந்து விட்டாயா? இன்றைக்கு, 'உழுகிறவனுக்கு நிலம்' என்பார்கள். நாளைக்கு, 'அறுக்கி வனுக்கு நெல்லு!'' என்பார்கள். அப்புறம், 'கொத்தனுக்கு வீடு!' 'வண்ணானுக்கு வேஷ்டி' 'டிரைவருக்கு மோட்டார்' 'டாக்டருக்கு மருந்து', 'போர்ட்டருக்கு ரயில் வண்டி' என்றெல்லாம் ஏற்படும். ' சமைக்கிறவனுக்குததான் சாதம் ' என்று சொன்னாலும் சொல்வார்கள். விநாசகாலே விபரீத புத்தி !'' என்றார் அப்பாத்துரை சாஸ்திரிகள்.

''பட்டாமணியத்துக்கு வரிப் பணம் என்றும் ஏற்பட்டு விட்டால் எனக்கு ரொம்பச் சௌகரியமாயிருக்கும், சாஸ்திரிகளே! இதிலேயெல்லாம் ஆத்திரப்பட்டு என்ன பிரயோசனம்? எது எது எப்போது நடக்க வேண்டுமோ அது நடந்துதானே தீரும்? காலத்துக்குத் தகுந்தாற்போல் நாமும் மாறிக் கொள்ள வேண்டியதுதானே!'' என்றார் கிட்டாவய்யர்.

'' மாறிக் கொள்கிறோம், ஐயர்வாள் ! மாறிக் கொள்கிறோம்! சரியான காரியமாயிருந்தால் காலத்தையொட்டி மாற வேண்டியதுதான். முன்னேயெல்லாம் சிராத்தம் என்றால் மத்தியானம் மணி மூன்று ஆகும். இப்போது மணி பத்துக்கெல்லாம் பிராமணாளுக்கு இலை போட வேணும் என்கிறார்கள். அதை ஆட்சேபிக்கிறோமா ? காப்பி சாப்பிட்டுவிட்டுத்தான் சிராத்தம் பண்ணுவேன் என்கிறான் கிரகஸ்தன். காலத்துக்கேற்ப இந்த மாறுதலையெல்லாம் ஒப்புக் கொள்ள வேண்டியதுதான். ஆனால் 'உழுகிறவனுக்குத்தான் நிலம்' என்கிற கொள்கை உமக்கு ஏற்கச் சரியாயிருக்கிறதா என்று கேட்கிறேன்'' என்றார் சாஸ்திரிகள்.

'' சரியோ, இல்லையோ, உலகம் ஒப்புக் கொண்டால் நாம் மட்டும் தடை செய்து என்ன பிரயோஜனம்!'' என்றார் கிட்டாவய்யர்.

''உலகந்தான் ஒப்புக் கொள்ளட்டும்; பிரம்மதேவனே ஒப்புக் கொள்ளட்டும். சரியில்லாததை எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? காந்தி மகாத்மா இதைத்தானே படித்துப் படித்துச் சொல்கிறார்? 'நீ ஒருத்தனாயிருந்தாலும் உனக்குச் சரியென்று தோன்றுகிறதைச் செய்' என்கிறார். ஆனால் நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? சுய புத்தியை உபயோகிக்க வேண்டாம், யாரோ எவனோ சொல்கிறதை அப்படியே ஒப்புக் கொள்ளு என்கிறீர்கள்.''

'' உங்களை யார் ஒப்புக் கொள்ளச் சொல்கிறார்கள் ?''

''யார் சொல்கிறார்களா? இப்போது சூரியாதான் சொன்னான். நமக்குத்தானே அவன் பிரசங்கம் செய்தான் ?''

''எல்லாம் இப்போது அப்படித்தான் சொல்லுவான்காணும் ! கிட்டிமுட்டி வரும்போது வேறுவிதமாய்ச் சொல்

## மட்டை கொண்டு முட்டை!


'கோட்டா மோகன்'

''இன்றைக்கு 'மாட்சில்' நான்தான் எல்லாரையும்விட நன்றாக ஆடினேன்.''
''எத்தனை ரன்கள் எடுத்தாய் ?''
''0''
''இதில் என்ன சாதனை இருக்கிறது?''
''இதே ரன்னுக்கு மீதிப் பேர் நான்கு ஓவர்கள் ஆடினார்கள். நான் ஒரே பந்தில் அதைச்சாதித்தேனே!''

வான். எங்கே? கிட்டாவய்யர் நிலத்தில் சூரியாவுக்கு உள்ள பங்கை உழுகிறவர் களுக்கு எழுதிக் கொடுத்துவிடுவானு, கேளுங்கள்!'' என்ருர் சீமாச்சுவய்யர்.

''சீமாச்சு மாமா! எழுதிக் கொடுத் தாலும் கொடுப்பேன்! அல்லது நானே வயலில் இறங்கி உழுவேன். அப்போது நிலம் என்னுடையதா யிருக்கும்'' என் ருன் சூரியா.

''அப்படிச் சொல்லடா, தும்மட் டிக்கா பட்டா! — என்ருனும். நீ மட் டுந்தான் உழுவாய் என்று நினைத் தாயோ? அத்தகைய காலம் வந்தால் நாங்கள் எல்லாரும் இடுப்பிலே துணியை வரிந்து கட்டிக் கொண்டு வயலில் இறங்கிவிட மாட்டோமா?'' என்ருர் பஞ்சுவய்யர்.

''அது வரையில் காத்திருப்பானேன்? இப்போதிருந்தே நம் வாழ்க்கையைச் செப்பனிட்டுக் கொள்ளலாமே என்று சொன்னேன். நாமே உழுது பயிரிடுவது என்று ஏற்பட்டால் இப்படியெல்லாம் நாலு நாள் கல்யாணத்துக்கு ஆடம்பரச் செலவு செய்ய முடியுமா?'' என்ருன் சூரியா.

'' ஆகக்கூடி, சூரியாவின் பாய்ண்ட் என்னவென்று இப்போது தெரிகிறது. லலிதாவின் கல்யாணத்துக்கு அதிக மாகச் செலவு செய்துவிடக் கூடாது என்று அப்பாவுக்குப் புத்திமதி சொல் கிருன். அவ்வளவுதானே, சூரியா?'' என்ருர் சீமாச்சுவய்யர்.

''இல்லவே இல்லை. அப்பாவிடத்தில் அப்படியெல்லாம் நான் அதிகப்பிரசங் கித்தனமாகப் பேசமாட்டேன்!'' என் ருன் சூரியா.

''அப்படியே சூரியா சொன்னுலும் நான் அதைக் கேட்கமாட்டேன். குடும் பத்தின் சொத்தில் புருஷக் குழந்தை களைப் போல் பெண் குழந்தைகளுக்கும் சமபாகம் கொடுக்க வேண்டும் என்று தான் இப்போதெல்லாம் பேசுகிருர் களே? லலிதாவுக்குச் சொத்தில் என்ன பாகம் உண்டோ, அதைத்தான் கல் யாணத்துக்குச் செலவழிக்கப் போகி றேன்'' என்ருர் கிட்டாவய்யர்.

'' ஒரு விஷயம், அப்பா! லலிதா வுக்குச் சொத்தில் பங்கு உண்டு என் பதை நான் ஒப்புக் கொள்கிறேன். என் னுடைய கட்சியும் அதுதான். ஆனல் லலிதா சொத்தின் பாகத்தை நம் இஷ் டப்படி செலவழிக்க நமக்கு என்ன பாத் தியதை இருக்கிறது? அதை அவ ளுக்கே எழுதி வைத்து விடுவதாயிருந் தால் எனக்குப் பூரண சம்மதம். வீண் ஆடம்பரக் கல்யாணச் செலவுகளிலும் வரதட்சணையிலும் செலவு செய்வதைத் தான் நான் ஆட்சேபிக்கிறேன்!'' என் ருன் சூரியா.

'' நீ ஆட்சேபித்தால் ஆட்சேபிக்க வேண்டியதுதான். ஊருக்கெல்லாம் ஒரு வழி, நமக்கு ஒரு வழி என்ருல் நடக்கிற காரியமா?''

'' அது இருக்கட்டும், ஐயர்வாள்! எனக்கு ஒரு சந்தேகம். அதை ஒருவரும் தீர்த்து வைக்கிற வழியாக இல்லை. 'உழுகிறவனுக்கு நிலம்' என்று சொல் கிருர்களே? உண்மையிலே உழுகிறது யார்? மாடு அல்லவா கலப்பை இழுத் துப் போய் உழுகிறது? அப்படியானல் உழுகிற மாட்டுக்குத்தான் நிலம் சொந் தம் என்றல்லவா ஏற்படுகிறது?'' என் ருர் பக்கத்து வேளாளத் தெருவிலிருந்து வந்திருந்த கர்ணம் வேலாயுத முதலி யார்.

''கணக்குப்பிள்ளை! நல்ல போடு போட்டீர்! ஏண்டா, சூரியா! இதற்கு என்னடா பதில் சொல்கிருய்?'' என்ருர் சீமாச்சுவய்யர்.

சூரியா சிறிது திகைத்துத்தான் போனுன். பிறகு, ''இது விளையாட் டுக் கேள்வி. நிலம் மாட்டுக்குச் சொந்த மாயிருக்க முடியாது. மாட்டை ஓட்டு கிற உழவனுக்குத்தான் சொந்தமா யிருக்க முடியும்'' என்ருன்.

''நீ சொல்கிறதற்குச் சரி என்றே வைத்துக் கொள்வோம். சீமையிலே யெல்லாம் உழுகிறதற்கு டிராக்டர் என்று ஒரு மெஷின் வந்திருக்கிறாம். 'ஒரு டிராக்டரைக் கொண்டு ஐந்நூறு ஏக்கரா நிலம் உழலாமாம். அவ்விதம் டிராக்டரைக் கொண்டு ஐந்நூறு ஏக் கரா உழுகிருனே, அவனுக்கு அந்த ஐந்நூறு ஏக்கராவும் சொந்தம் என்று ஏற்படுமா? அப்படியானல் சொல்லு! நான் எப்படியாவது ஒரு டிராக்டர் வாங்கிவிடுகிறேன். அதை ஓட்டவும் கற்றுக் கொண்டு விடுகிறேன்!'' என்ருர் வேலாயுத முதலியார்.

சூரியா சிறிது நேரம் யோசித்தான். பிறகு சொன்னுன்: ''நான் கூறியது ஒரு விதத்தில் தப்புத்தான். 'உழுகிற வனுக்கு நிலம்' என்று சொல்வது அவ் வளவு சரியல்ல. நிலம் உண்மையில் சர்க்காருடையது.''

''நல்ல காரியம்! நிலமெல்லாம் வெள்ளைக்காரனுக்குச் சொந்தம் என் கிருயா? ஏற்கெனவே அவன் வசூலிக் கும் வரிப் பளு தாங்க முடியவில்லை!''

''இப்போது வெள்ளைக்காரச் சர்க்காரா யிருக்கிறபடியால் இப்படிச் சொல்கிறீர்கள். இந்தியாவில் கூடிய சீக்கிரம் சுயராஜ்ய சர்க்கார் ஏற்பட்டே தீரும். அப்போது நிலமெல்லாம் சர்க் காருக்குப் பொதுவா யிருந்தால் தேச மக்களின் பொதுச் சொத்து என்று ஏற் படும். ஆபீஸ் குமாஸ்தாவும் பள்ளிக் கூட உபாத்தியாயரும் சர்க்கார் சம்

பளம் பெறுவதுபோல் உழவர்களும் சம்பளம் பெறுவார்கள். கலப்பையில் மாட்டைக் கட்டி உழுதாலும் சரிதான்; டிராக்டரை ஓட்டி உழுதாலும் சரிதான்.''

''அப்பொழுது நம்மைப் போன்ற மிராசுதாரர்கள் எல்லாம் என்ன செய்வதாம்? வாயிலே விரலை வைத்துக் கொண்டு நிற்பதோ?'' என்று பஞ்சுவய்யர் கொஞ்சம் ஆத்திரமாய்க் கேட்டார்.

''உங்களுக்கு — பிராமணுளுக்கு — பரவாயில்லை, ஐயர்வாள்! எங்கேயாவது போய் எந்த உத்தியோகமாவது பண்ணிப் பிழைத்துக் கொள்வீர்கள். ஒன்றுமில்லாவிட்டால் ஹோட்டலாவது வைத்து விடுவீர்கள். எங்கள் பாடுதான் ஆபத்தாய்ப் போய் விடும்'' என்றார் வேலாயுத முதலியார்.

மேற்கண்டவாறு திண்ணைப் பார்லிமெண்ட் சபையில் விவாதம் நடந்து கொண்டிருந்த சமயத்தில் சீமாச்சுவய்யரின் தர்ம பத்தினி அன்னம்மாள் விடுவிடுவென்று நடந்து வந்து கிட்டாவய்யரின் வீட்டுக்குள் நுழைந்தாள். அவள் நுழைந்த சிறிது நேரத்துக்கெல்லாம் வீட்டுக்குள்ளே ஒரு பயங்கர பூகம்பம் ஏற்பட்டு விட்டதாகத் தோன்றியது. ஆத்திரம் நிறைந்த குரல்களில் ஒரே கூச்சல். யாரோ விம்மி விம்மி அழுகிற குரலும் கேட்டது. இவ்வளவு சத்தங்களுக் கிடையில் சரஸ்வதியின் தாயார், ''இந்தக் குடிகேடிகளை வரச் சொல்ல வேண்டாமென்று சொன்னேனே, கேட்டாயா? பெண் பார்க்க வருகிறதற்கு முன்னாலே மெனக்கெட்டு உன்னைத் தனியாக அழைத்துப் போய்ச் சொன்னேனே, அதையாவது கேட்டாயா? 'கிணற்றுத் தண்ணீரை வெள்ளம் கொண்டு போய் விடாது' என்று சொன்னாயே! இப்போது கொண்டுபோய் விட்டதேடீ? என்ன செய்யப் போகிறாய்? எல்லாரும் என்னை அசடு, பைத்தியம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்! நான் அசடுமில்லை; பைத்தியமுமில்லை. நீதான் சுத்த நிர்மூடம். இல்லாவிட்டால் பூனைக் குட்டியை மடியிலேயே கட்டிக் கொண்டு சகுனம் பார்ப்பாயா?'' என்று பிரசங்கமாரி பொழிந்த சத்தம் கேட்டது. அதற்குச் சரஸ்வதி அம்மாள், ''இந்த மாதிரி அநியாயம் நடக்கும் என்று யார் அம்மா கண்டது?... அடசுண்டு! உங்க அப்பாவைக் கூப்பிடு. இங்கே வீடு பற்றி எரிகிறது. அங்கே என்ன பேச்சு வேண்டிக் கிடக்கிறது? கூப்பிடடா உடனே!'' என்றாள். இது

## இளம் பொன்மொழிகள்





■ நாம் இளமையின் முக்கியத்துவத்தைப் புரிந்து கொள்ளும் சமயம் அது நம்மைக் கடந்து போய் விடுகிறது. — டாக்டர் மேன்

■ இன்றைய இளைஞர்களின் மன உணர்ச்சிகளை நீங்கள் எனக்குச் சொல்லுங்கள். நாளைக்கு உருவாகப் போகும் இளைஞர் சமுதாயத்தின் நடத்தைதனை நான் சொல்கிறேன்! — எட்மண்ட் பர்க்

■ இன்றைக்கு மிக முக்கியமான தேவை இளைஞர்களுக்கு உழைக்க வேண்டும் என்பதைக் கற்றுக் கொடுப்பதுதான். சுக வாழ்வை விரும்பும் ஓர் இளைஞனுக்கு இவ்வுலகில் இடம் இல்லை. — க்ளார்க்

தொகுப்பு: கோட்டாமோகன்

வும் அங்கிருந்த எல்லோருடைய காதிலும் விழுந்தது. கிட்டாவய்யர் அவசரமாகவும் கோபமாகவும் எழுந்து வீட்டுக்குள் போனார்.

''என்னடி இங்கே ரகளை? இடி யார் தலையிலே விழுந்து விட்டது?'' என்று கேட்டார்.

''ஆமாம்; இடிதான் விழுந்து விட்டது; என் தலையிலே, உங்க தலையிலே, குழந்தை லலிதாவின் தலையிலே, எல்லோருடைய தலையிலேயும் விழுந்து விட்டது. சீமாச்சு மாமாவாத்து மாமி என்ன சொல்லுகிறாள் என்றுகேளுங்கள். அழகான மனுஷனைச் சென்னைப் பட்டணத்திலிருந்து வரவழைத்தேளே, அவாளுடைய காரியத்தைக் கேளுங்கள்! பம்பாயிலிருந்து அருமைத் தமக்கையைச் சீராட்டக் கூப்பிட்டுக் கொண்டு வந்தீர்களே! அதன் பலன் என்ன ஆயிற்று கேளுங்கள்'' — இவ்விதம் சரஸ்வதி அம்மாள் கூச்சல் போட்டாள்.

''ஆகட்டும், எல்லாம் கேட்கிறேன். நீமட்டும் கொஞ்சம் மெதுவாய்ப் பேசு! யாருக்கோ பிராணன் போய்விட்ட மாதிரி சத்தம் போடாதே!'' என்றார் கிட்டாவய்யர். (தொடரும்)




# அலைபாயும் மனத்துக்கு ஓர் அணை

மணி எட்டு. சரவணனுக்கு இன்னும் விடியவில்லை. புரண்டு புரண்டு படுத்தான். எழுந்து தொலைக்க வேண்டும். எதற்காக எழுவது? சே! எட்டு மணி ஆவதற்குள்ளாகவே ஜன்னல் வழியாக எவ்வளவு வெய்யில்! இருந்தால் பிரிட்டன், பிரான்ஸில் இருக்க வேண்டும். ஜிலுஜிலுவென்று இருக்கும். வியர்த்துக் கொட்டாது. இழுத்துப் போர்த்திக் கொண்டு சுகமாய்த் தூங்கிக் கொண்டே யிருக்கலாம்.

எழுந்தான். பல்லைத் துலக்கியதாகப் பெயர் பண்ணினான். தங்கை கசி காப்பி கொண்டு வந்தாள். சாப்பிட்டான். சோம்பல் முறித்தான். திரும்பியும் படுக்கையில் விழுந்தான்.

கூடத்தில் பேப்பர் கிடக்கும். எழுந்து போய் எடுத்துக் கொண்டு வர வேண்டும். ஆங்! பெரிய பேப்பர்! பெரிய நியூஸ்!

மேஜையின்மீது கிடந்த அமெரிக்கப் பத்திரிகையை எடுத்துப் பிரித்தான். என்ன இந்தியா வேண்டிக் கிடக்கிறது! சே! என்ன வாழ்க்கை, என்ன உலகம்! பத்திரிகையைத் தூக்கி எறிந்து விட்டு எழுந்தான். கண்ணாடி முன்போய் நின்றான். கன்னத்தின் முக்கால் பாகத்தை மறைத்துக் கொண்டிருந்த கிருதாவைச் சீப்பால் வாரிவிட்டுக் கொண்டான். கலைந்து கிடந்த தலையை வேறு மாதிரியாகக் கலைத்து விட்டுக் கொண்டான். வெளியே வந்தான்.

கூடத்திலிருந்த அம்மா, ''வெளியே போகிறதானால், பலகாரத்தைத் தின்னுட்டுப் போகக் கூடாதா? உள்ளே வந்துட்டுப் போடா'' என்று அழைத்தாள்.

''வேணும்.'' ஒரே வார்த்தை அவன் பதில்.

வாசலுக்கு வந்து சைக்கிளை எடுத்துக் கொண்டான். எங்கே போகலாம்? செல்லையாவின் அறை? மணி ஒன்பது. செல்லையா சுதந்திர பிரஜை இல்லை. ஆபீசுக்கு அடிமை. கிளம்பிக் கொண்டிருப்பான். வாசுவின் வீட்டுக்குத்தான் போக வேண்டும்.

கடைத் தெரு. கடை வாசலில் அப்பா பெட்டியடியில் உட்கார்ந்திருப்பார். சரவணன் மேற்கே பிரியும் சந்தில் புகுந்து சுற்றிக்கொண்டு மீண்டும் கடைத் தெருவுக்கு வந்தான். அப்பா பார்த்துவிட்டால் கூப்பிட்டு விடமாட்டார். வீட்டிலேயே முகத்துக்கு நேரே பேசுவதில்லை. அவர் வெளியூருக்கு எங்கேயாவது போனால் அவன் பெட்டியடியில் உட்கார வேண்டும். ஒரே போர். ''ரெண்டணாவுக்கு நல்லெண்ணெய், ரெண்டணாவுக்கு மொளவா வெத்தல்...'' ''சீனி எப்ப வரும்...?'' தொட்ட இடமெல்லாம் கடலை எண்ணெய்ப் பிசுக்கு. சர்க்கரை மூட்டையிலும் வெல்ல மூட்டையிலும் ஈ அடை.



வாசுவின் வீட்டு வாசலுக்கு வந்து ஒரு காலைத் தரையில் ஊன்றியபடியே ''வாசு!'' என்று குரல் கொடுத்தான்.

''யெஸ்... உள்ளே வாடா...'' என்று ரேழிக்கு அப்பாலிருந்தபடியே அழைத்தான் வாசு. கையில் 'சேஸ்' புத்தகம். இடுப்பில் லுங்கி.

இருவருக்கும் மகா ஒற்றுமை. அவர்கள் உலகம் தனியானது. கவலையற்ற, கவலையை எண்ணிப் பாராத — கவலையை எண்ணிப் பார்க்கப் பயப்படும் உலகம்.



பொறுப்பைப் பற்றி நினைத்துப் பார்க்கவே தயங்கும் மனங்கள். அப்படியும் இலேசாக நினைவுக்கு வந்து தொலைத்தால் சிகரெட் புகையை வேகமாக இழுத்து விட்டபடியே குடும்பத்தை மறக்க முயலும் எண்ணங்கள். இருவருக்கும் இப்படி ஒரு சின்ன ஊரில் வந்து அகப்பட்டுக் கொண்டு விட்டோமே என்ற குறை. வாசுவுக்குச் சென்னையில் அவ்வப்போது இருந்து பழக்கம். இளைஞர் உலகத்தின் உள் மனம் அத்துப்படியானவன். ''டேய், எல். எஸ். டி. சாப்பிடணும்டா. நான் மூணு ஆறும் போதையில் கவலை இல்லாமல் இருக்கலாம்'' என்று சொல்லித் தவிப்பான்.

''கிடைக்க மாட்டேங்குதேடா. நானு சாப்பிட வேணுங்கிறேன்?'' என்று ஏங்குவான் சரவணன்.

இருவரும் பேச உட்கார்ந்தார்களானால் கடிகாரம் நின்றாக வேண்டும். பத்து மணிக்கு வந்தவன் ஒரு மணிக்கு எழுந்திருந்தான். ''வீட்டுக்குப் போறேண்டா. அஞ்சு மணிக்குத் தயாராக இரு. கிளம்பிடலாம்'' என்று அன்று மாலை புரோகிராமை நினைவுபடுத்தினான் சரவணன்.

''மறந்தே போயிட்டது. சினிமாவை நாளைக்கு வைத்துக் கொள்ளலாம். சாயங்காலம் பேரளத்திலே கம்யூனிஸ்ட் சிவநேசன் பேசறாரு. போகலாம்'' என்றான் வாசு.




''இன்றைய இளைஞர் சமுதாயத்தில் பல பிரச்னைகள். பெண்களின் லுங்கி, சட்டைகள்; மேல் நாட்டு இசை, நடனங்கள்; சிந்தனைகள்... இவை வெள்ளமாக வந்து பாயும்போது இவற்றுக்கு அணை போட முடியாது. காலத்தின் நியதி. இவற்றுக்கெல்லாம் அடியில் இளைஞர்களின் உள் மனத்தின் தன்மை என்ன? அமைதியின்மை. எதிலும் தீவிரமாகச் சிந்திக்க முடியாமை. எதிலுமே பிடிப்பற்ற தன்மை. பிடிப்பு எப்படி ஏற்பட முடியும்?..... இதைப் பற்றிக் கதையாக எழுதியுள்ளார் திரு வ. சா. நாகராஜன்.

இந்தக் கதை இளைஞர்களுக்குப் பிடிக்குமோ? அவர்கள் தேடுவது இதில் கிடைக்குமோ?

— ஆசிரியர்.

''மீட்டிங் என்னடா எளவு, கேட்டுக் கேட்டுப் போரடிக்கப் போச்சு. அதுதான் தேர்தல் வருதே. நிறையக் கேட்கலாம். இன்னிக்குச் சினிமாவுக்கே போகலாம்'' என்றான் சரவணன்.

''சினிமா நாளைக்கு எங்கேடா போகுது? நாளைக்கும் வேறே புரோகிராம் வேணுமில்லே? நாளைக்கே போய்க் கொள்ளலாம்.''

இருவராலும் முடிவுக்கு வர முடியவில்லை. சரவணன் சொன்னான்: ''மணி ஒண்ணு. செல்லையா ரூமுக்கு வந்திருப்பான். போய்க் கேட்போம்.''

வாசு இடுப்பிலிருந்து லுங்கியைக் கழற்றி எறிந்து விட்டு வேஷ்டி கட்டிக்கொண்டு கிளம்பினான்.

செல்லையாவின் அறைக்குப் போனபோது அவன் சாப்பிடக் கிளம்பிக் கொண்டிருந்தான். அவர்களைப் பார்த்ததும் கையில் எடுத்த பூட்டை மேஜையின் மேல் வைத்து விட்டு, அழுக்குத் துணிகள் நிறைந்து கிடந்த கட்டிலில் உட்கார்ந்தான்.

''செல்லையா! என்னடா இன்னைக்குச் சாயங்கால புரோகிராம்? சினிமாவா, இல்லே, சிவநேசன் மீட்டிங்கா - நீ சொல்லு.''

செல்லையா ஒரு நிமிஷம் யோசித்தான். ''சினிமாவுக்கே போகலாம்'' என்றான்.

''ஹாய்'' என்றான் சரவணன்.

சரவணன் செல்லையாவுடன் கீழே இறங்கிப் போய்ச் சாப்பிட்டு விட்டு வந்தான். சீட்டுக் கட்டைப் பிரித்துப் போட்டான் வாசு. செல்லையா கடிகாரத்தைப் பார்த்தான். மணி ஒண்ணே கால். ''சரி போடு'' என்றான்.

மணி இரண்டு. செல்லையா எழுந்திருந்தான். ''எனக்கு நேரம் ஆச்சு, ஆபீசுக்குப் போறேன். நீங்க இருக்கீங்களா என்ன?'' என்று விசாரித்தான்.

''எனக்குத் தூக்கம் வருது. ஒரு தூக்கம் போட்டு விட்டுப் போறேன். சாவியைக் கொடுத்துவிட்டுப்போ. மூணு மணிக்கு மேலே கீழே கொடுத்துட்டுப் போறேன்'' என்று அப்படியே கட்டிலில் சாய்ந்தான் சரவணன்.

வாசுவும் செல்லையாவும் வெளியே போனார்கள். சரவணன் கதவை உட்புறம் தாளிட்டுக் கொண்டு படுத்துக் கொண்டான்.

மூன்றரை மணிக்கு விழித்துக் கொண்டான் சரவணன். சோம்பல் முறித்துக் கொண்டு கதவைப் பூட்டிச் சாவியைக் கொடுத்துவிட்டு, வெளியே வந்து சைக்கிளை எடுத்தான்.

வீட்டுக்கு வந்தபோது அம்மா கையில் ஒரு கடிதத்துடன் வாசற்படியருகிலேயே அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தாள். ''காலையிலே போனவன் எப்படா வீட்டுக்கு வரே? உள்ளே வா. இது என்னன்னு பாரு. தபால்காரன் கொண்டு வந்து கொடுத்துக் கையெழுத்துப் போடணும்னான். என்னன்னு பாரேன்'' என்றாள்.

சரவணன் உறையைக் கிழித்துப் பார்த்தான். அது திருச்சியிலிருந்து அப்பா சிதம்பரத்துக்கு வந்திருந்த வக்கீல் நோட்டீஸ். அவருக்குக் கடைத் தெருவில் மளிகைக் கடை வியாபாரம். இன்னும் பெரிதாகச் செய்ய வேண்டும் என்று விரும்பினார். திருவாரூரில் மொத்த வியாபார மண்டி வைத்திருந்த ஒருவருடன் கூட்டாகச் சேர்ந்தார். முதலுக்குக் கடன். ஒரு வருஷம் முடிந்தும், மண்டியில் சரியானபடி லாபம் பார்க்க முடியவில்லை. கடனுக்கு வட்டி ஏறிற்று. இப்போது வக்கீல் நோட்டீஸாக உருவெடுத்து விட்டது.

அம்மா பெருமூச்சு விட்டாள். ''என்ன தான் ஆகப் போகுதோ? மண்டியிலே இது வரையில் ரெண்டாயிரத்துக்கு மேலே நஷ்டமாம். என்ன கஷ்ட காலமோ, இவருக்கு ஏன்தான் இப்படிப் புத்தி போகுதோ!'' என்று ஆரம்பித்தாள்.

அவன் வெடித்தான். ''ஆமாம். பேராசை! இருக்கிற கடையை ஒழுங்காகப் பார்த்துக் கிட்டாப் போதாது? மண்டி என்ன, மண்டி? அதுவும் ஊர் விட்டு ஊரிலே? கடன் வாங்கி என்ன வியாபாரம் வேண்டியிருக்குது?''

''போதுண்டா, போதுண்டா... எதுக்காக அவர் இப்படிக் கடன் வாங்கி மண்டியிலே போடறாருன்னு நினைச்சுப் பார்த்தியா? இந்தச் சின்ன ஊரிலே இதுக்கு மேலே ஒண்ணும் செய்ய முடியல்லையே, நீயாவது படிச்சுப் பெரிய வேலைக்குப் போவேன்னு உன்னைக் காலேஜிலே சேர்த்துப் படிக்க வைச்சாரு. ஒழுங்காகப் படிச்சியா? காலேஜிலே சேர்ந்ததுக்குச் சிகரெட் பிடிக்கக் கத்துக்கிட்டே. சீட்டாடக் கத்துக்கிட்டே. சினிமாப் பார்க்கக் கத்துக்கிட்டே. சதா சிநேகிதங்களோட கூடிக்கிட்டு அரட்டை அடிக்கக் கத்துக்கிட்டே. இவ்வளவுதான் மிச்சம். அப்பாவைப் போய்க் குறை சொல்லறியே...?''

''ஆமாம், சொன்னா கோபம் பொத்துக்கிது. நான் என்ன சொன்னேன்? எனக்கு மளிகைக் கடை பிடிக்கல்லே. அங்கே நின்னாலே சட்டையெல்லாம் கடலெண்ணெய்ப் பிசுக்கு ஒட்டிக்குது. அது வேண்டாம். என் கிட்டே ஒரு பத்தாயிரம் ரூபாய் முதல் கொடுங்க, ஜம்முன்னு ஒரு ஜவுளிக் கடை வைக்கிறேன்னேன். ரெடிமேட் டெரிலின் சட்டைகளை வாங்கிப் போட்டால், ஒரு சட்டைக்குப் பத்து ரூபாய் லாபம். ஒரு நாளைக்குப் பத்துச் சட்டை வித்தாப் பத்தாது? நான் சொன்னது அப்பாவுக்குப் புரியல்லே. மண்டி வைக்கிறாராம், மண்டி!''

''அதுக்கு அப்பா என்ன சொன்னாரு? டெரிலின் சட்டை என்ன, துவரம் பருப்பா, இன்னைக்குச் சாம்பார் வைச்சுக் கரைச்சுட்டு நாளைக்கே மறுபடியும் உன் கடைக்கு வாங்க வரதுக்கு? ஒரு தடவை சட்டை வாங்கினால், நாலு வருஷங்கள் வாங்க மாட்டாங்களாமே?''

''திருப்பித் திருப்பி ஒருத்தன்தானா வாங்குவான்? நான் சொன்னாப் புரியாது. உள்ளூர் மளிகைக் கடையையே பார்த்துக் கொள்ள முடியல்லே. வெற்றூரிலே போய் மண்டி வைக்கிறாராம்.''

''அதான் நீ இருக்கியேடா, ஒண்ணை நீ பார்த்துகிட்டா, ஒண்ணை அவர் பார்த்துக்க மாட்டாரா?''

''எனக்குத்தான் இந்தத் துவரம்பருப்பு விவகாரம், எண்ணெய்ப் பிசுக்கு இதெல்லாம் பிடிக்காதுன்னு சொல்றேனே....?''

''அது போகட்டும். இப்ப இந்த 'நோட்டீஸை' எப்படிடா அவர்கிட்டே

சருமத்திற்கு ஊட்டமளிக்கும் ஸ்நான சோப்...

# ரெக்ஸோனா




சருமப் பராமரிப்புக்கான 5 சத்துக்களின்
கலவையாகிய **கேடில் ப்ளஸ்** அடங்கியது

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-RX. 65-140 TH

காண்பிக்கிறது? அப்படியே இடிஞ்சு போயிடுவாரே ?''

'' ஒண்ணும் போயிட மாட்டாரம்மா. சும்மா கொடு'' என்று மிகச் சாதாரணமாகச் சொல்லிவிட்டுத் தன் அறைக்குப் போனான். சட்டையைக் கழற்றிவிட்டு உடலைக் கட்டிலில் சாய்த்தபோது மறுபடியும் சின்னத் தூக்கமாக வந்தது. நாலரை மணிக்கு மேல் எழுந்து போய்க் குளித்துவிட்டுவந்தான்; கிளம்பினான்.

''மறுபடியும் கிளம்பியாச்சல்லே? ராத்திரி எத்தனை மணிக்கு? பதினொண்ணோ, பன்னிரண்டோதானே ? அப்பாவுக்கு வக்கீல் நோட்டீஸ் வந்திருக்குன்னு தெரிஞ்சும் கொஞ்சம்கூடக் கவலைப்படாமே ஏண்டா இப்படி வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கறே ?''

''வக்கீல் நோட்டீஸ் எனக்கா வந்திருக்கு? என்னை என்னம்மா செய்யச் சொல்லறே ? என்னைக் கேட்டுக்கிட்டா கடன் வாங்கினாரு? என்னைக் கேட்டுக்கிட்டா மண்டி வைச்சாரு?''

''பின்னே யாருக்காகடா? அவருக்காகவா? இந்த வயசிலேயும் அவருக்கு இன்னமும் சம்பாதிக்க என்னடா ஆகணும்? இப்படி ஒண்ணுக்கும் உதவாததாகப் பெத்துப் போட்டுட்டோமே, அதனாலே உடம்பிலே தெம்பு இருக்கிற வரையிலே சம்பாதிக்க வைக்கலாமேன்னுதான்.....''

'' என்னைப் பெக்கும்படியா அப்பாவை நான் விழுந்து விழுந்து கேட்கவும் இல்லே. எனக்காகச் சம்பாதிக்க வையுங்கன்னு அவர்கிட்டே வேண்டவுமில்லே....''

''பெத்தவங்கிட்டே இப்படிப் பேசறதுக்குத்தான் நீங்க சிநேகிதங்க சேர்ந்து சேர்ந்து பேசறீங்களா ?''

''போதும்மா, போதும்'' என்று வெளியே வந்தான். சைக்கிளை எடுத்துக் கொண்டு அழுத்திப் பெடலை மிதித்தான்.

மூன்று சைக்கிள்களும் போட்டி போட்டுக் கொண்டு பறந்தன. படம் வெளியான நாளானதால் ஏகக் கூட்டம்.

படம் முடிந்து ஊருக்குத் திரும்பியபோது நள்ளிரவுக்கு மேல் ஆகிவிட்டது. அம்மா வந்து கதவைத் திறந்தாள். அந்த நேரத்திலும் அவன் குறைப்பட்டுக் கொள்வதை விடவில்லை. ''பிள்ளைக்கு இருபத்தைஞ்சு வயசாச்சு. கல்யாணம் ஆகி, சந்தோஷமாக இருப்பான்னு நினைச்சேன். ஊரைச் சுற்றிவிட்டு ரெண்டு மணிக்கு வந்து கதவைத் தட்டறான். உம்.... என் விதி......''

''அவள் வந்தா மாத்திரம் சினிமாவுக்குப் போகாமலா இருப்பேன் ?'' என்றான் சரவணன்.

'' சினிமாவுக்கா ? போறப்போ இப்படிப் போறேன்னு சொல்லிட்டுப் போகக் கூடாதா ? சோத்தை வைச்சுக்கிட்டு, சாப்பிட வருவே, வருவேன்னு காத்துக்கிட்டிருக்க வேண்டியதில்லே இல்லியா.....?''

'' நாளைக்குப் போறப்போ சொல்லிட்டுப் போறேன்'' என்று சொல்லிக் கொண்டே அறைக்குப் போனான். சட்டையைக்கூடக் கழற்றவில்லை; விளக்கேற்றவில்லை. மின் விசிறி ஸ்விச்சைப் போட்டு விட்டு அப்படியே படுக்கையில் விழுந்தான்.

தூக்கம் வரவில்லை. புரண்டு புரண்டு படுத்தான். காலையிலிருந்து நடந்தவை ஒவ்வொன்றாக மனத்தில் ஓடியது. ஒரு விஷயத்தையாவது இரண்டு நிமிஷங்களுக்கு மேல் நினைத்துப் பார்க்க முடியவில்லை. எதிலுமே ஒட்டாமல் தத்தளிக்கும் மனத்தை எப்படி ஒரு நிலைப்படுத்தி ஏதாவது ஒன்றில் ஈடுபடுத்துவது என்று புரியவில்லை. வாசு சொல்வதைப் போல் எல். எஸ். டி., மார்பியா எதையாவது சாப்பிட்டுப் போதையில் ஆழ்ந்து இந்த உலகத்தை, கவலைகளை, ஆசாபாசங்களை, திருப்பிக் கொடுக்க வேண்டிய கடனை, தெருவில் அருணாசலம் சாரைப் பார்த்தால் 'குட்மார்னிங் சார்' போட்டுத் தொலைக்க வேண்டிய அநாவசிய மரியாதைகளை, கடலெண்ணெய்ப் பிசுக்கை, சிட்டாட்டத்தை — எல்லாவற்றையும் மறந்து இரண்டு மூன்று நாட்களாவது இருக்க வேண்டும் என்று இருந்தது. சனியன் பிடித்த ஊர்! நினைத்த பொருள் நினைத்த நேரத்தில் கிடைக்காத ஊர் ..... !

''ஏய், சரவணா...ஏய்... எழுந்திருடா!'' என்று அம்மா இரைந்து கூப்பிடும் குரல் கேட்டது. குரலில் தெரிந்த அவசரத்தைக் கேட்டு எழுந்தான். அம்மா பதற்றத்துடன் நின்று கொண்டிருந்தாள். ''அப்பாவைக் காணோம்டா. எழுந்திருடா...'' என்று மேலே பேச முடியாமல் தவித்தாள்.

''என்னம்மா ?'' என்று தூக்கம் அழுத்தும் கண்களை அலுப்புடன் துடைத்துக் கொண்டான்.

'' எழுந்திருடா. அப்பாவைக் காணோம். ராத்திரி வந்தார். காலையிலே எழுந்து பார்க்கிறேன். காணோம். வாசல் கதவு திறந்து கிடக்கு.....''

''கத்தாதேயம்மா. எங்கேயாவது ஆற்றங்கரைக்குப் போயிருப்பாரு. காலங்கார்த்தாலே பெரிய கலவரம் செய்யிறே. எனக்குத் தூக்கமா வருது'' என்று சொல்லிக் கொண்டே மீண்டும் படுக்கையில் விழுந்தான்.

அம்மா குரல் எழுப்பி அழுதாள். ''ஐயோ, படுக்காதேடா. இதைப் பாருடா. அப்பா படுக்கையிலே இருந்தது. படிச்சுப் பாரு'' என்று ஒரு காகிதத்தைக் கொடுத்தாள்.

தூக்கம் அழுத்தும் கண்களை அழுத்தித் துடைத்து விட்டுக் கொண்டு கடிதத்தைப் பார்த்தான் சரவணன்.

''...காலையில் எழுந்ததும் இந்தக் கடிதம் உன் கண்ணில் படும். அப்போது நான் இந்த ஊரிலிருந்து இருநூறு மைலுக்குமேல் போயிருப்பேன். எந்தப் பக்கம் என்று சொல்ல மாட்டேன். அழாதே. தைரியமாக இரு. விஷயம் தலைக்கு மேல் போயிடுச்சு. நேற்று வந்த வக்கீல் நோட்டீஸை நீ என்னிடம் காண்பிக்கவில்லை. ஆனால் அது வந்திருப்பது எனக்குத் தெரியும். எப்பவும் குடும்பத்துக்கு வரும் இடி ஒண்ணாக வராது. மண்டிக்குப் போன வாரம் இரண்டாயிரம் ரூபாய் நஷ்டம். அது மூழ்கிப் போய்விட்டது. எனக்கு என்ன செய்யறதுன்னே புரியவில்லை. போறேன். சரவணன்கிட்டே சொல்லி, இனிமேயாவது கடையைப் பார்த்துக் கொள்ளச் சொல்லு. நல்ல காலம் வரும்போது திரும்பி வருவேன். தைரியமாக இரு. கமலியையும் ராமையாவையும் பார்த்துக்க. - சிதம்பரம்.''

சரவணனுக்கு மண்டையில் ஓங்கி அடிப்பது போலிருந்தது. அப்பா ஊரை விட்டு ஓடிப் போய்விட்டார். பத்தாயிரம் ரூபாய்க்கு வக்கீல் நோட்டீஸ். மண்டியில் நஷ்டம். சரவணனுக்குத் தலையைச் சுற்றியது.

''ஊருக்கு உசத்தியா வாழ்ந்தீங்களே ! உங்க கதி இப்படிச் சொல்லிக்காம போகணும்னு இருந்ததா?....'' என்று அம்மா வாய்விட்டு அழ ஆரம்பித்தாள்.

அம்மாவின் வாயை மூடினன் சரவணன்.

''இப்ப என்னடா, பண்ணுகிறது...?''

''என்ன பண்ணுகிறதுன்னு அப்பா என் கிட்டே சொல்லிட்டா போனர்? என்கிட்டே கேட்கிறியே ?'' என்று எரிந்து விழுந்தான்.

'' கடனுக்கு வீடும் கடையும் போயிடுமா ? சுமதியையும் ராமையாவையும் வைச்சுக்கிட்டு நடுத் தெருவுக்குப் போயிடும்படியாக ஆகிவிடுமா ? கடவுளே!'' என்று அம்மா அரற்றினள்.

'' எனக்கும் புரியல்லே !'' என்ருன் சரவணன்.

சிறிது நேரம் கழித்து எழுந்தான். ''நான் கொஞ்சம் வெளியே போயிட்டுவரேன். இந்த மாதிரின்னு ஒருத்தரிடமும் சொல்லி மூச்சு விடாதே. சுமதியிடம்கூடக் காண்பிக்காதே. தெரிஞ்சவர் ஒருத்தர்கிட்டே போய் என்ன பண்ணலாம்னு யோசனை கேட்டுக் கிட்டு வரேன்'' என்று சைக்கிளை எடுத்துக் கொண்டான்.

'' உன் சிநேகிதங்ககிட்டே போய் இதற்கு யோசனை கேட்காதேடா. ஊர் சிரிக்கும்டா'' என்று அம்மா பின்னேடு வந்தாள்.

''அவங்க இல்லே. இவர் வேறே. நீ உள்ளே போ'' என்று பெடலை மிதித்தான்.

சிதம்பரத்துக்கு வேண்டியவர், கோர்ட், வழக்கு விவகாரங்களில் விஷயம் தெரிந்தவர். அவரிடம் போய் ரகசியமாகச் சொன்னுன். ''நாளைக்கே கடையையும் வீட்டையும் ஏலத்துக்குக் கொண்டு வந்து எங்களை வீட்டை விட்டுத் துரத்திடுவாங்களா ?'' என்று சன்னசுரத்தில் கேட்டான்.

அவர் சிரித்தார். ''என்னப்பா இது, காலேஜிலே மூணு வருஷம் படிச்சிருக்கே. நீயே இப்படிக் கேட்கிறே? கோர்ட்டு சமாசாரங்கள் எல்லாம் அப்படி நாளைக்கே முடிகிற சமாசாரமா? கடன் கொடுத்தவன் கோர்ட்டிலே கேசு தாக்கல் செய்து, ஜட்ஜ் அதை விசாரணைக்கு நாள் குறிச்சு எடுத்துக்கிட்டு, இருபது அட்ஜர்ன்மெண்ட் ஆகி, வக்கீல் ஆர்க்யூமெண்ட் முடிஞ்சு, தீர்ப்புச் சொல்கிறதுக்குக் குறைஞ்சது ஆறு மாசங்களாவது ஆகும். அதற்குள்ளே ஏதாவது செய்ய முடிஞ்சதைச் செய்யலாம். கடை, அப்பா வைச்சது இல்லே. தாத்தா காலத்திலேயிருந்து இருக்கு. நீ வீட்டுக்குப் போய், கடையைப் பார்த்துக்க. ஒருத்தரிடமும் விஷயத்தை எதுவும் சொல்லாதே'' என்று சொல்லி அனுப்பினர்.

சரவணன் வீட்டுக்கு வந்தபோது கடைப் பையன் சாவியை வாங்கிக் கொண்டு போக வந்து காத்துக் கொண்டிருந்தான். அவனும் பையனுடன் கிளம்பினன்.

என்றைக்குமில்லாமல் சின்ன முதலாளி தம் கையால் கடையைத் திறந்து கல்லாப் பெட்டியடியில் உட்காருவதைப் பார்த்துக் கடைப் பையன்களும் கணக்குப் பிள்ளையும் அதிசயப்பட்டார்கள்.

சேர்ந்தாற்போல் நாலைந்து மணி நேரம் ஒரே இடத்தில் உட்கார முடியவில்லை. வாசுவின் வீட்டுக்குப் போய்ப் பார்க்கக் கால்கள் துடித்தன. அன்று இரண்டாவது சனிக்கிழமை. செல்லையாவுக்கு விடுமுறை. அவன் அறையில் காலையிலேயே சீட்டுக் கச்சேரி ஆரம்பமாகி யிருக்கும். சரவணனின் கைகள் சீட்டுக்களைத் தடவும் நினைவில் துறுதுறுத்துக் கொண்டிருந்தன.

பிற்பகல் இரண்டு மணிக்கு மேல், கடையில் கூட்டம் இல்லாத சமயம் எழுந்து கணக்குப் பிள்ளையிடம் சொல்லிவிட்டுச் செல்லையாவின் அறைக்குப் போனன். கச்சேரி நடந்துகொண்டிருந்தது. கொஞ்ச நேரம் அங்கு உட்கார்ந்திருந்தவனுக்கு இருப்புக் கொள்ளவில்லை.

''போகணும்டா'' என்று சரவணன் எழுந்துவிட்டான்.

'' என்னடா, ஒரு மாதிரியாக இருக்கே?'' என்று நண்பர்கள் திருப்பித் திருப்பிக் கேட்டார்கள். இத்தனை வருஷங்களாகப் பழகுபவர்களிடம் தன் நிலையைச் சொல்லிவிடுவோமா என்று ஒரு கணம் நினைத்தான். வேண்டாம் என்று தோன்றியது.

எழுந்து கடைக்கு வந்தான்.

இரவு ஒன்பது மணிக்கு மேல் நோட்டுக்களையும் சில்லறைகளையும் எண்ணித் துணிப் பையில் போட்டு எடுத்துக் கொண்டு கதவைப் பூட்டிக் கொண்டு வீட்டுக்கு வந்தான்.

பகல் முழுதும் அழுது கொண்டே யிருந்த அம்மா சமையல் அறைக்கே போகவில்லை. சுசீலா சோற்றைப் போட்டு மோர் விட்டாள். கட்டாயப்படுத்தி அம்மாவையும் ஒரு வாய் சாப்பிட வைத்தான்.

வழக்கம்போல் தன் அறைக்கு வந்து மின் விசிறியின் சுவிச்சைப் போட்டு மெத்தையை விரித்தான். கூடத்தில் அம்மாவும் சுசியும் ராமையாவும் படுத்துக் கொண்டார்கள். ஒருவருக்கொருவர் வாய்விட்டுப் பேசாமல், வீடு மரண அமைதியில் இருந்தது. அந்த அமைதி சரவணனுக்குப் பயமாக இருந்தது. கூடத்துக்கு வந்து ஓரத்தில் படுத்திருந்த ராமையாவின் அருகில் அவனும் படுத்தான்.

'' அண்ணு! அப்பா செத்துப் போயிட்டாங்களா ?'' என்று சரவணனைக் கட்டிக் கொண்டே கேட்டான் ராமையா. அவனுக்கு எட்டு வயசு.

''இல்லே. யாருடா, அப்படிச் சொன்னுங்க ?''

'' பின்னே அம்மா காலையிலேயிருந்து அழுதுக்கிட்டிருக்காங்களே ? அப்பா எங்கே? அப்பா எங்கே அண்ணு....?''

'' ஊருக்குப் போயிருக்காங்க. நீ தூங்கு.''

''எந்த ஊருக்கு ?''

''திருச்சிக்கு.''

'' எப்ப வருவாங்க ?''

''நாலு நாளையிலே!''

''ஊருக்குப் போயிருக்காங்கன்னு, அம்மா ஏன் அழுதுக்கிட்டே யிருக்காங்க? பொய் சொல்லுறே. அப்பா செத்துப்போயிட்டாரு.''

அம்மாவின் பக்கத்தில் படுத்திருந்த சுசீலா எழுந்து சரவணனின் அருகில் வந்தாள். '' சொல்லண்ணு. அப்பா எங்கே ? சொல்

# தெரிந்த விளையாட்டு; தெரியாத விவரம்

## 1. கிரிக்கெட்

★ பதினேழாம் நூற்றாண்டில் அயர்லாந்தில் கிரிக்கெட் ரொம்பப் பிரபல்யமா யிருந்தது. இதனைக் கண்ட க்ராம்வெல் எல்லாக் கிரிக்கெட் மட்டைகளையும் பந்துகளையும் அழித்துவிடக் கட்டளையிட்டார். 1656ல் பல எரிக்கப்பட்டன.

★ 1299 - 1300 ஆண்டுகளிலேயே 'Creag' என்ற வார்த்தை முதலாம் எட்வர்ட் செலவுக் கணக்கில் குறிக்கப்பட்டுள்ளது.



கிரிக்கெட் போன்ற ஒரு ஆட்டத்தை ஆடியதற்கான செலவாகத் தான் அது இருக்க வேண்டும்.

★ ஆரம்பத்தில் பந்தை வெகு தூரம் அடித்துவிட்டு வட்ட வடிவமாகவும் ஓடி எண்ணிக்கை எடுத்தார்கள்!

★ கிரிக்கெட் என்பதற்கு ஆங்கிலோ ஸாக்ஸன் மொழிப்படி அர்த்தம்: 'கூனல் தடி'. டச் முறைப்படி பதினெட்டு அங்குலத்திலிருந்து இரண்டு அடி வரை உயரமுள்ள ஸ்டூலே விக்கெட்டாகப் பயன்படுத்தியிருக்கலாமாம்!

★ ஜான் ஆர்லாட் பழைய கிரிக்கெட் நினைவுகளைப் பற்றிக் குறிப்பிடுகையில் மாதாகோயில் கதவில் தொங்கவிடப் பட்டிருந்த குறிப்பைத் தருகிறார்: "மாதா கோயில் பிரார்த்தனையில் கலந்து கொள்ளாதவர்கள் கிரிக்கெட் ஆடக் கூடாது!"

★ அயர்லாந்தில் பிரபல்யமான கிரிக்கெட் ஆட்டத்தை முதலாம் எலிஸபெத் ராணி காலத்தில் ஆங்கிலத் துருப்புகள் பார்த்துவிட்டு வந்து அதனை இங்கிலாந்துக்குக் குடியேற்றினர்.

★ 1745ல் கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் மாட்ச் ஆடினால் பணம் கொடுத்தார்கள்; பன்னிரண்டாவது ஆட்டக்காரர், ஸ்கோரர் உள்பட. ஆனால் அம்பயர்களுக்குப் பணம் கொடுப்பதில்லை! கனவான்கள் கௌரவப் பதவியாக அதனை ஏற்றுக் கொண்டு செய்ததால் அவர்களுக்குத் தேவை இல்லை என்று கருதினார்கள்.

★ 1744ல் கிரிக்கெட் சட்டங்கள் அமுலுக்கு வந்தன.

★ 1769ல் முதன் முதலில் சதம் எடுத்துப் புகழ் பெற்றவர் ஜான் மினாஷல். இந்தச் சதம் எடுத்த ஆட்டக்காரரை டோர்ஸெட் டியூக் வாரம் எட்டு ஷில்லிங் கொடுத்துத் தம் தோட்டக்காரராக வைத்துக் கொண்டாராம்!

- குண்டுமணி

வண்ணு!" என்று அவன் கையைப் பிடித்துக் கொண்டு அழுதான்.

சரவணன் ஒரு கையில் ராமையாவையும் ஒரு கையில் கமலாவையும் அணைத்துக் கொண்டான். "அப்பா செத்துப் போகல்லே. ஊருக்குப் போயிருக்காங்க. நாலு நாளையிலே வந்துடுவாங்க. நீங்க எதுக்காக இப்படி அழணும்? நான்தான் இருக்கேனே?"

"நீதான் வீட்டிலேயே இருக்கமாட்டியே?" என்றான் ராமையா.

"இல்லேடா. இனிமேல் அப்பா வருகிற வரையிலே நான் எங்கேயும் போகமாட்டேன். கடையையும் உங்களையும் பார்க்கிறதை. பார்த்துக்கிறதைத் தவிர எனக்கு வேறு வேலையே இல்லே" என்று கூறி, ராமையாவின் கண்களைத் துடைத்தான் சரவணன்.

சரவணன் சொன்னது அம்மாவின் காதுகளில் விழுந்தது. ஆனால் அந்த வார்த்தைகளில் இருந்த அழுத்தம் அவள் மனத்தில் பதியச் சில நிமிஷங்கள் ஆயின. திடீரென்று பெரிய இருள் ஒன்று விலகி, ஒளி பிரகாசிப்பதை உணர்ந்தாள். ஏழெட்டு வருஷங்களுக்கு மேலாக வீட்டைப் பற்றிய நினைவே இல்லாமல் ஊர் சுற்றிக் கொண்டிருந்தவன்—ஒரு தங்கையும் தம்பியும் இருக்கிறார்கள் என்று நினைத்து அவர்கள் முகத்தைப் பார்த்து இரண்டு வார்த்தை பேசக்கூட மறந்து போயிருந்தவன், -- நாள் முழுதும் சிகரெட் புகையிலும் சினிமாவிலும் சிநேகிதர்கள் அரட்டையிலும் காலம் கழித்தவன், எப்படி அத்தனையையும் ஒரே நாளில் உதறி எறிந்து விட்டு வீட்டிலும் குடும்பப் பொறுப்பிலும் ஒட்டிக் கொண்டான்?

வாழ்க்கையில் ஒன்றை இழந்தால்தான் ஒன்று கிடைக்குமோ?

# அன்பே, அகிலா!

கதை: குமரன்
சித்திரம்: விஜயா

1971 மார்ச் மாதம். பாக் அதிபர் யாஹியாகான் டாக்காவுக்கு வந்தார், முஜீப், பூட்டோ மற்றும் சில தலைவர்களுடன் பேச்சு வார்த்தை நடத்த. அதில் சமரசத் தீர்வு காண விரும்புவதாக அவர் சொன்னது வெறும் வஞ்சமே...

1

..... ஏனெனில் அதே சமயத்தில் பாகிஸ்தான் ராணுவமும் யுத்த தளவாடங்களும் சிட்டகாங் துறைமுகத்தில் பெருவாரியாக வந்து இறங்கிக் கொண்டிருந்தன!



"பேச்சு வார்த்தைகள் முறிந்தன; சமரசத்துக்கு இடமில்லை" என்று கூறி யாஹியாகான் இஸ்லாமாபாத்துக்கு விமானம் ஏறினார். அதே சமயம் அவர் உத்தரவின் பேரில் வங்க தேசத்தில் பாக் ராணுவத்தின் அட்டூழியங்கள் ஆரம்பமாயின.





அச்சுறுத்தி வங்க மக்களை அடிமைகளாக்கத் தீர்மானித்தது பாக் ராணுவம். அதன் ஒரு பகுதி ஒரு கிராமத்தை அடைந்தது. அங்கே.....









கிழட்டு நாயே, இத்தனை திமிரா உனக்கு!


செத்த பாம்பை அடிப்பது போல் கிழங்களாகிய எங்களைச் சித்திரவதை செய்யலாம். ஆனால் விடுதலை வேட்கை கொண்ட இளைஞர் சமுதாயம் பழி வாங்கக் காத்திருக்கிறது. நினைவிருக்கட்டும்!


கிழவன் வீரத்துடன் பேசியதும் மற்ற வயோதிகர்களும் துணிவு பெற்றார்கள்.
ஜெய் பங்களா!
ஜெய் ஸோனார் பங்களா!


அந்தக் கோஷம் பாக் ராணுவத் தலைவனை உசுப்பி விட்டது....
சுட்டுத் தள்ளுங்கள் அத்தனை பேரையும்! உதவாக்கரைக் கிழப் பிசாசுகள்!


அதிகாரியிடம் அடிவருடியொருவன் பேசினான்:
இது அநியாயம். சுட்டுத் தள்ளுவது சுலபம். அப்புறம் பிண நாற்றம் வீசுமே? இத்தனை பேருக்கும் சவக் குழி தோண்டுவது யார்? நம் வீரர்களா?


அவர்களது சவக் குழிகளை அவர்களே தயாரிக்கட்டும்! தோண்டுவது தான் கஷ்டம்; குழியை நிரப்புவது நமக்குச் சிரமமில்லையே... ஹா... ஹா... ஹா! உம்! நடக்கட்டும் வேலை!


வாலிபர்களைத்தான் காணோம்; இளம் பெண்களை ஒருத்தி கூடவா இல்லாமல் போய்விட்டாள் இந்தக் கிராமத்தில்? ஆச்சர்யமாயிருக்கிறதே!
லெப்டினன்ட் சுலேமானின் எண்ணம் இத்திசையில் செயல்பட அதே சமயம் தங்களுக்குத் தாங்களே குழி பறித்துக் கொண்டிருந்த கிழவர்களுள் ஒருவனின் உறுதி தளர்ந்தது. துரோகியாக மாறத் தீர்மானித்து விட்டான்.



தொடரும்...




விருந்துக்குச் சில நண்பர்களை அழைத்து விட்டீர்கள். எல்லோரும் வந்த உடனே சாப்பாட்டைப் போட்டு ஆச்சு காரியம் என்று அனுப்பிவிடாதீர்கள். சற்றுநேரம் பேசுங்கள். பேசிப் பேசிப் 'போர'டித்து விட்டான் என்று நினைக்கப் போகிறார்களே என்ற கவலை இருக்குமாயின், விளையாடச் சொல்லுங்கள். தமாஷாகச் சிரித்துப் பொழுதைப் போக்கலாம்.

## ரெடி! நோட்டைப் பிடி!

இரண்டு விரல்களுக்கிடையில் ஒரு புது ஒற்றை ரூபாய் நோட்டைப் பிடித்துக்கொள்ளுங்கள். அதன் அருகே உங்கள் தோழன் அல்லது தோழி நின்று, விரல்களை நண்டின் முன் கரங்கள் போல் வளைத்து வைத்துக் கொண்டு இருக்க வேண்டும். இரு விரல்களும் நோட்டின் இருபுறமும் 'லபக்'கென்று பற்றிக் கொள்ளத் தயாராக இருக்கலாம். ஆனால் ரெடி என்ற குரல் கேட்ட பிறகுதான் விரல்கள் ஒன்றையொன்று நெருங்கி நோட்டைப் பிடிக்க முயல வேண்டும். ரெடி என்று கூறி நோட்டையும் அதே சமயம் நழுவ விடுங்கள். சுலபமாகப் பிடித்து விடலாம் என்று நினைப்பவர்கள் ஏமாந்து போவார்கள்.



கண்ணிமைக்கும் நேரத்தில் மிகத் துரிதமாகச் செயல்படக் கூடிய ஆற்றல் உள்ள ஒரிருவரே நோட்டைப் பிடிப்பார்கள். அப்போது நோட்டு அவர்களுடையதாகி விடும்! கவலைப்படாதீர்கள்! பத்துப் பன்னிரண்டு விருந்தினரில் ஒரிருவருக்கு மேல் பிடிக்கமாட்டார்கள். இரண்டு மூன்று ரூபாய்க்கு மேல் நஷ்டமாகாது. ஆனால் லாபக் கணக்கில் மகிழ்ச்சி, நல்லெண்ணம் ஆகியவை உண்டு. உங்களுக்குத் தைரியம் இருக்குமானால் ஒருவருக்கே இரண்டு மூன்று சான்ஸ் கூடக் கொடுக்கலாம்.

## பட்டாணியை உறிஞ்சிக் கோப்பையில் போடு!

ஆளுக்கு ஒரு கப் அண்டு ஸாஸர் கொடுங்கள். கொக்கோ கோலா, கோல்ட் ஸ்பாட் போன்ற பானங்களை உறிஞ்ச உதவும் ஸ்ட்ராவும் ஆளுக்கொன்று கொடுங்கள். ஸாஸர்களில் எண்ணி இருபது இருபது பட்டாணிகளை வைக்க வேண்டும். நீங்கள் ரெடி என்றதும், பட்டாணிகளை ஒவ்வொன்றாய் ஸ்ட்ராவினால் உறிஞ்சி விருந்தினர்கள் கப்பிலே போடுவார்கள். காற்றை உறிஞ்சினால் பட்டாணி ஸ்ட்ராவின் முனையில் ஒட்டிக் கொள்ளும்.



ஒரு ரகசியம்: கோப்பையை மடியில் தாழ வைத்தும் தட்டை உயரத் தூக்கிப் பிடித்துக்கொண்டும் செயல்பட்டால் 'காரியம் சீக்கிரம் முடியும். முதலில் எல்லாப் பட்டாணிகளையும் இடம் மாற்றுபவரே வென்றவர்.

## A முதல் Z வரை

A முதல் Z வரை உள்ள எழுத்துக்களில் ஆரம்பமாகும் பல நகரங்களின் பெயர்களை அந்த வரிசைப்படியே பட்டியல் போட்டு வைத்துக் கொள்ளவும். தெரியாதென்றால் அட்லாஸைப் பார்க்கவும்! ஏதோ ஒரிரு எழுத்துக்களில் ஆரம்பமாகும் நகரங்கள் அகப்படாவிட்டால் பரவாயில்லை. புகழ் பெற்ற ஊர்களையும் ஒருசில அதிகப் பிரபலமில்லாத நகரங்களையும் கலந்து பட்டியல் தயாரித்தால் சுவை கூடும். ஒரு முறைக்கு இரண்டு முறையாகப் பட்டியலைப் படிக்கவும். A - Amsterdam, B - Bombay, C - Copenhagen



என்றிப்படி கடைசிவரையில் படித்த பிறகு நீங்கள் படித்த வரிசைப்படியே விருந்தினரைத் தாளில் எழுதச் சொல்லுங்கள். மொத்தம் எத்தனை நகரங்கள் என்று கணக்குச் சொல்லி ஐந்து நிமிஷம் அவகாசம் கொடுங்கள். யார் அதிகமான ஊர்களை நினைவில் வைத்திருந்து எழுதுகிறாரோ அவரே வென்றவர்.

## சீசாவுக்குள் பந்தைப் போடு!

ஒரு ஹார்லிக்ஸ் பாட்டிலைத் திறந்த நிலையில் கையில்லாத நாற்காலியின் முதுகுப் பக்கத்தில் தரையில் வைக்கவும். நாற்காலி முதுகின் மேல் மட்டத்துக்கு நேராகக் கையை வைத்துக் கொண்டு பாட்டிலுக்குள் டேபிள் டென்னிஸ் பந்து ஒன்றைக் குறி பார்த்துப் போடவேண்டும். ஒவ்வொருவருக்கும் மூன்று 'சான்ஸ்'. மூன்று பந்துகளைத் தயாராய் வைத்துக்கொண்டால் சுலபமாயிருக்கும்.



ஒரு விருந்துக்கு முன்னால் விளையாடி மகிழ்ந்த அநுபவத்தில் எழுதியவர்: குட்டிகிருஷ்ணன்

---

## அறிவைச் சமதர்மம் செய்தானா ஆண்டவன்?

சோவியத் நாட்டில் எல்லாமே சமதர்ம சோஷலிஸத்துக்குள்தான் அடங்கும் என்றாலும் அறிவு, திறமை இவற்றைப் பொறுத்தவரை சமதர்ம சோஷலிஸத்தை மூட்டை கட்டி வைத்துவிட வேண்டியது தான் என்பதை நன்கு உணர்ந்திருக்கிறார்கள். கெட்டிக்காரர்கள்!

நாடெங்கிலும் பரவலாகக் கண்ணோட்டம் செலுத்திப் பலவித விஞ்ஞானத் துறைகளில் விசேஷத் திறமையை வெளிப்படுத்தும் இளைஞர்களைத் தனியாகப் பிரித்து அவர்களுக்குச் சிறப்புப் பயிற்சி அளிக்கிறார்கள். மாஸ்கோ பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த 'பௌதிக, கணிதப் பள்ளி' இத்தகைய நிலையங்களுள் ஒன்று.

பொதுவாகவே மாணவர்களின் வாழ்க்கை இன்னும் வசதி மிக்கதாய் அமைய வேண்டும் என்பதில் தற்போது சோவியத் அரசு கவனம் செலுத்தி வருகிறது. அவர்களுக்குத் தரப்படும் உபகாரத் தொகை (Stipend) சமீபத்தில் அதிகரிக்கப்பட்டிருக்கிறது. கல்லூரி மாணவர்கள் மாதம் 40 முதல் 60 ரூபிள்கள் வரை பெறுகிறார்கள். சராசரியில் சோவியத் யூனியனில் ஒருவரது மாதச் சம்பளமே 60 ரூபிள்கள்தான் என்பதை உணர்ந்தால் கல்லூரி மாணவர்கள் பெறும் உபகாரத் தொகை எவ்வளவு கணிசமானது என்பது புரியும். (12 ரூபிள் = 100 ரூபாய்)

## வேலையில்லாத் திண்டாட்டமா? மூச்!

கேள்வி: வேலையில்லாத் திண்டாட்டம் சோவியத் நாட்டில் உண்டா?

பதில்: கிடையாது. இன்று ஒரு வாலிபனோ இளநங்கையோ தன் படிப்பை முடித்தவுடன் எங்கே வேலைக்குப் போகவேண்டும் என்பது அவனுக்கோ அல்லது அவளுக்கோ தெரியும். நேராக அங்கு போனதும் புது வாழ்க்கை தொடங்க அந் நபருக்கு எல்லா வசதிகளும் செய்து தரப்படுகின்றன.

தனக்கு வேலை காத்திருக்கும் இடத்துக்குப் போகும்போது ஒவ்வொரு நபருக்கும் அவரது குடும்பத்துக்கும் பிரயாணப்படி அளிக்கப்படுகிறது. ஒரு மாதச் சம்பளம் முன்பணமாகவும் தரப்படுகிறது. புதிய குடியிருப்பும் தயாராய் உள்ளது.




"இளைஞனா இருந்து கொண்டு, பிச்சை எடுக்கிறாயே, போய் வேலை செய்து பிழைக்கப் படாதா?"

"நன்றாகச் சொன்னீங்க! எதற்காக உழைத்துப் பாடுபடுவது? போயும் போயும் இந்தப் பிச்சைக்காரப் பயலுக்குச் சோறு போடவா?"

---

"லீவு வேணும், சார்! எனக்குக் கல்யாணம்!"

"இப்போதானே லீவிலே போயிட்டு வந்தே! அந்த லீவிலேயே உன் கல்யாணத்தை ஏன் வைச்சுக்கல்லே!"

"அனுவசியமா தங்கமான லீவை வீணடிப்பானேன் என்றுதான்!"



# இன்றைய பிரச்னை.1



# எழில் மிகு சென்னை

(ஒவ்வோர் ஆண்டும் புதிய மேயர் பதவியில் அமர்ந்ததும் சென்னை நகரை அழகுபடுத்துவதே தமது லட்சியம் என்று கூறுவது வழக்கம். ஆண்டுக்கு ஒரு மேயர் வந்து கொண்டுதான் இருக்கிறார். ஆனால் சென்னை நகரம் என்னவோ பல பகுதிகளில் நரகமாகவே தான் காட்சியளிக்கிறது! நகருக்கு அழகூட்ட என்ன என்ன ஆக்கபூர்வமான நடவடிக்கைகள் எடுக்கலாம் என்று பிரபல கட்டட நிர்மாணக் கலை நிபுணர் திரு எஃப். பி. பிதாவடியானைக் கேட்கிறோம்.)

மக்களின் மனப் போக்கு மாற வேண்டும். இது நம் வீடு. இது துப்புரவாக இருக்க வேண்டும் என்று நினைக்கிற மாதிரியே இது நம்முடைய நகரம்: இது துப்புரவாக இருக்க நாமும் நம் கடமையைச் செய்ய வேண்டும் என்ற உணர்வு மக்கள் எல்லோருக்குமே ஏற்பட வேண்டும். மக்களின் அழகுணர்ச்சி பெருக வேண்டும். இன்று மக்களிடம் காணப்படும் மனப் போக்கு இதற்கு உகந்ததாக இல்லை.

**அப்படியென்றால், நகராட்சி மன்றம் - குறிப்பாக, மேயர், இது விஷயமாக ஒன்றுமே செய்ய முடியாதா?**

ஒரு வருட காலத்துக்குள் ஒரு மேயர் பிரமாதமாக என்ன செய்துவிட இயலும்? குறைந்தபட்சம் ஐந்து வருட காலமாவது ஒருவர் பதவியிலிருந்தால் உருப்படியாக ஏதாவது செய்யலாம்.......

**எனவே, மேயரின் ஆட்சிக்காலத்தை ஐந்து வருட காலத்துக்கு நீடிக்கச் செய்வது விரும்பத்தக்கது என்கிறீர்களா?**

ஆமாம். அது மட்டுமல்ல. ஒரு மேயர் பதவியை விட்டு விலகும் போது அப்பதவிக்கு அடுத்தாற்போல் வருபவர், தமக்கு முன்னால் இருந்தவர் போட்ட திட்டங்களை நிறைவேற்ற முயல வேண்டும். அரை குறையாக நிறைவேறிய திட்டங்களைப் பூர்த்தி செய்வதைத் தமது கடமையாகக் கருத வேண்டும்.

**நீங்கள் மேலை நாடுகளுக்கெல்லாம் சென்று வந்திருக்கிறீர்களே — அந்த அநுபவத்தைக் கொண்டு, நமது 'மெரினா'வை எப்படி அழகுபடுத்தலாம் என்று யோசனை கூறினால் பயனுள்ளதாக இருக்குமே?**

கடற்கரைச் சாலையின் மறுபுறத்தில் கலை அழகுள்ள கட்டடங்கள் அமைக்கலாம். கட்டடங்களின் முன்னால் திறந்தவெளி சுமார் பத்து அடி அகலத்துக்காவது இருக்க வேண்டும். அதில் தோட்டங்கள் அமைக்கலாம். தோட்டங்களைப் பராமரிப்பது சென்னையில் ரொம்ப சிரமம். ஆகவே, நிறைய மரங்கள் வைக்கலாம். கண் கவரும் ஸ்டால்கள், சிற்றுண்டி விடுதிகள் இவை அவசியத் தேவை. ஒவ்வொரு கட்டடமும் ஒரு தினுசாக இராமல் 'ஸ்கைலைன்' வரிசையாக அமைந்த கட்டடங்கள் கடற்கரைக்கு அழகளிக்கும். கடற்கரையில் கார்களையும் பிச்சைக்காரர்களையும் அனுமதிக்கக் கூடாது!

கண்ணுக்கினிய காட்சிகளைக் கண்டு மனம் மகிழ வேண்டும் என்றுதான் அயல்நாடுகளிலிருந்து மக்கள் வருகிறார்கள். பிச்சைக்காரர்கள் சூழ்ந்து கொண்டால் அவர்கள் உற்சாகம் இருந்த இடம் தெரியாமல் போய்விடுகிறது! அப்புறம் அயல்நாட்டவர் வருவதில்லையே, அந்நியச் செலாவணி கிடைக்கவில்லையே என்று பிரலாபித்துப் பயன்.......?

**கடற்கரையில் மரங்கள் பயிர் செய்ய வேண்டும் என்கிறீர்கள். மௌண்ட் ரோட் போன்ற பல பெரிய சாலைகளில் இருந்த மரங்களையெல்லாம் வெட்டி வீழ்த்தி விட்டார்களே?**

சாலைகளை அகலப்படுத்துவதற்காக மரங்களை வெட்ட வேண்டியது அவசியமானால்



அவற்றை வெட்டுவதை நாம் ஆட்சேபிக்கவில்லை. ஆனால், மறுபடியும் புதிய மரங்களை இருமருங்கிலும் இயன்ற வரையில் பயிராக்க வேண்டும். விரைவில் வளரக்கூடிய மரங்களைப் பயிராக்கலாம். நிறையப் பூத்துச் சொரியும் மரங்கள் கண்ணுக்கு இனிமையாகவும் மனத்துக்கு இதமாகவும் இருக்கும்.

**போக்குவரத்துக்கு அனுகூலமாகச் சாலைகளை விரிவுபடுத்த வேண்டியது அவசியந்தானே?**

பிற நாடுகளுடன் ஒப்பிட்டால் சென்னை நகரின் போக்குவரத்து அப்படியொன்றும் பிரமாதமானதன்று. ஹாடோஸ் சாலையிலும், காலேஜ் சாலையிலும் கார், பஸ்கள் ஓடுவது மிகக் குறைவே. இங்கு சாலையை ஒட்டியுள்ள நடைபாதைகளைச் சீர்ப்படுத்துவதில் பணத்தைச் செலவு செய்ய வேண்டிய அவசியம் இப்போது என்ன வந்துவிட்டது? மழைத் தண்ணீர் ஓடுவதற்கான சாக்கடைகளை உடனடியாக அமைப்பதுதான் இப்போதையத் தேவை. சிறிதளவு மழை பெய்தாலும் போதும், குட்ஷெப்பர்ட் பள்ளிக்கு எதிரில் சாலை முழுதும் கணுக்காலளவுக்கு நீர் தேங்கி விடுகிறது. இது வடிய, மூன்று அல்லது நான்கு நாட்கள் ஆகிறது. 'பணமில்லை' என்று நகராட்சி மன்றம் கூறும்போது, உடனடியாகச் சீரமைக்க வேண்டியவற்றை முதலில் கவனித்துச் செய்தால் என்ன என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

**நகரின் அழகு எப்படியெல்லாம் குலைக்கப்படுகிறது என்பதைக் கண்டறிந்து அவற்றைத் தடுப்பதன் மூலமே நகருக்கு ஓரளவு எழிலூட்ட முடியுமல்லவா? உதாரணமாக, நகரில் பள்ளமாக உள்ள பல பகுதிகளில் லாரி லாரியாகக் குப்பையைக் கொண்டுவந்து கொட்டுகின்றனர். உடனடியாக மண்ணைப் போட்டு மூடாததால் துர்நாற்றம் வீசுகிறது. சுகாதாரத்துக்கும் கேடு விளைவிக்கிறது. பார்க்கவும் அருவருப்பாக இருக்கிறதே? பன்றிகளும், எருமை மாடுகளும் மிகுதியாக இருப்பதும் நகரின் அழகையும் சுகாதாரத்தையும் கெடுக்கவில்லையா?**

குப்பை கொட்டும் இடத்தில் மண்ணைப் போட்டு மூடச் செலவு அதிகமாகிறது என்பது உண்மைதான். ஆனால், குப்பையை எரிக்கவாவது செய்யலாம். இதற்குச் செலவாகாது. மாடுகளை நகருக்கு வெளியே கொண்டு போய் அங்கு அவற்றைப் பராமரிக்க ஆவன செய்ய வேண்டியது அவசியந்தான். இதற்கு ஆரம்பத்தில் எதிர்ப்பு இருக்கலாம். ஆனால் நாளடைவில் நிலைமை சரியாகிவிடும். 'அழகுணர்ச்சி' என்பது இதுதான் என்று விவரிக்க முடியாதது. நகர மக்களின் அழகுணர்ச்சி வேறாகவும் கிராம மக்களின் அழகுணர்ச்சி வேறாகவும் இருக்கும். பழக்கம் காரணமாக இது வேறுபடுகிறது. இரண்டு அடிக்கு இரண்டடி அகல நீளமுள்ள டாய்லெட் நகர மக்களுக்குப் பழக்கமாகிவிட்டது. ஆனால் கிராம மக்களுக்குத் திறந்தவெளி 'டாய்லெட்' பழக்கமானது. மீனவர்களுக்கும்தான். எனவே கிராமத்திலிருந்து நகருக்கு வந்தவண்ணம் இருக்கும் மக்கள் வீதிகளை அசுத்தம் செய்வது சகஜமாக இருக்கிறது. இதையெல்லாம் சட்டம் போட்டுத் தடுத்து விடுவது அவ்வளவு எளிதன்று. 'பொது 'டாய்லெட்' சுத்தமாகவும் பார்க்க லட்சணமாகவும் இருந்தால் வீதிகள் அசுத்தமாவது குறையும். பொது அலுவலகங்களில் பியூன்கள் உபயோகிக்கும் 'டாய்லெட்' அறையையே பெரிய அதிகாரிகளும் உபயோகிக்கத் தலைப்பட்டால் அது நிச்சயம் துப்புரவாக இருக்கும்.

**நம் நாட்டில் அழகான நகரங்கள் யாவை? அவை பராமரிக்கப்படும் முறையைப் பின்பற்றிச் சென்னை நகரையும் எழில் மிக்க நகரமாக்க முனையலாமா?**

பம்பாய் நகரம் முன்பெல்லாம் மிக அழகிய நகரமாக விளங்கிற்று. இன்று புதுதில்லிதான் முதலிடம் வகிக்கிறது. ஜனசங்கம் இந்தத் துறையில் தீவிரமாகச் செயலாற்றியுள்ளது பாராட்டுக்குரியது.

**மக்களின் மனோபாவம் மாறவேணும் என்றீர்கள். இன்னும் ஓரிரு உதாரணங்கள் தர முடியுமா?**

சில வெளிநாடுகளில் மரக் கிளைகளை வெட்டுவோருக்குக் கடுமையான தண்டனை விதிக்கப்படுகிறது. இங்கு மரக் கிளைகளை வெட்டுவோரைத் தடுக்க முற்பட்டால், 'ஐயோ பாவம்! ஏழை! விட்டு விடுங்கள்!' என்று குற்றம் புரிபவனுக்குச் சாதகமாகப் பல குரல்கள் எழுவது சகஜம். ஆடு ஒன்று ஒரு வீட்டுத் தோட்டத்தில் புகுந்து செடிகளை நாசம் செய்கிறதென்று வைத்துக் கொள்வோம். அதனைப் பிடித்து 'பவுண்டு'க்கு அழைத்துச் சென்றால், ஆட்டின் உரிமையாளருக்குத்தான் ஆதரவு காண்பிப்பார்கள் பலர். வீதியில் திரியும் மாட்டைப் போலீசார் ஓட்டிச் சென்றால், 'ஐயோ, பாவம்!' குரல்கள் பல எழும்! இந்த நிலையில் அதிகாரிகளும் சட்டத்தை நிலைநாட்ட முடிவதில்லை. இதனால்தான் சொல்லுகிறேன் — மக்களின் மனோபாவம் மாறினாலொழிய இப்பிரச்னைக்கு விமோசனம் ஏற்படுவது எளிதன்று.

**கூவத்தை அழகுபடுத்துவது பற்றித் தங்கள் கருத்தென்ன?**

கூவத்தின் கரைகளில் உள்ள பகுதிகளை விட்டு மனைகளாக விற்பனை செய்திருந்தால் அதன் மூலம் நல்ல வருவாய் கிடைத்திருக்கும். அந்தப் பணத்தைக் கொண்டு இன்னும் பல அழகு வளர்ச்சித் திட்டங்களை மேற்கொள்ளலாம். இரு கரைகளிலும் அழகிய வீடுகள் அமைந்தால் அதுவே கூவத்துக்கு அழகூட்டும்.

**கரையோரப் பகுதியில் பூங்கா அமைக்கப் போவதாகச் சொல்லுகிறார்களே?**

நான்தான் சொல்லி விட்டேனே—சென்னை நகரில் பூங்காக்களைப் பராமரிப்பது ரொம்பச் சிரமமான காரியம் என்று. அதற்குப் பொருட்செலவு மிகுதியாக ஆகும். நாளடைவில் பராமரிப்பில் கவனம் குறைந்து விடும் — நிதி வசதி இல்லாததால். என் அபிப்பிராயம், சென்னை நகரை அழகுபடுத்தும் பணியை இங்கு கொஞ்சம் அங்கு கொஞ்சம் என்று பரவலாகச் செயல்படுவதைவிடப் பகுதி பகுதியாகப் பிரித்துத் திட்டமிட்டுச் செயல்படுவது பலனளிக்கும். ஒரு பகுதியைச் சீர்திருத்திய பின் அடுத்த பகுதியை எடுத்துக் கொள்ள வேண்டும். நம் பேட்டை இன்னும் நன்றாக இருக்க வேண்டும் என்ற போட்டி ஏற்பட்டால் அழகு பெருகும். பேட்டி: **'பாணன்'**

**8. படகில் பிரமீளா**

**கொ**டைக்கானலுக்கு அவர்கள் வந்து மூன்று நாட்கள் ஆகிவிட்டன. மாலை நாலரை மணி குமாருக்குப் பத்மநாபன் குடும்பம் கொடைக் கானல் ஏரி அருகே இருந்தது. 'ஜிக் ஸா பஸில்' ஒன்றின் படத்தைக் கலைத் துப் பல துண்டங்களாக்கி, அதில் ஒரு துண்டத்தை மட்டும் தனியே எடுத்து வைத்தால், அதன் எல்லைக் கோடு எத்தனை வளைவுகளுடன் காணப் படுமோ அப்படி, அந்த ஏரியின் கரை நெளிவு சுளிவுகளுடன் இருக்க, அந்தக் கரையை யொட்டிஹற்போல்

# "ஸைக்கோ ஸாரநாதன்"



**கி.ராஜேந்திரன்**



அமைந்திருந்த பாதையும் அதே அள வுக்கு வளைவுகளுடன் விளங்கியது. ஒரு முறை சுற்றி வந்தால் மூன்று மைல். நடக்கத் தெம்பு உள்ளவர்களுக்கு அரு மையான நடைபாதை; உன்னதமான தேகப்பயிற்சி.

இவர்கள் போனபோது வானம் இலே சாக இருட்டிக் கொண்டு வந்தது. மழை கொட்டும் என்பதற்கான அறிகுறியும் இன்றி, இதமான வெய்யிலை உணரலாம் என்ற ஆசைக்கும் இடம் தராமல் ஓர் இரண்டுங்கெட்டான் நிலை. சிலுசிலு வென்று இலேசாகக் காற்று வீசி முகத் திலும் கரங்களிலும் பட்டதால் உடலைக் கவ்விக் கொண்டிருந்த ஸ்வெட்டரின் கதகதப்பை நன்றாக ரசிக்க முடிந்தது. ஆடை நனையாத அளவுக்குத் தூற்றல் இங்கொன்றும் அங்கொன்றுமாய் விழுந்தது. வானம் பன்னீர் தெளித்து ஏரியுடன் இவ்வாறு விளையாடியபோது, ஏரியில் மத்தாப்பூப் பொறிகள் தெறிப் பது போல் நீர்த் துளிகள் சிதறின. 'வானம் கூடலுக்கு முன்னோடியாகச் சரஸமாடுவதால் ஏரிக்கு மெய்சிலிர்ப்பு உண்டாகிறதோ?' என்று எண்ணத் தோன்றியது.

''எத்தனை தண்ணி பாரு! எத்தனை தண்ணி பாரு!'' என்று அகன்று பரந்து கிடந்த ஏரி நீரை, கரத்தின் வீச்சிலே முழுமையாகச் சுட்டிக் காட்டி அதிசயித் தான் விசு. அலை எழும்பாமல் அமைதி யாக இருக்கும் நீர்ப்பரப்பை இதற்கு

முன் இத்தனை பெரிய அளவில் அவன் கண்டதேயில்லை.

ஏரியைச் சுற்றி நெடிதுயர்ந்திருந்த யூகலிப்டஸ்களைப் பார்த்து விட்டு, ''அப்பா! இங்கே மரங்களெல்லாம் எத்தனை உயரம் வளர்கின்றன!'' என்று ஆச்சரியப்பட்டாள் அனசூயா.

''ஏன் இந்த நகரம்தான் எத்தனை உயரத்தில் இருக்கிறது! ஏழாயிரத்துச் சொச்சம் அடி இல்லையா!'' என்று கணக்குச் சொன்னாள் மீனு. பஸ்ஸில் உயரே ஏறி வந்தபோது வழியில் ஆங்காங்கே இருந்த அறிவிப்புப் பலகைகளைக் கருத்துடன் கவனித்திருந்தாள் அவள்.

''ஊரும் அதில் உள்ள மரங்களும் உயர்ந்திருப்பது போல் மனித மனங்களும் உயர்ந்தால் தேவலாம்'' என்றார் பத்மநாபன்.

''பிளீஸ்! வேண்டாம்! தத்துவம் பேசாதீங்கோ! எனக்குத் தலைவலி வந்துவிடும்'' என்றாள் அம்புஜம்.

''இதையே சினிமாவில் சிவாஜி கணேசன் சொன்னால் 'ஆகா! சூச்ரூகு !' என்றெல்லாம் அனுபவிப்பாய்.''

''ஆனால் நீங்கள்தான் சிவாஜி கணேசன் இல்லையே? அதனால் குறைப்பட்டுக் கொள்ளவும் நியாயம் இல்லை'' என்றாள் அம்புஜம்.

''நான் சிவாஜியா இல்லாமல் போகலாம்; ஆனால் என்னை மாதிரி ஒருத்தன் எழுதித் தரதைத்தான் அவர் சினிமாவிலே பேசறார்! அதை மறந்துடாதே!'' என்றார் பத்மநாபன்.

''சரி, சரி, இப்போ படகிலே போகப் போறேளா? இல்லே குதிரை சவாரியா?'' என்று குழந்தைகளைப் பார்த்துக் கேட்டாள் அம்புஜம்.

''போட் போட்'' என்று மீனுவும் அனசூயாவும் பரபரக்க, ''குதிரை, கு தி ரை !'' என்று விசு துள்ளிக் குதித்தான்.

''முதல்லே போட், அப்புறம் ஹார்ஸ் ரைட்'' என்று சமரசம் செய்ய முயன்றாள் அனு.

''முதல்லே குதிரை சவாரி; அப்புறம் போட்'' என்றான் விசு விடாக்கண்டனாக.

''குழந்தைகளைப் போய்க் கேட்டுண்டிருந்தால் எப்படி? நீங்க ஒரு முடிவெடுக்கணும்'' என்றாள் அம்புஜம்.

''அழகுதான் போ! குழந்தைகள் அபிப்பிராயத்தைக் கேட்டது நீ!'' என்று ஞாபகப்படுத்த முற்பட்டார் பத்மநாபன். அதற்கு முன்பாகவே அம்புஜத்தைச் சங்கடமான நிலையிலிருந்து மீட்கவென்றே வந்தவர்போல் படகு கிளப் அதிகாரி ஒருவர் சம்பாஷணையில் குறுக்கிட்டார்: ''போட் வேணுமா ஸார்? பத்துநிமிஷம் காத்திருக்கணும்.''

''அதுக்கென்ன? இப்படி பெஞ்சில் உட்கார்ந்திருந்தால் போச்சு'' என்றார் பத்மநாபன். ஐந்து பேரும் வரிசையாக அமர்ந்து ஐந்து நிமிஷம்கூட ஆகியிருக்காது; இரண்டே பேர் ஏறக்கூடிய ஒரு சிறு படகு கரையை நோக்கி வந்தது. நீரைக் கிழித்துச் செல்ல வசதியாக மெலிந்து நீண்டிருந்த அதனை மிக லாகவமாகச் செலுத்திக் கொண்டு வந்தாள் எழிலார்ந்த நங்கை ஒருத்தி. அவ



ளுடைய அழகைக் கண்கள் கவனிப்பதற்கு முன்பாக அவளுடைய பகட்டான அலங்காரத்தையே பார்த்தன. அலங்காரத்தை மனத்தில் பதிய வைத்த பிறகுதான் அழகு, 'இதோ நானும் இருக்கிறேன்' என்று தயக்கத்துடன் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டது!

அந்தப் படகு கரை தட்டச் சுமார் பத்துப் பதினைந்தடி தூரம் இருந்தபோது, ''அடே! பிரமீளான்னு வந்திருக்காள்!'' என்று வியப்பு மிகுதியில் கூவியவாறு எழுந்தாள் அம்புஜம்.

அடுத்த கணம் விசுவைத் தவிர மற்ற மூவருக்கும்கூடப் புரிந்து விட்டது. பிரபல சினிமா நட்சத்திரம் பிரமீளாவை மிக அருகில் சந்திக்கும் பாக்கியம் தங்களுக்குக்



கிடைத்து விட்டதென்று. விசுவுக்கு மட்டும் பாவம், அந்தச் சந்திப்பின் மகத்துவம் புரியும் வயதாகவில்லை, இன்னும்!

படகு கரையோரம் வந்ததும், போட் கிளப் அதிகாரி ஒருவர் பெருமிதம் பொங்கும் முகத்துடன் அதை இழுத்துப் பிடித்துக் கொண்டு, ''பார்த்து இறங்குங்க... பார்த்து... பார்த்து'' என்று ரொம்ப அக்கறையுடன் எச்சரிக்கை செய்தார்.

அம்புஜம் கிடைத்த வாய்ப்பைக் கைநழுவ விடாமல் சரேலென்று இரண்டடி முன்னால் எடுத்து வைத்தாள். ஆடும் படகிலிருந்து நிலையான தரைக்குத் தடுமாறாமல் பிரமீளா வந்து சேரக் கை கொடுத்து உதவினாள்.

''தாங்க்ஸ்'' என்றாள் பிரமீளா.

''நன்னாயிருக்கு, உங்களுக்கு இந்தச் சின்ன உபகாரமாவது பண்ணக் கொடுத்து வைத்திருந்ததே எனக்கு'' என்றாள் அம்புஜம். அத்துடன் விடவில்லை. இந்தச் சந்தர்ப்பம் போனால் வராது என்பது அவளுக்குத் தெரியாததா? தொடர்ந்தாள்: ''உங்க விட்டுக்கு மூணாவது விட்டிலே சிவராமகிருஷ்ணன்னு இருக்கார் இல்லையா? அவர் ஒய்ஃபை எனக்கு நன்னாத் தெரியும். பள்ளிக்கூடத்திலே நாங்க ஒண்ணாப் படிச்சவா. உங்க விட்டுக்குக்கூட ஒருதரம் நவராத்திரியின்போது வந்திருக்கிறதா நளினி சொல்லியிருக்காள்.''

''அடுத்த நவராத்திரிக்கு நீங்களும் வாங்க, அழைப்பு அனுப்பறேன்'' என்று சிரித்தாள் பிரமீளா.

'வழியில் நின்று கண்டவர்களுடன் என்ன பேச்சு?' என்ற பாவனையில் ''ம்...ம்... போகலாம்'' என்று விரட்டுவது போல் சொன்னாள் பிரமீளாவின் தாயார் கனகம்.

அதைப் பொருட்படுத்தாமல் அம்புஜம், ''அவசியம் வரேன்'' என்று வாக்களித்து விட்டு, ''அது சரி, என்ன இவ்வளவு சீக்கிரம் ரோயிங் பண்ணக் கிளம்பித் திரும்பியும் வந்துட்டேள்? மணி நாலரைதானே ஆறது?'' என வினவினாள்.

''சாயந்திரம் ஆனால் கூட்டம் சேர்ந்து விடுகிறது. உங்களுக்குத் தெரியுமே, சினிமா நட்சத்திரம்னா மொய்த்தெடுத்து விடுகிறார்கள். அதிலேருந்து தப்பிக்கத்தான் சீக்கிரமாக வருகிறேன் ஏரிக்கு. துடுப்பு வலிப்பது நல்ல எக்ஸர்ஸைஸ். கொடைக்கானலில் சும்மா உட்கார்ந்திருந்தால் உடம்பு ஊதிடும். அப்புறம் இளைக்கப் படாதபாடு படணும்.''

''மேலும் இங்கேதான் மத்தியான நேரமானாலும் வெய்யில் தெரியாதே. அதனால்தான் தைரியமா கிளம்பி வந்துட்டேள். ஆனால் உடம்பு கறுத்துடும். ஜாக்கிரதையாப் பார்த்துக் கோங்கோ!''

''கறுத்தால் என்ன? மேக்கப் மேன்னு ஒருத்தர் எதுக்கு இருக்கார்?'' என்றாள் பிரமீளா, புன்னகை செய்து.

''போவோமா?'' என்று பொறுமை இழந்த தொனியில் கேட்டாள் அவள் தாய் கனகம்.

''போக வேண்டியதுதான். சரி, உங்க விலாசம் கொடுங்க. இல்லாட்டி நவராத்திரி அழைப்பு உங்களுக்கு எப்படி அனுப்பறது?''

''பார்த்தேளா! உங்களைப் பார்த்துப் பேசின சந்தோஷத்திலே எல்லாம் மறந்து போறது'' என்ற அம்புஜம் கணவர் பக்கம் திரும்பி, ''ஏன்னா உங்க விஸிட்டிங் கார்ட் ஒண்ணு கொடுங்கோளேன்'' என்றாள்.

பத்மநாபன் பர்ஸிலிருந்து ஒரு விஸிட்டிங் கார்டை எடுத்துக் கொண்டிருக்கும்போதே, ''அன்னம் பத்திரிகையின் துணை ஆசிரியராக இருக்கிறார். பத்மநாபன்னு கேள்விப்பட்டிருப்பேளே? பத்மம் என்கிற புனைபெயர்தான் பிரசித்தம்'' என்று சொல்லிக் கொண்டு போனாள் அம்புஜம்.

''ஓ! ரொம்ப சந்தோஷம்'' என்று கரம்குவித்து முகமன் கூறினாள் பிரமீளா.

''தொடர் கதைக்கிடையிலே ஒரே ஒரு அத்தியாயம் நீங்க எழுதியிருந்தேளே, படிச்சேன்'' என்றார் பத்மநாபன், தலையை இலேசாக ஆட்டியபடி. ஒவ்வொரு சினிமா நட்சத்திரமும் ஒவ்வொரு வாரம் எழுதி வளர்த்த தொடர் கதையை அவர் குறிப்பிட்டார். ''இலகம் பத்திரிகையிலே எழுதினேள் இல்லையா? கலாஸ்ரீயும் ஜெய்வீராவும் எழுதினதுக்கு இடையிலே ஒரு வாரம் நீங்க எழுதியிருந்தேளே, நன்னாத்தான் இருந்தது; என்ன குறை அதிலே?''

பிரமீளா கலகலவென்று வெள்ளை உள்ளத்தோடு சிரித்தாள். ''ஒரு விஷயம் நன்றாயில்லை, பிடிக்கவில்லை என்பதை இதைவிட நாசூக்காக வேறு ஒருத்தரும் சொல்ல முடியாது ஸார்!'' என்றாள்.

''அடுத்தாற்போல் எந்தப் பத்திரிகையில் உங்கள் தொடர்கதையை எதிர்பார்க்கலாம்?'' என்று கிண்டலை மறைக்காத தொனியில் கேட்டார் பத்மநாபன்.

''ரொம்பக் கோபமா இருக்கிங்க போலிருக்கே'' என்றாள் பிரமீளா.

''நான் என்ன மகாத்மா காந்தியா? எனக்கு ஏன் கோபம் வரக் கூடாது?'' என்றார் பத்மநாபன். ''சினிமாவில் நான் நடிக்க முன்வந்தால் சிரிப்பாயிருக்காதா உங்களுக்கு?''

# ...இட்டால் இதமளிப்பு



# டெட்டால் அரவணைப்பு

**காயங்களைத் தூய்மைப் படுத்துவதோடன்றி ஆற்றவும் துணை டெட்டால்.**

பட்ட காயம் எதுவாயினும் இட்டுப் பயன்காணத் தட்டாமல் உதவுவது டெட்டால். உங்கள் டாக்டரே கூறுவார்: ஒழுங்குதவறாமல் காயத்தின்மீது அடிக்கடி இட்டால், கிருமிகள் அணுகாமல் காக்க உதவுவது டெட்டால் ... பரிபூரணமான ஆன்ட்டிஸெப்டிக் பாதுகாப்பு அது.

குளி நீரிலே இட்டால்: புத்துணர்வூட்டுகிறது டெட்டால்.
க்ஷவரத்திற்கான நீரிலே: பாதுகாக்கிறது டெட்டால்.




**புதுமைக் கோல டெட்டால் - பரிபூரண ஆன்ட்டிஸெப்டிக் பாதுகாப்பு**

பண்டைக்காலமாக பழனி சித்தர் வைத்தியசாலே உண்மையான முறையான நேர்மையான வைத்திய சேவை புரிகிறது!

## வாலிப - வயோதிக - அன்பர்களே!

பழனி சித்தர் மருந்துகளே பாரில் உயர்ந்தது என்பது உலகம் அறிந்த உண்மை!

---

பிரபல பழனி

வைத்தியதிலகம் வைத்தியராஜ்



**Dr. S. காளிமுத்து**
R.M.P. (IND) V.V.C. A.M.I.H.

நீங்களின் உடல் மிகவும் பலமில்லாமல் இளைத்து உடல் வலுவில்லாமல் குடும்ப வாழ்க்கையில் நிம்மதியில்லாமல் வயோதிகரைப்போல் களைப்பு மேலிட்டு வேலைகளைச் சரிவர செய்ய இயலாமை—இதனால் கஷ்டப்படுகிறீர்களா? வாலிப வயதில் தெரிந்தும், தெரியாமலும் செய்கிற தவறுதல்களே, இப்போது உடல் கெட்டு பலஹீன மடைந்து ரத்தக் குறைவு, சோர்வு, தலைவலி, உஷ்ணம், சோம்பல், கைகால் அசதி, பலஹீனம், உடல்வலி, களைப்பு, தூக்கக் குறைவு, ஆயாசம் பீதி, வெட்கம், பயம், வெறுப்பு உண்டாகி தாய் தந்தையரிடமும் மற்றவர்களிடமும் சொல்ல முடியாமல் மன வேதனையும் கஷ்டமும் அடைந்து, நிம்மதியில்லாமல் வாழ்கிறீர்கள். மேற்படி காரணங்களால் உடல் நலம் பாதிக்கப்பட்டவர்களும், கவலைப்படவேண்டாம், இம்மாதிரியான வியாதியஸ்தர்கள் 74 வருட அனுபவம் பெற்ற நமது சாஸ்த்ரீய முறையான மிக உயர்தரம், உயர்தரம், முதல் தரம், இரண்டாந்தரம் எதுவாகிலும் சாப்பிட்டாலே எடை அதிகப்பட்டு, இரத்த விருத்தியுடன் உடல் பலமடைந்து புதிய சக்தி, புத்துணர்ச்சி பெற்று நிம்மதியான வாழ்க்கை வாழலாம். எவ்விதமான பத்தியமும் இல்லை, ஆர்டரில் தேவைப்பட்ட மருந்தின் விலைகளைக் குறிப்பிட்டு எழுதவும். வி.பி.பி. தபால் பார்சலில் பெற இன்றே எழுதுங்கள். சென்னையிலும், பழனியிலும், கேம்புகளிலும் நேரில் பெறலாம். மருந்தும் விருந்தும் மூன்று நாள் என்பது பழமொழி. மருந்து உபயோகிக்கும்பொழுதே பலனைக் காணலாம். வி. பி. பி. செலவு இலவசம். வெறும் கடிதம் கவனிக்க இயலாது. சித்த வைத்திய மருந்துகளும், பழனி மருந்துகளும் நல்ல பயன் தரும் என்பதை அறியவும்.

ஒரு மாதம் சிகிச்சை மருந்துகள்: மிக உயர்தரம் ரூ 90
உயர்தரம்: ரூ. 42. முதல் தரம் ரூ. 33. இரண்டாந்தரம்: ரூ. 24

**எங்கள் மாபெரும் வெற்றிகரமான மாதாந்திர சுற்றுப்பயண தேதி விலாசங்கள் கவனிக்கவும்**

கிளை: 41, நைனியப்பன் தெரு, மண்ணடி, சென்னை - போன்: 21448

சென்னைக் கிளை ஆபீஸில் 1ந் தேதி முதல் 7 வரை: மீண்டும் 15ந் தேதி முதல் 21 வரை நேரில் விஜயம்

GOVT REGD. T. M. No. 204341 — REGD. 15443

வைத்திய திலகம் வைத்திய ராஜ் டாக்டர் S. காளிமுத்து

## பழனி சித்தர் வைத்தியசாலே (K) பழனி S. I.

போன்: 316 (தியேட்டர் ஸ்ரீ ரங்கராஜா பக்கம்) தந்தி: சித்தர்

''அப்படி யிருக்கும்போது சினிமா நடிகையான நான் எதற்காகப் பேனு பிடிக்கணும்னு கேட்கிறீங்க?''

''நீங்க எழுதறதிலே தப்பில்லே அம்மா. ஆனால் எழுதணும் என்கிற வேகமும் துடிப்பும் பரபரப்பும் உங்களுக்கே ஏற்பட்டு எழுதணும். எவனே கேட்டுண்டான் என்கிறதுக்காக எழுதறதும் ஓர் எழுத்தா?''

''ஸார்! உங்களுடைய முதல் கேள்விக்கு உங்களுடைய இரண்டாவது கேள்வியே பதில் சொல்லுடுச்சு. நான் எழுதக்கூட இல்லே, என் பெயரைப் பயன்படுத்திக் கொள்ள அனுமதிச்சேன் அவ்வளவுதான். இப்போ இதுக்குப் பதில் சொல்லுங்க;—நான் இப்படி செய்ததாலே தமிழ் இலக்கியத்துக்குப் பெரிய ஆபத்து ஏதோ வந்து விட்டதாக உண்மையிலேயே நீங்க நம்பறீங்களா? நான் எழுதினதாகச் சொல்லப்பட்டதே அது மாதிரி நூறு கதைகள் வரலாம்; ஆனால் 'பத்மம்' என்ற பெயரிலே நீங்க ஒரு நாவல் எழுதினால் போதும். அந்த ஒரு நாவல் இந்த நூறு தொடர்கதைகளால் ஏற்பட்ட இழுக்கைத் துடைத்து எறிந்து விடும். ஆக மொத்தம் எதுக்காக நீங்க பயப்படறீங்க?''

''பயப்படத்தான் வேண்டும், தாயே!'' என்றார் பத்மநாபன்.

''ஸார்! தயவுசெய்து என்னைத் 'தாயே' 'அம்மா' என்றெல்லாம் கூப்பிடாதீங்க! எனக்குப் பயமா யிருக்கு!''

''பெண்கள் எல்லோரையும் அன்னையாகப் பாவிப்பது நமது பண்பாடு. வயது வந்த யாரையும் தாயே என்று அழைப்பதில் தவறில்லையே?''

''பண்பாடு இருக்கட்டும் ஸார்; என் ஸ்டார் வால்யூ பற்றித்தான் எனக்குக் கவலே! 'தாயே, தாயே!' என்றால் ஒவ்வொரு வருஷமும் பட்ஜெட் வெளியானவுடன் பங்கு மார்க்கெட் சரியற மாதிரி என் ஸ்டார் வால்யூவும் சரிஞ்சுடும். பிரமீளான்னே கூப்பிடலாமே?''

''சரி பி ர மீ ளா! அப்படியே ஆகட்டும்.''

''நீங்க ஏதோ சொல்ல வந்தீங்க; குறுக்கே பேசிட்டேன்...''

''ஆமாம், உங்களுக்குப் பதிலா ஒருத்தரைக் கதை எழுத அனுமதிக்கிற நீங்கள், உங்களுக்குப் பதிலாக உங்க செக் புஸ்தகத்தில் உங்கள் கையெழுத்தைப் போட ஒருவரை அனுமதிப்பீங்களா?''

''நான் ஏமாந்து போனால்தான் ஒருத்தர் அந்த மாதிரி செய்ய முடியும்.''

''செக் புத்தக விஷயத்திலே நீங்கள் ஏமாந்து போனால்தான் நடக்கும்.










ஆனால் கதை எழுதற விஷயத்திலே உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்ளவும் பிறரை ஏமாற்றவும் தயாராகி விடுகிறீர்களே, ரொம்பச் சுலபமாக!''

''அதிலே எனக்குப் பணம் நஷ்டம். இதிலே யாருக்கு என்ன நஷ்டம்?''

''சமூகத்துக்கே நஷ்டம். தரக் குறைவான ஆபாசமான கதை கட்டுரைகளை எழுதுகிறவர்கள்கூட உங்களைப் போல் தான் வாதம் புரிகிறார்கள். 'இந்த ஒரு கதையை நான் எழுதி விட்டால் சமூகம் கெட்டுக் குட்டிச் சுவராகப் போய் விடப் போகிறதா?' என்று கேட்கிறார்கள். ஒவ்வொருவரும் இப்படியே சமாதானம் சொல்லிக் கொண்டு ஆபாசக் களஞ்சியங்களை உருவாக்குகிறார்கள்.''

'' நானும் தெரியாமல்தான் கேட்கிறேன், ஒரு மோசமான கதையைப் படிப்பதாலோ ஓர் ஆபாச சினிமாவைப் பார்ப்பதாலோ மனிதன் மட்டமானவனாகிவிடுவானா சார்? அப்படியானால் சமூகத்தில் கயவர்களைத் தவிர வேறு யாரையுமே பார்க்க முடியாது!''

''உங்களுடைய வாதத்தை நான் ஒப்புக்கொள்வதாகவே வைத்துக் கொள்வோம். தரக் குறைவான எழுத்தினால் சமூகத்துக்குக் கேடு இல்லை என்றால், உயர்தரமான எழுத்தினால் சமூகத்துக்கு நன்மையுமில்லை என்றாகிறது. அதாவது எழுத்துக்குச் சக்தியே இல்லை என்று அர்த்தம்!

''ஆனால் சரித்திரம் அப்படிச் சொல்லவில்லை, பிரமீளா! அடிமைத்தனை ஒழிய 'அங்கிள் டாம்ஸ் காபின்' என்ற நாவல் பெருந் துணை புரிந்ததாகச் சரித்திரம் கூறுகிறது. பங்கிம்சந்திரரின் எழுத்து வங்கத்தில் புரட்சிகரமான மாறுதல்களை ஏற்படுத்தியது. பாரதியாரின் பாடல்கள் சுதந்திரக் கனலைக் கொழுந்து விட்டு எரியச் செய்யவில்லையா? கல்கியின் சிவகாமியின் சபதம் பிரசுரமான பிறகு அதன் காரணமாக எத்தனை இல்லங்களில் சதங்கை ஒலி கேட்க ஆரம்பித்தது தெரியுமா? அந்த நாவலால் தமிழகத்தின் தொன்மையான சிற்பக் கலையில் புதிய ஆர்வம் மக்களுக்கு உண்டாக வில்லையா? அரிஸ்டாட்டலும் ஸாக்ரட்டீஸும் பிளேட்டோவும் எழுதியவை இன்றளவும் மனித நாகரிக வளர்ச்சிக்குத் துணை புரிந்து வருகின்றன அல்லவா? ஆக, எழுத்துக்குச் சக்தி இல்லை என்று எப்படிக் கூற முடியும்?''

உணர்ச்சியுடன் அவர் பேசி முடித்த போது பிரமீளா சுற்றுச் சூழலில் இருந்த மல்லிகைகளுடன் போட்டி யிட்டவாறு மலர்ந்து நிற்க, பத்மநாபன் கரத்திலிருந்த விஸிட்டிங் கார்டை எடுத்து அவளிடம் தந்தாள் அம்புஜம். ''இவர் எப்போதுமே இப்படித்தான்; உணர்ச்சி வசப்பட்டு விட்டால் கொஞ்சம் படபடன்னு பேசிவிடுவார். அதை ஒண்ணும் நீங்க பொருட்படுத்த வேண்டாம். அடுத்த தடவை நவராத்திரி கொலு வைக்கிறச்சே என்னை மறக்காதீங்கோ'' என்றாள்.

பிரமீளா இளநகை புரிந்து, ''இவருக்கா மாமி நான் நவராத்திரி அழைப்பு அனுப்பணும்? உங்க பேரையும் இதில் எழுதித் தந்துட்டா மறக்காமல் இருக்கலாம்'' என்று கூறியபடியே பத்மநாபனிடம் விஸிட்டிங் கார்டைத் திருப்பித் தந்தாள். ''ஸார்! உங்க ஒய்ஃப் பெயரை மேலே எழுதுங்க; அப்புறம் கார்டுக்குப் பின்புறம் உங்க கையெழுத்தையும் போட்டுத் தாங்க, ப்ளீஸ்!''

அவர் அவள் கோரிக்கைக்குக் கீழ்ப்படிய, பிரமீளா அம்புஜத்திடம் பேச்சைத் தொடர்ந்தாள் : '' ரொம்ப நாளாகவே நான் இவருடைய ஃபான். 'முழுமை' என்ற தலைப்பிலே ஒரு நாவல் எழுதினாரே அது ஒண்ணு தவிர பாக்கி எல்லாத்தையும் படிச்சிருக்கேன். அந்த ஒரு புத்தகம் மட்டும் எத்தனையோ முயற்சி பண்ணியும் எனக்குக் கிடைக்கவேயில்லை. முழுமையைத் தேடி அலையறேன்!''

'' அதைப் பூஜை அறையில்தான் கண்டுபிடிக்க முடியும். அதுதான் நாவலின் 'தீம்'கூட. இப்போ சத்தியா அது அச்சில் இல்லை. என்னிடம் இருக்கிற பர்ஸனல் காப்பியை அனுப்பறேன் உங்களுக்கு'' என்றார் பத்மநாபன்.

விஸிட்டிங் கார்டை வாங்கிக் கைப்பையில் போட்டுக் கொண்டாள் பிரமீளா. அவள் பக்கத்தில் இத்தனை நேரமாகப் பொறுமையின்றி நின்றுகொண்டிருந்த அவள் தாயார், ''ம்...ம் போகலாம். கூட்டம் சேர்ந்துவிடும்'' என்றாள்.

''போகலாமே, அம்மா!'' என்று கடுப்புடன் அலுத்துக் கொண்ட பிரமீளா, பத்மநாபனிடம் கூறினாள் : '' சின்னத் தனத்தையே எல்லாரும் தினம் தினம் பார்த்துக் கொண்டு ஆற அமரக் காரியங்களைச் செய்கிறோம். உயர்ந்த மனிதர்களை எப்போதோ ஒரு முறை அபூர்வமாகச் சந்திக்கிறோம் ; அப்போது அவசரப்படும்படியாக இருக்கு ! வேடிக்கைதான் !''

''நான் இன்றைக்கு உயர்ந்த மனிதனாக நடந்து கொள்ளவில்லை, உங்களிடம். அதற்காக வருத்தப்படுகிறேன்'' என்றார் பத்மநாபன்.

'' இப்போ மனம் விட்டுச் சொல் நீங்களே, வருத்தப்படறேன்னு அதுவே உயர்ந்த குணத்தைத்தானே காட்டு




# Because of paper!

First halting utterances learnt at mother's knees. First nints ot knowledge. But later in life all what our mothers' tongue had taught us seems only a starting point. New facts have to be learnt to live. That is possible because of paper.

A fact which 65 million new literates in India learnt between 1961 and 1970.

And West Coast Paper is fulfilling the need of more, and better, writing and printing paper. Paper that promises social and economic progress.

**West Coast Paper** the professionals for printing, writing and packaging paper.
Shreeniwas House, Waudby Road, Bombay 1.

PRESYN



# வெற்றியின் கோலம்

பொன்னிறமாய் வானம் மாறுகையில் — இன்பப்
பூங்காவில் சுற்றுவோம் உல்லாசமாய்;
புன்னகைப் பூக்களைக் கொய்தே அவைகளைப்
பாரெங்கும் வாரி இறைத்திடுவோம்.

பாட்டுக்கள் கட்டியே பாடுவோமே — கூடிப்
பாடிக்கொண்டே நடம் ஆடுவோமே;
கூட்டுக் களியினில் கொள்ளையாம் இன்பத்தில்
கொள்ளத் துயர் உண்டோ உள்ளத்திலே?

காதற் கனவுகள் காணுவோமே — வண்ணக்
கற்பனைக் கோபுரம் கட்டுவோமே;
சோதனை வேலிகள் தாண்டிக் குதிப்போமே,
சாதிப்போமே அரும் சாதனைகள்.

மற்றவர் வாழ்க்கையில் தோல்வி காண்பார் — அவர்
மண் எனத் தூற்றுவார் இவ்வுலகை;
வெற்றியின் கோலத்தை நாங்கள் காண்போம்—உயர்
விண்ணை இப்பூமியில் ஊன்றி வைப்போம்.

சுந்தா



கிறது? மேலும் நாம் என்ன சின்னடைப் பிடிச்சுக்கிட்டுச் சண்டையா போட்டோம்? ஒரு ஹெல்தி டிஸ்கஷன் அவ்வளவுதானே?'' என்ற பிரமீளா, ''ஹல்லோ பாப்பா!'' என்று விசுவிடம் ஒரு விநாடி குனிந்து கொஞ்சினாள். பின்னர் அனுவையும் மீனுவையும் தட்டிக் கொடுத்துப் புன்முறுவலுடன் 'டாட்டா' சொல்லிவிட்டுக் கிளம்பினாள்.

அவள் தலை மறைந்ததும், ''எத்தனை நல்ல மாதிரியா இருக்கா? அவகிட்டே போய் எதுக்கு உங்க இலக்கிய சர்ச்சையையெல்லாம் வைச்சுக்கறேள்?'' என்றாள் அம்புஜம்.

''யாராவது ஒருத்தர் சொல்லத் தானேடி வேணும்? இவள் வீட்டுப் பூனை குட்டி போட்டால்கூட அது பெரிய நியூஸ் ஆயிடறது இந்தக் காலத்திலே. எத்தனை குட்டிகள்? அவற்றுக்கு என்ன பெயர் என்று எல்லா விவரமும் வந்துடறது.''

''அது மட்டுமா? பூனைக் குட்டிகளை மடியில் வைச்சிண்டிருக்கிற மாதிரி ஃபோட்டோ கூடப் பிடிச்சுப் போட்டுடுவா'' என்றாள் மீனு.

''பத்திரிகைக்காரா அடிக்கிற கூத்துக்கு இவள் என்ன பண்ணுவாள், பாவம்! எத்தனை சகஜமா பழகறு பார்த்தேளோ?''

''அவள் பக்கத்திலேயே ஒரு கடுவன் பூனை அவசரப்படுத்தியபடியே நின்னுண்டிருந்ததே அதுதான் அன்தாங்கபின்!'' என்று கடைசி வார்த்தையில் ஆங்கிலத்தையும் தமிழையும் கலந்து உச்சரித்தாள் மீனு.

''மீனு! எத்தனை தடவை உனக்குச் சொல்லியிருக்கேன், முதல் பார்வையிலேயே ஒருவர் மீது நல்லெண்ணத்தையோ அல்லது வெறுப்பையோ உருவாக்கிக் கொள்வது தவறு என்று?'' என்று தந்தை அறிவுரை வழங்கினார்.

''ஆமாம், அந்த டிபன் காரியரைப் பற்றி ஓர் அபிப்பிராயம் ஏற்பட அவனை எட்டு தரம் பார்க்கணுமாக்கும்'' என்று மீனு தன் தாயிடம் முணு முணுத்ததானது படகு கிளப் அதிகாரி கூறிய வார்த்தைகளில் அடங்கிவிட்டது, நல்ல வேளையாக!

''ஸார், போட் ரெடி!'' என்றார் அவர்.

''நல்ல படகாய்ப் பார்த்துக் கொடப்பா!'' என்றார் பத்மநாபன். ''அதோடு துடுப்புப் போடறதுக்கு ஓர் ஆளையும் அனுப்பு. எங்களில் யாருக்கும் படகு ஓட்டவும் தெரியாது; படகு கவிழ்ந்தால் நீந்தவும் தெரியாது!''

''ஐயோ! இதென்ன அபசகுனமா பேசிண்டு!'' என்றாள் அம்புஜம்.

(தொடரும்)






**வ**யது 41 ஆகிறது. ஆனால் அவர் பெயரே 'இளைஞர்' என்பதுதான்! ஜான் டபிள்யூ யங் அப்போலோ 16 விண்வெளிப் பயணத்தின் போது தலைமை விமானியாக இருப்பார்.

விண்வெளி விமானி யங் 1965 மார்ச் மாதம் ஜெமினி–3 விண்வெளிக் கப்பலில் சென்றவர். ஜெமினி–10 பயணத்தில் தலைமை விமானியாக இருந்தவர். அப்போலோ 16 பயணத்தில் இவருடன் வேறு இருவரும் செல்கின்றனர். மாட்டிங்லி (வயது 35), டியூக் (வயது 36) இருவருக்கும் இதுவே முதல் விண்வெளிப் பயணமாகும்.

மனிதன் தான் வாழும் இம்மண்ணுலகை இப்போது முதன் முதலாக விண்வெளியிலிருந்து தொலைநோக்காடி (டெலஸ்கோப்பு) வழியாகப் பார்க்கப் போகிறான். பூமியின் வட துருவம், தென் துருவம் இரண்டும் ஒரே சமயத்தில் அண்மைக் காட்சியாக அவன் கண்களில் தெரியப் போகின்றன.



விண்வெளி வீரர்கள்: (மேலிருந்து கீழாக) யங், டியூக், மாட்டிங்லி





எங்கிருந்து இப்படிப் பார்க்கப் போகிறான்? அம்புலியிலிருந்துதான் !

தொலைநோக்காடியை அப்போலோ – 16 விண்வெளிக் கப்பலில் ஏற்றிச் செல்வார்கள். தொலைநோக்காடியுடன் புகைப்படக் கருவி ஒன்றும் பொருத்தப்பட்டுள்ளது.

அம்புலிக்கு அமெரிக்கா மனிதனை அனுப்பும் ஐந்தாவது பயணம் இது. வரும் ஏப்ரல் மாதம் 16ம் தேதி அப்போலோ 16 புறப்படத் திட்டமிட்டுள்ளனர்.

இது பன்னிரண்டு நாள் பயணம். யங், டியூக் இருவரும் சந்திரனில் நடுவிலுள்ள மேட்டுப் பகுதியில் டெஸ்கார்ட்டிஸ் குழியின் அருகே இறங்குவார்கள். மாட்டிங்லி தனியே நிலாவை வலம் வந்தவண்ணம் இருப்பார்.

யங் நிலாத் தரையில் இறங்கியதும், தரை இறங்கிய நிலா வாகனத்தின் நிழலில் தொலைநோக்காடியை நிறுத்துவார்.

புகைப்படக் கருவியுடன் பொருத்திய இந்தத் தொலைநோக்காடி பளுவற்ற மக்னீஷியத்தினால் ஆனது. அதை நிழலில் வைப்பது

ஏன் எனில் சூடாகி விடாமல் இருப்பதற்காகும். நிழலில் கடுங் குளிராக இருக்குமாதலால், குளிர் தாக்கிவிடாதபடி அதற்குத் தங்க முலாம் பூசியிருக்கிறார்கள். தங்கப் பூச்சு வெயிலின் சிதறிய ஒளியில் தக்க அளவு கிரகித்துப் புகைப்படக் கருவியை இயங்கக் கூடிய நிலையில் வைத்திருக்கும்.

அப்போலோ — 16 தன்னுடன் குட்டித் துணைக்கோள் ஒன்றையும் எடுத்துச் செல்லும். விண்வெளி விமானிகள் பூமிக்குத் திரும்புமுன் அதை நிலாவை வலம் வரும்படி விட்டு விட்டு வருவார்கள். பூமியைச் சுற்றி வரும் துணைக்கோள், நிலா; அதனைச் சுற்றி வர விடப்படுவதால், இது குட்டித் துணைக்கோள்.

இதிலுள்ள மூன்று கருவிகளில் ஒன்று நிலாவின் அருகே பூமியின் காந்த மண்டலத்தையும் பிற விண்கோள்களின் காந்த மண்டலங்களையும் அளந்தறியும்; இன்னொன்று அம்புலியின் ஈர்ப்பு விசை மண்டல மாறுபாடுகளைக் கண்டு பிடிக்கும்; மற்றது, மின் ஏற்றமுள்ள எலெக்ட்ரான், புரோட்டான் துகள்களின் அளவைக் கணிக்கும்.

வெயிலைப் பிடித்து மின்விசையாக மாற்றும் வெயில்விசை மின்கலம் இந்தக் குட்டித் துணைக்கோளின் கருவிகளுக்கு வேண்டிய மின்விசை வழங்கும். குட்டித் துணைக்கோள் அம்புலியின் மறுபுறம் செல்கையில் வெயில் இராதே. விசைக்கு என்ன செய்வது? எனவே, மீண்டும் மீண்டும் மின்விசை ஏற்றிச் சேமித்து வைத்துக் கொள்ளக்கூடிய மின்கலம் ஒன்றையும் வைத்துள்ளனர்.

அப்போலோ—16 பூமிக்குத் திரும்பியபின் ஓர் ஆண்டு வரை குட்டித் துணைக்கோள் தகவல் அனுப்பி வரும்.

அப்போலோ—16 விண்வெளி விமானிகள் அம்புலியில் தரையில் சுற்றிவர ஒரு ரோவர் வண்டியை ஏற்றிச் செல்வார்கள்.

அம்புலியில் நம்மைப் பார்த்திருக்கும் பக்கத்தில் மிக உயரமான மேட்டுப் பகுதிகளில் ஒன்றில் டெஸ்கார்டிட்ஸ் குழி உள்ளது. இப்பகுதியிலிருந்து கல் வகைகளைக் கொண்டு வருவது அப்போலோ — 16 பணிகளில் ஒன்றாகும்.

டெஸ்கார்ட்டிஸ் பகுதியிலிருந்து கிடைக்கக் கூடிய தகவல்கள் நிலாவின் வரலாற்றை முழுதும் அறிவதற்கு அவசியம். அதிலிருந்து பூமியின் வளர்ச்சி, சூரிய மண்டலம் முழுவதன் வளர்ச்சி ஆகியவற்றை அறிந்து கொள்ளவும் இது உதவலாம்.

நடுத்தர வயதினரானாலும் அப்பாலோ-16 தலைமை விமானி யங் தமது பெயருக்கேற்ப மனத்தால் இளைஞர்தான். நகைச்சுவையுடன் பேசுவதில் சமர்த்தர். உதாரணம் 1: இதற்கு முன் இவர் விண்வெளிப் பயணம் மேற்கொண்டபோது விர்ஜில் கிரிஸ்ஸம் என்பவர் தலைமை விமானியாக இருந்தார். அவர் ஏற்கெனவே இத்துறையில் பெரும் புகழ் பெற்றவர். ஆகவே பத்திரிகை நிருபர்கள் யங்கைக் கேட்டார்கள்: ''அனுபவசாலியான கிரிஸ்ஸமுடன் சென்று வந்தீர்கள். தனியாகப் போகத் தயக்கமாயிருந்திருக்கும் இல்லையா?''

யங் பதில் சொன்னார்: ''கிண்டலா செய்கிறீர்கள்? என் மாமியாரோடு நான் போக வேண்டும் என்றாலும் கிளம்பி விருப்பேன்! இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தை யாராவது நழுவ விடுவார்களா?''

உதாரணம் 2: விண்வெளிப் பிரச்னைகளில் தீவிர ஈடுபாடு கொண்டுள்ள யங்குக்கு வீட்டுப் பிரச்னைகள் என்றால் வேப்பங்காய்! ஒரு நிருபர் கேட்டார்: ''வீட்டுப் பிரச்னைகள் எழும் போது என்ன செய்வீர்கள்?'' யங் அளித்த பதில்: ''நாம் புறமுதுகிட்டு ஓடிவிட முடியாதபடி அத்தனை பெரிய வீட்டுப் பிரச்னை எங்கே எழப் போகிறது!''

'இளைஞர்' யங்கும் அவரது தோழர்கள் மாட்டிங்லி, டியூக் ஆகியோரும் வெற்றியுடன் திரும்பப் பிரார்த்திக்கிறோம்.

---

## வித்தியாசம்!



திருமணமாகாதவன் அரை மனிதன் என்றால் திருமணமானவன் அதையும் இழந்த ஐயோ பாவம்!

## பரீட்சைக் கவலை!

கல்லூரி மாணவர்கள் அளவுக்கு மீறிப் பரீட்சையைப் பற்றிக் கவலைப்படுவதால் அவர்கள் பற்கள் சிதைந்து விடுகின்றன என்று ஆராய்ச்சியாளர்கள் கண்டு பிடித்திருக்கின்றனர்! -- பரீட்சை அல்ல காரணம்; கவலைதான் காரணம்!

- வாய்ஸ் ஆப் அமெரிக்கா



## காதலன்!



எல்லாப் பெண்களையும் மயக்கும் நிலையான காதலன் : கண்ணாடி!

- கன்னிசை

# சளைக்காமல் மோட்டார் ஓட்டுவோரிடம் பயர்ஸ்டோன் பெற்ற பெயர்

# மிக வலிமையான டயர்



FOCUSG-6 (H) TM



அதிக மைலோட்டமும், அதிகப் பாதுகாப்பும், அதிக ரீட்ரெட் ஏற்கும் தகுதியும் பெறுவதற்கான மும்மடங்கு வலிமையான கட்டுமானம்.

## பயர்ஸ்டோன்

இன்றே காண்க அருகிலுள்ள பயர்ஸ்டோன் விற்பனையாளரை.

| |
|---|
| சிபாரிசுசெய்யப்படும் பயர்ஸ்டோன் பாசஞ்சர் கார் டயர் சில்லறை விலைகள். |
| அம்பாசடர் 5 . 90-15 ஒயிட் ப்ளாக் 6 PR- ரூ. 174.99. 5 . 90-15 பிளாக் 6 PR- ரூ. 155.39 ● டோரினோ டாக்ஸி ஸ்பெஷல் 5. 90-15 பிளாக் 6 PR- ரூ. 170.92 ● ஃபியட் 5 . 20-14 ஒயிட் பிளாக் 6 PR- ரூ. 149.99 ● ஸ்டான்டர்டு 5 . 60-13 ஒயிட் பளாக் 6 PR- ரூ. 164.57; 5 . 20-13 ஒயிட் பிளாக் 6 PR- ரூ. 159.95 ● வில்லிஸ் ஜீப் 6 . 00-16 GGND 6 PR- ரூ. 221.13 (விற்பனை வரி & தலவரிகள் தனி). |

# அம்மா

ரா. கணபதி

## 28. "என் அம்மா காளி! என்ன பிழை செய்தேனடி?"

தூய ராகவா! உன்னைத் தொடர்ந்தே வருவேன். அப்போதுதான் என் பிரேம பாவத்துக்கு மாசு ஏற்படாமலிருக்கும். எனக்குப் பதியே பகவான். மரணத்துக்குப் பின்னும் உன்னோடு கூடி இருப்பதே எனக்குக் கல்யாணம்.

- சீதா வசனம்: ஸ்ரீமத் ராமாயணம், அயோத்தியா காண்டம்

**தா**ரகேசுவரத்தில் நடந்தது அனைத்தும் ராமகிருஷ்ணருக்குத் தெரியும். அம்மா உள்ளே நுழைந்ததும், முகம் நிறையக் குறும்புச் சிரிப்புடன், "பிரியே! தாரகேசுவரம் போனாயே, ஏதாவது கிடைச்சுதா?" என்றார்.

தமக்குப் புற்றுநோய், உடல் இற்று வருகிறது, உலக வாழ்வு முற்றுப் புள்ளி காணப் போகிறது என்பதில் கவலையே இன்றி, விஷமம் செய்கிறார் பகவான்.

பரமேசுவரனின் சங்கற்பத்துக்குச் சரணாகதி செய்துவிட்டு, தன்னைத் தானே ஒருவாறு ஆசுவாசப்படுத்திக் கொண்டு திரும்பிய சாரதை பதிதேவரின் கேள்வியில் நிலைகுலைந்து போனாள்.

அவரோ குறுநகையுடன் கேட்கிறார்: "என்ன, போன இடத்திலே ஒண்ணும் கிடைக்கல்லை; ஒண்ணுமே கிடைக்கல்லை. அப்படித்தானே?"

மரத்து உட்கார்ந்திருந்தாள் தேவி. மரணப் படுக்கையில் இருந்த பகவான் ரணமுண்ட தொண்டை நோகப் பேசினார்: "ஒரு சொப்பனம் கண்டேன். மத்தகஜம் ஒண்ணு எனக்கு மருந்து தேடிண்டு போறது. எங்கேயும் மருந்து கிடைக்கல்லை. பூமியைத் தோண்ட ஆரம்பிக்கிறது. ஒரு வேளை பூமிக்கு அடியிலிருந்து மருந்து எடுத்துண்டு வந்து தருமோன்னு நினைச்சுக்கறேன். ஆனால் அது மருந்தை எடுக்கறதுக்குள்ளேயே கோபால் வந்து என்னை எழுப்பிட்டான். அது சரி, உனக்கு ஏதாவது சுனா வந்ததோ?"

தேவி அவரது படுக்கையில் முகத்தை அழுத்திக் கொண்டு தேம்பினாள். அவள் கண்ட கனவை அவரிடம் சொல்ல அவளுக்குத் திராணி இல்லை.

காளியன்னை கழுத்தை வளைத்துக் கொண்டு அவள் கனவிலே நிற்கிறாள். "ஏனம்மா, கழுத்தை இப்படி என்னமோ மாதிரி வைச்சுண்டிருக்கே?" என வினவுகிறாள் சாரதை. "அதோ, பார்த்தியா?" என்று காளி ஆள்காட்டி விரலால் சுட்டுகிறாள். அவள் காட்டிய இடத்தில் ராமகிருஷ்ணரின் புற்று கொண்ட மிடறு தெரிகிறது. "அது என் நெஞ்சுலே வந்திருக்கு. அதனாலே தான் கழுத்தைத் திருப்பிண்டிருக்கேன்" என்கிறாள். ஆக, காளியன்னை அந்த நோயைத் தீர்த்து வைக்கப் போவதில்லை என்று நிச்சயமாகிவிட்டது.

நோயின் வலிக்குச் சிறிது ஆறுதலாயிருக்கிறதென்றே காளி கழுத்தை வளைத்துக் கொண்டாள் போலும்! ஆனால் இவர் கழுத்தை வளைத்துக் கொள்ளக்கூட இல்லையே! எதற்கு இப்படி நிவாரணமே இல்லாமல் கொடூரமான இம்சையை அநுபவிக்கிறார்? அன்பு மொழி தவிர வேறெதுவும் சொல்ல அறியாத இவருடைய தொண்டையிலா புற்றுநோய் வரவேண்டும்?

மலயமாருதம் போல் பேசினார் பகவான்: "அம்மா, இந்தச் சரீரம் நன்னா அவஸ்தைப்படட்டுமே. உங்களுக்கெல்லாம் இந்தமாதிரி இம்சைகள் வரப்படாதுன்னுதான் இந்த ஒரு சரீரத்துக்குச் சேர்த்துவைச்சு நோய் வந்திருக்கு. நல்லதுதானே?"

உலகின் பாபம் தீரவே சிலுவையில் அறையுண்ட இயேசுநாதனைப் போன்றவர் பரமஹம்ஸ ராமகிருஷ்ணர். அவருக்குப் பூர்வ கருமம் கிடையாது. ஆனால் அடியார் பலரது வினையை இவர் வாங்கிக் கொண்டு, அவர்களது கர்மம் தீரவே இந்த வியாதியை அநுபவித்தார். பரம கருணை இதுவே. அதே சமயத்தில் பரம ஞானமும் இதுவே. சரீரம் வேறு, ஆத்மா வேறு என்கிற பரம ஞான வாசகத்தை வாழ்ந்து காட்டினார். அத்தனை வியாதியையும்

பொருட்படுத்தாமல் இன்மொழி பேசி வாழ்ந்தார்.

சாரதை உட்படப் பல சீடர்களுக்கு நேர இருந்த கொடுமைகளைத் தாமே வாங்கிக் கொண்டு கழுவாயாக நோயை அநுபவித்ததாகச் சொன்னார். ஆனால் இவர் எப்படி அவர்களது இன்னல்களைத் தாம் ஏற்றாரோ, அதே போல் அவர்களும் பிற்காலத்தில் வேறு பலரது இன்னல்களை ஏற்றுச் சொல்லொணாத் துன்பங்களை அநுபவிக்கத்தான் செய்தனர்.

சோகச் சுமை தலையை அழுத்த, சாரதை படி ஏறிக் கொண்டிருந்தாள், குண்டான் நிறையப் பாலுடன். உலகமெல்லா:ம் சுற்றுவதுபோல் இருந்தது. தடாலென்று கீழே சாய்ந்துவிட்டாள். ஓசை கேட்டு ஓடி வந்த பாபுராம் அவளை ஆசுவாசப்படுத்தித் தூக்கினான். அவளால் அடி எடுத்து வைக்கவே முடியவில்லை. கணுவிலே எலும்பு பிசகிக் கொண்டு விட்டது. பாற்கடலில் சர்வமங்களையான லக்ஷ்மி தோன்றினாள். அறை முழுதும் ஓடும் பாலில் அமங்கலம் மூடிய சாரதை அலமாந்து அமர்ந்தாள்.

ராமகிருஷ்ணருக்கு விஷயம் தெரிந்தது. இந்தத் துர்ச் சம்பவத்தால் சீடர்களிடம் ஏற்பட்டுள்ள பீதியை ஒரு கணத்தில் புரிந்து கொண்டார். அதைத தெளிவிப்பதே தமது கடமை என்று கருதினார். எனவே, அந்த அவலச் சூழலிலும் ஹாஸ்ய உணர்வை எப்படியோ வரவழைத்துக் கொண்டார்: ''சரி, அம்மா விழுந்தது அவளுக்கு ஓய்வு கொடுத்துடுத்து. அம்மா தன் ஜன்மாவிலே ஓய்வு எடுத்துண்டதில்லையே! அந்த மட்டும் நல்லதுதான். ஆனால் இந்தக் கட்டையோட பாடுதான் கஷ்டமாயிடுத்து. இதுக்கு யார் அம்மா மாதிரிப் பார்த்துப் பார்த்துப் பணிவிடை பண்ண முடியும்? இது யார் வைச்சுத் தர கஞ்சியைச் சாப்பிடணுமோ? ...ம்'' என்று முனகி முறுவலித்தார்.

சீடப் பிள்ளைகளின் சாம்பியிருந்த உள்ளத்தில் சிறிது ஜீவ களை வந்தது.

''அம்மா உட்கார்ந்த இடத்திலேயே கஞ்சி போட்டுடுவா. ஆனா அதைத் துளித் துளியா உங்க வாயிலே விட்டு முழுங்கப் பண்ணறதுக்கும் அம்மாவாலே தானே முடியும்? அம்மா எப்படி இங்கே படியேறி வருவா?'' என்றான் பாபுராம்.

''எலே பாபுராம், ஒண்ணு பண்ணேன்!'' என்ற ராமகிருஷ்ணர், தமது நாசியைச் சுற்றி ஒரு நத்து இருப்பது போல் அபிநயித்துக் காட்டி, ''இப்படியாப்பட்ட அம்மாளை ஒரு கூடை



யிலே வெச்சுக் கலே மேல் தூக்கிண்டு வாயேன்'' என்ருர்.

பாபுராமும் நரேனும் துயரை மறந்து, விலா வலிக்கச் சிரித்தார்கள்.

அதை அடுத்த மூன்று நாட்கள் கோலாப் — மா ராமகிருஷ்ணருக்கு உணவு படைத்தாள். அதற்கு மேல் சாரதையால் அந்த வீட்டிலிருந்து கொண்டே அவரைப் பார்க்காமலிருக்க முடியவில்லே. வீங்கிய கால் 'விண்' 'விண்' என்று தெறிக்க விந்தி நடந்து அவருக்குக் கஞ்சி எடுத்துச் சென்ருள். கண்களே மூடிப் படுத்திருந்தார். பரம சாந்தம்! பரம செளந்தரியம்!

''சாப்பிட நாழியாச்சன்னு! சித்தே எழுந்திருக்கிறேளா?'' என்று மெதுவாகக் குரல் கொடுத்தாள் தேவி.

அவரது மெலிந்த உடலில் சிறிய ஆட்டம் கண்டது. கண்களேத் திறந்தார். எங்கேயோ தூர தேசத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த மனசு இன்னும் இங்கே வர மறுப்பதுபோல் இருந்தது. தூர தேசத்திலிருந்து பேசுவது போலவே அவரது குரலும் ஒலித்தது. ''இந்தக் கல்கத்தா ஜனங்களேப் பார்த்தியா? இருட்டுலே புழு நெளியற மாதிரி நெளிஞ்சுண்டிருக்குகள். அம்மா, இவாளேயெல்லாம் நீதான் கவனிச்சுக்கணும்'' என்ருர் சாரதையிடம்.

'ஆகா! தமது சங்கற்பத்தை அவர் மாற்றிக் கொள்ளவே மாட்டாரா? பொறுப்பை என் தலேயில்தான் கட்டப் போகிருரா?' — கலங்கினுள் அம்மா.

''நான் அபலே. என்னுலே முடியற காரியமா இது?'' என்று குழறினுள்.

ராமகிருஷ்ணர் தமது திவ்விய சரீரத்தைத் தொட்டுக் காட்டி, ''இது மட்டும் என்ன பெரிசாப் பண்ணிடுத்து? நீதான் இது பண்ணினதைவிட நிறையச் செஞ்சாகணும்'' என்ருர்.

தேவி புரிந்து கொண்டு விட்டாள்! பிசுபிசுத்துக் கிடந்த மனத்தில் தாற்காலிகமாக ஓர் அழுத்தம் உண்டாயிற்று. ''நடக்க வேண்டிய காலத்திலே எல்லாம் நடக்கும். அது கிடக்கட்டும். இப்போ இந்தக் கஞ்சியைக் கொஞ்சம் கொஞ்சமாக முழுங்குவேளாம்!'' என்ருள்.

தம்மைவிட அவள் நிறையச் செய்ய வேண்டும் என்று அவர் சொன்னது உயர்வு நவிற்சிப் பேச்சல்ல. அவரது அவதாரப் பணியைவிட அவளது அவதாரப் பணி பெரியது என்ற உள்ளார்ந்த உணர்ச்சியையே வெளியிட்டார். ராமகிருஷ்ணரின் தியாகத்தையும், ஞானத்தையும், மகா பாவங்களேயும் முன்னுேடியாகக் கொள்பவர்கள் குறைவாகவே இருக்க முடியும். குடும்பப் பொறுப்பு இல்லாத அவரைப் போல் உலக மக்கள் எல்லோரும் வாழ முடியாது. ஆனுல் அனேவருமே — குறிப்பாகப் பெண்ணுகப் பிறந்த சகலருமே — சாரதையின் உழைப்பு, எளிமை, அன்பு, அடக்கம் இவற்றை முன்னுேடியாகக் கொண்டு வாழ வேண்டியவர்கள் தாம். அவள் ஒரே சமயத்தில் சந்நியாச தர்மம், கிருஹஸ்த தர்மம் இரண்டுக்கும் ஆதரிச மூர்த்தியன்ருே?

மனித வாழ்வின் உன்னதங்கள், எளிமைகள் இரண்டையும் உலகம் மறந்திருந்தபோது இந்த திவ்விய தம்பதியர் அவதரித்தனர். அவர் உன்னதங்களே எளிதாக வாழ்ந்தார். அவள் எளிமைகளே உன்னதமாக வாழ்ந்தாள். உன்னதங்களே வாழக்கூடிய உத்தமப் பிறவிகளுக்கு அவர் போதிய அளவு உதாரணம் காட்டி விட்டதால் விடைகொள்ள முடிவு செய்து விட்டார். எளிமைகளே வாழ வேண்டிய அனேவருக்கும் அவள் இன்னும் உதாரணங்களேக் காட்ட வேண்டும் என்பதாலேயே தமக்குப் பிறகும் அவள் இங்கிருக்க வேண்டும் என்று கட்டளே இட்டார்.

அவர் அவளே விட்டுச் சென்றதற்கு இன்னுேர் அற்புதக் காரணத்தை அவளே பின்னெருகால் வெளியிட்டாள். ''முந்தைய அவதாரங்களின் மனேவிமார்கள், பதிக்கு முந்திக் கொண்டே சுமங்கலிகளாக மறைந்திருக்கிருர்கள். டாகூர் மட்டும் ஏன் தங்களே முந்திக் கொண்டார்?'' என்று பக்தர் ஒருவர் அம்மாவைக் கேட்டார். அவர் சொன்னது முற்றிலும் சரியல்ல. கண்ணன் மறைவுக்குப் பிறகுதான் ருக்மிணி முதலிய சில பத்தினிகள் தீக்குளித்தனர்; சத்தியபாமை முதலிய வேறு சில கிருஷ்ண பத்தினிகளோ ஐயன் மறைந்த பின் தவ வாழ்வு மேற்கொண்டனர். அது ஒருபுறம் இருக்கட்டும். நம் அம்மா சொன்ன பதிலேப் பார்ப்போம். ''பிள்ளாய்! டாகூர் இந்த உலகத்திலே சகலத்தையும் அம்மாவாகவே பார்த்தார்னு உனக்குத் தெரியுமோன்னே? அந்த அம்மாவின் தன்மை என்னன்னு வெளிப்படுத்திக் காட்டறத்துக்காவே என்னே இங்கே வைச்சுட்டுப் போயிட்டார்.''

ஆகா, எத்தனே உயர்ந்த உண்மை! உலகை யெல்லாம் அம்பாளாகப் பார்க்கிற பாவத்தை அவர் உணர்த்தினுர். அந்த அம்பாள் உலகையெல்லாம் எப்படிப் பார்ப்பாள் என்பதை அவள் உணர்த்தினுள்.

தம் இருவரின் அவதாரப் பணிகள் பற்றி அவர் அடிக்கடி பேசலானுர். எப்படியும் எவரிடமும் செப்ப முடியாத

உண்மைகளை அவர் அவளிடம் பாட்டிலும் செப்பினார் :

**இப்புவி வந்து நான் ஒப்பி ஏற்ற துயர்**
**எப்படி எவரிடம் செப்பிடுவேன்?**
**அணிந்த காலணி அழுந்தக் கடித்தால்**
**அணிந்தவனன்றி அப்பிணி யார் அறிவார்?**
**தன்முகம் காட்டத் தயங்கிச் சிவக்கும்**
**அன்னியர் வீடுக் கன்னிகையானேன்**
**பெண்ணாய்ப் பிறந்தவள் பெரும் இடர்ப்பாட்டை**
**சொன்னால் வருமோ? சொல்லவும் அறியேன்**

''ஒப்பி ஏற்ற இந்தத் துயர் எனக்கு மட்டும்தானா அம்மா ? உனக்கும் அதே துயரம்தான்'' என்றார் ராமகிருஷ்ணர், தமது அன்பு மனையாளிடம். உலகத்தின் துயர் களைவதற்காக அவதார புருஷர்கள் ஏற்கும் துயர்களை யாரே அறிய முடியும்? வெளியிலே கூத்தடித்த ஆலும் ராமகிருஷ்ணரின் அகத்தில் இந்தத் துயர் ஒரு கோஷாவாக இருந்து வந்திருக்கிறது?

இன்னொரு நாள். காலனின் காலடி தவிர வேறு அரவமற்ற காசிப்பூர் இல்லத்தில் ராமகிருஷ்ணர் சாரதையையே நீண்ட நேரம் பார்த்தார்.

''என்னவோ சொல்லணும்னு நினைக்கறேள். சொல்லாம கட்டுப்படுத்திக்கறேள். என்ன தோணினாலும் வெளிப்படச் சொல்லுங்கோன்னா!'' வேண்டிக் கொண்டாள் தேவி.

'' நல்லது. தேவி ! இந்தக் கட்டையே எல்லாத்தையும் தன்னந் தனியா பண்ண முடியுமா? நீ ஒண்ணும் செய்யமாட்டாயா?''

'' நான் பொம்மனாட்டி. என்னாலே என்ன செய்ய முடியும் ?''

''இல்லே. அப்படி இல்லே. நீ நிறையச் செஞ்சாகணும்.''

தன் தலைமீது மயிரிழையில் தொங்கிக் கொண்டிருக்கும் கைம்மை என்றவாளைப் பார்த்துக் கொண்டே ஒவ்வொரு விநாடியும் கதிகலங்கிக் கொண்டிருந்தாள் தேவி. ஏராளமான அடியார்களின் பாபங்களை ஏற்றுக் கொண்டிருந்த பகவான் அவற்றைத் தீர்ப்பதற்காக மாதக் கணக்கில் புற்றுநோயுடன் போராடினார். போராடிப் போராடி அடியோடு சக்தி இழந்து விட்டார்.

தூக்கி வாரிப் போட்டது சாரதா தேவிக்கு! தனது கண் கண்ட காட்சி மெய்யானதுதானா? சயனத்தில் தமது சரீரத்தைத் திருப்பவும் சக்தியற்றவரா அதோ மின்னல் கொடி போல் துள்ளி ஓடுகிறார் ! வீட்டை விட்டு எங்கே வெளியே ஓடுகிறார் ?

அந்த நிலையிலும்கூட கோஷாவான தேவியால் வீட்டுக்கு வெளியே வந்து பார்க்க முடியவில்லை. ராமகிருஷ்ணரின்

எல்லா சாஸ்திரங்களையும் கடந்த மகான்களுக்குச் சாஸ்திரக் கட்டுப்பாடுகள் எதற்கு என்று சிலர் எண்ணுகிறார்கள். நீங்கள் ஆகாய விமானம் பார்த்திருக்கிறீர்கள். ஆகாயத்தில் பறப்பதற்குச் சக்கரம் வேண்டியதில்லை. ஆனால் விமானத்துக்கும் சக்கரம் இருக்கிறது அன்றோ? விமானதளத்தில் வந்திறங்கி, பிரயாணிகளை ஏற்றிக்கொண்டு, இந்தச் சக்கரங்களால் ஊர்ந்த பின்பே அது வானத்தில் பறக்கும். பரம ஞான நிலையில் பறக்கும் மகான்களும் இதேபோல் நம்மிடம் வந்து, நம்மை அழைத்துக்கொண்டு, நம் வழியிலேயே சிறிது ஊர்ந்து சென்று காட்டவே சாஸ்திரங்களை அநுஷ்டிக்கிறார்கள். பிறகு நம்மையும் உயர்நிலைக்குத் தூக்கிச் செல்கிறார்கள். - ஸ்ரீ சத்ய சாயிபாபா

அறைக்கு விரைந்தாள். கட்டில் காலியாக இருந்தது. சந்தேகமே இல்லை. அவர்தான் அப்படி ராமசரம் போல் பாய்ந்தோடியிருக்கிறார். எதற்காக, எங்கே, எப்படிப் போனார்?

திக்பிரமை பிடித்த தேவி தன் அறையில் வந்து விழுந்தாள். மீண்டும் கண்களில் மின்னல் கொடி பளிச்சிட்டது. ஆம், அவரேதான்! தமது அறைக்குத் துள்ளிக் கொண்டு திரும்புகிறார்.

சாரதை அவரது அறைக்குச் சென்றாள். அங்கு ஏதுமே நடக்காததுபோல் ராமகிருஷ்ணர் படுத்திருந்தார்.

அவராக விஷயத்தைச் சொல்லாததால் அவளே கேட்டுவிட்டாள்.

''ஓ! நீ கவனிச்சுட்டியா? ஒண்ணுமில்லே ! நிரஞ்ஜனும் மற்றப் பசங்களும், அங்கே தோட்டத்திலே பனைமரத்துலேயிருந்து பதநீர் இறக்கிச் சாப்பிடப் போனா. அந்த மரத்திலே ஒரு கரு நாகம் சுற்றிண்டு இருந்தது, எனக்கு இங்கேயே தெரிஞ்சுடுத்து. அதுதான் அந்தப் பசங்களுக்குத் தெரியாம வேறே மார்க்கத்துலே அங்கே ஓடினேன். அந்தப் பாம்புகிட்ட 'இனிமே இங்கே தலைகாட்டாதேயம்மா'ன்னு சொல்லி அனுப்பிச்சுட்டு, போன சுவடு தெரியாமல் வந்துட்டேன். இதைப் பகிரங்கப்படுத்த வேண்டாம்'' என்றார்.

(நீண்ட காலத்துக்குப் பிறகு தேவி இச் சம்பவத்தை வெளியிட்டாள்.)

'பசங்களிடம்' இருந்த அன்பு அவரை அப்படி அமாநுஷியமாக நடந்து கொள்ளச் செய்தது! ஆமாம், அவர்களிடம் அவருக்கிருந்த அன்புதான் எத்தகையது ? இளமையில், ''அம்மா, காளி, உன்னைப் பாராமலே இன்னொரு நாள் சென்றதே!'' என்று கதறிய ராமகிருஷ்ணர், பிற்பாடு இந்தப் பசங்களுக்காகத் தவித்து, ''என் பசங்களே ! உங்களைப் பாராமலே இன்னொருநாள் சென்றதே!'' என்று கதறினார். அப்புறம் அந்தப் பசங்

களும் ஒவ்வொருவராக அவரிடம் வந்தனர். உபதேசங்கள் பெற்றனர். அதன் வழி ஒழுகினர். தூய பிரம்மசரியம் காத்தனர். வீடு வாசல், படிப்பு பதவி எல்லாவற்றையும் விட்டு சந்நியாசம் கொள்ளவும் தயாராயினர். உலக மகா ஆன்மிக ஸ்தாபனமான ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கம், 'அந்தப் பெயரைச் சூட்டிக் கொள்ளாமலே, காசிப்பூரில் ராமகிருஷ்ணரின் மரணப் படுக்கையருகே உருவம் பெறலாயிற்று.

பசங்களின் பக்குவத்தில் மகிழ்ந்து அவர்களை ஆண்டிகளாக்கிப் பார்க்க அவாவினார் பகவான். தமது தொண்டையால் சிறிதேனும் விழுங்க முடிகிற இப்போதே அந்த ஆண்டிகளிடமிருந்து அமுது பெற அவாவினார். "கண்மணிகளா! நீங்கள் பிச்சை எடுத்துச் சாப்பாடு கொண்டு வாங்கோ" என்றார்.

ஒரு காலத்தில் வாலிப முறுக்கும், அறிவுச் செருக்கும் கொண்டிருந்த நரேந்திரன் இதைக் கேட்டதும் தனக்கு யுவராஜ பட்டாபிஷேகம் செய்தது போல் களித்துக் குதித்தான்.

"முதலில் நம் அம்மாவிடம் பிச்சை வாங்குவோம்" என்று மற்ற குருபாயி—தோழர்களிடம் சொன்னான்.

அந்த அற்புதக் குழந்தைகள் சாரதையின் முன் கைநீட்டி நின்றன — உபநயன காலத்தில் வாமன மூர்த்தி அன்னபூரணேசுவரியின் முன் 'பவதி பிக்ஷாம் தேவி' என்று நின்றதுபோல்!

அவள் அளித்த அன்னத்திலேயே ஞானமும் உட்சென்றது என்று முன்னமே கண்டோம். ஞான மயமான பெயர்களைச் சூட்டிக்கொண்டு பிரம்ம வித்யாம்பிகை, ஞானம்பிகை என்றெல்லாம் பல ஸ்தலங்களில் அம்பாள் விளங்கிய போதிலும், ஆதி சங்கரர் காசியிலே உள்ள அன்னபூரணியிடமே வந்து "ஞானமும் வைராக்கியமும் பிச்சை தா" என்று யாசித்தார்!

சாரதா தேவி தன் அருமந்தக் குழந்தைகளுக்கு அன்னபிட்சை அளித்ததோடு நிற்கவில்லை. எதிர்காலத்தில் மகத்தான ராமகிருஷ்ண மடங்கள் எழும்ப மகாலக்ஷ்மியின் கடாக்ஷமும் தேவை அல்லவா? எனவே, அவள் அக்குழந்தைகளுக்குக் காசுப் பிச்சையும் கொடுத்தாள். பிச்சைக் கலயத்திலே ஒன்றொன்றாகப் பதினாறு அணாக்களைக் கொட்டினாள்; கண்களிலிருந்து அமிருதமும் கொட்டிக் கொண்டிருந்தது. பூர்ண சந்திரனின் பதினாறாவது கலையே ஞானத்தின் நிறைவு என்பதை நினைவில் கொண்டு ஷோடசியாகிய நம் அம்மா பதினாறு அணாக்களைப் போட்டாளாம்! இந்தப் பிச்சை போட்டதன் மூலம் ராமகிருஷ்ண சங்கத்தின் மூல நிதியமாகவும் ஆகிவிட்டாள்! ஆம், பிற்காலத்தில் ராமகிருஷ்ண ஸ்தாபனம் தோன்றிய போது, துறவிகளாகிவிட்ட சீடர்கள் பேரில் அந்தச் 'சொத்து' இருக்க முடியாதாகையால், அது உலக வழக்கப்படி சந்நியாசம் பூணாத சாரதைக்கே சொத்தாயிற்று!

பசங்கள் ஆனந்த பரவசம் அடைந்தனர். அவர்கள் தக்ஷிணேசுவரத்தில் குருநாதருடன் கொட்டம் அடித்துவிட்டு இரவு வீட்டுக்குத் திரும்புமுன் அம்மாவிடம் வருகையில், ஏழை அம்மா எப்படியோ ஏழைப் பசங்களுக்கான வாகனக் கூலிகளையும் எடுத்து வைத்திருப்பாள். நள்ளிரவாகி அவள் உறங்கப் போய்விட்டாலும் கூட, வாசற்படியில் சில்லறை மினுக்கிக் கொண்டு கிடக்கும். இன்று வள்ளிசாகப் பதினாறு அணாவை, கொடுக்கவே பிறந்த அவளது திருக் கரம் ஒன்றொன்றாகப் போட்டது பசங்களின் நெஞ்சகத்தில் நீங்காமல் புகுந்துவிட்டது!

பசங்களை இப்படி உலுக்கி எடுத்த அம்மா மரண வாடை வீசுகிற அந்தச் சூழலில் மணம் கமழும் மன நலத்தால் யோகின்—மாவையும் உலுக்கிவிட்டாள்!

யோகின் பிருந்தாவனத்துக்குச் சென்று தவமிருக்க விரும்பினாள். 'டாகூரி'ன் அநுக்கிரகத்தைக் கோரி வந்தாள் காசிப்பூருக்கு. அவர் முகத்தில் ஒளி வீசியது. "பிருந்தாவனமா! பேஷ்! அவசியம் போம்மா! அங்கே சகலத்தையும் பார்ப்பே" என்றார்.

தமக்கு உணவு கொண்டு வந்திருந்த சாரதையைக் காட்டி, "யோகேன், இவாகிட்டச் சொல்லிண்டியா? இவா என்ன சொன்னா?" என்றார்.

பிருந்தாவன யாத்திரை பற்றி அம்மா விசேஷமாக என்ன சொல்லக் கிடக்கிறது என்றுதான் யோகின் எண்ணினாள்.

அம்மாவும், "நீங்கதான் சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லி, ஆசீர்வாதமும் பண்ணியிருக்கேளே? நான் என்ன பண்ணக் கிடக்கு?" என்றாள்.

ராமகிருஷ்ணர் மீண்டும், "யோகேன்! அம்மாகிட்டே அநுமதி வாங்கிண்டு போ. அப்போதான் யாத்திரை நல்லபடியாப் பூர்த்தியாகும்" என்றார்.

சாரதை காலியான உணவுப் பாத்திரங்களுடன் விறுவிறுவென்று வெளிச்சென்று விட்டாள். யோகின் அவள் பின்னாலேயே சென்றாள். ஏனோ அவளால் பேச முடியவில்லை. அம்மாவின் பெருமை அவள் நெஞ்சிலே விம்மியது.

மறுநாள். பிருந்தாவனம் கிளம்புமுன் யோகின் மீண்டும் காசிப்பூர் வந்

उड़ीसा सिमेंट लिमिटेड | ORISSA CEMENT LIMITED

4, SCINDIA HOUSE, NEW DELHI-1

POST BOX : 344
NEW DELHI-1

# எழுத்து மூலமே உத்தரவாதம் அளிக்கிறோம்

உங்களது உலைக் கற்கள் தேவைகளுக்கு ஒரிஸ்ஸா சிமெண்ட் ஸ்தாபனத்திற்கு ஆர்டர் கொடுத்தீர்களானால், உங்கள் உற்பத்தி தடைப்படாது. அவை குறித்த காலத்தில் உங்களுக்குக் கிடைக்கும்; காலதாமதமே ஏற்படாது என்று நிச்சயமாக நீங்கள் இருக்கலாம்.

உலைக் கற்களுக்கு "டால்மியா" என்பது இவற்றை உபயோகப்படுத்துபவர்களுக்கு நன்கு தெரியும். நீண்டகால ஒப்பந்தத்தில் ஆர்டர்களையும் நாங்கள் ஏற்றுக் கொள்ளுகிறோம்.

Yours faithfully,
for ORISSA CEMENT LIMITED

Registered Office : RAJGANGPUR (Ori

**DALMIA REFRACTORIES**

GOVAN/OCL/7113

# இப்பெண்ணின் பேரெழிலுக்குக் காரணமென்ன?




# முத்தென ஒளிரச் செய்யும் லக்மே வேனிஷிங் க்ரீம்

லக்மே வேனிஷிங் க்ரீம் உங்கள் சருமத்தில் மறைந்து செயலாற்றுகிறது. அது உடனடியாக உங்கள் முகத்தை எழிலோங்கச் செய்கிறது. சிறிது தடவிப் பாருங்கள். முத்துப் போல் ஒளிரச் செய்யும் அதன் விசேஷ செயலாக்கம் விந்தை புரிவது தெரியவரும்.

உங்கள் முகமவள் முத்தென ஒளிரும் இந்த இலேசான படிமானத்தின் மீது சிறிது லக்மே முகப்பவுடர் பூசுங்கள். இப்போது கண்ணாடியில் பாருங்கள். நீங்கள் எழிலோங்கி எடுப்பாக விளங்குவீர்கள்!

## லக்மே வேனிஷிங் க்ரீம்

Lakme

ASP/L-86

தாள். டாகூரை வணங்கியபின் சாரதையிடம் வந்து அவளது திருவடியில் விழுந்தாள். சாரதாதேவி உலகுக்கு அபயம் தரவே பிறந்த தன்து கையை யோகின் மாவின் சிரத்தில் அழுந்த வைத்து, அவளுடைய இஷ்ட தெய்வத்தின் மந்திரத்தைப் பன்முறை ஜபித்தாள்.

ராமகிருஷ்ணர் ஜீவியவந்தராக இருக்கும் போதே சாரதையின் அநுமதிக்கும் ஆசிக்கும் இடம் ஒதுக்கித் தந்துவிட்டதால் அவர் விடைகொள்ளும் நாள் நெருங்கி விட்டதென்று உறுதியாயிற்று. திரண்டு வந்த அடியார்களிடம் பேச முடியாத தொண்டையால் அன்பு பொங்கப் பேசித் தீர்ந்தார். உபதேசிக்க வேண்டும் என்ற எண்ணமும் தீர்ந்தது.

''எலே சசி, எனக்கு உபதேசிக்கிற ஆசையும் போயிடுத்து. அம்மாவைக் கூப்பிடு. அவளுக்குத்தான் இது ஏன்னு தெரியும். அவ மகாமதி'' என்றார்.

சசி சாரதையை அழைத்து வந்தார்.

''பிரம்மத்தைத் தவிர வேறெந்தப் பிரக்ஞையும் எனக்கு இல்லே. இது ஏன் பிரியே ?'' என்றார்.

பிரம்மம் உலகமாக வேஷம் போட்டுக் கொண்டிருக்கிறது. இந்த வேஷத்தைத் திருத்தவே அது அவதாரம் நிகழ்த்துகிறது. வேஷத்தைச் செம்மை செய்யவே நமது அவதார புருஷர் உபதேசம் தந்தார். இப்போது வேஷம் அவர் மனசிலிருந்து போய்விட்டது. ஸ்வரூபம் மட்டுமே நின்றது. அவதாரம் முடியப் போகிறது என்பது தவிர இதற்கு வேறென்ன அர்த்தம் ?

இதை எப்படி வாய்விட்டுச் சொல்வாள்? முகத்தைத் திருப்பிக் கொண்டு கண்ணீரைச் சுண்டி எறிந்தாள்.

**1886** ஆகஸ்டு பதினைந்தாம் தேதி. தலையணைகளின் மீது சாய்ந்திருந்தார் ராமகிருஷ்ணர். உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது. லக்ஷ்மியைப் பிடித்துக் கொண்டு அம்மா வந்து நின்றாள். ராமகிருஷ்ணருக்கு உலக நினைவு தப்பி விட்டதென்றும் இனி அவர் பேச முடியாதென்றும் எல்லோரும் நினைத்த அச்சமயத்தில் அம்மாவைக் கண்டதும் அவர் நல்ல நினைவுடன் பேசினார் : ''ஆகா நீ இங்கேயேதான் இருக்கியா? பார்த்தியா, நான்தான் எங்கேயோ போறாப்பலே இருக்கு. ஜலத்திலே அளைஞ்சிண்டு எங்கேயோ தொலைதூரத்துக்குப் போறாப் போலே இருக்கு.''

அம்மா விம்மி விம்மி அழுதாள்.

தமது ஆயுட்கால அன்பு முழுவதையும் ஆயுள் முடிகிற சமயத்தில் ஒன்று திரட்டிப் பேசினார் பகவான்: ''அம்மா, துக்கப்படாதே ! உனக்கு ஒரு கவலையும் வேண்டாம். இத்தனை நாளா இருந்தாப்பலேயே இனியும் இருக்கப் போறே! பசங்கள் உன்னை நன்னாப் பார்த்துப்பா. எனக்கு எப்படிச் செஞ்சிருக்காளோ அந்த மாதிரி உனக்கும் செய்வா. அம்மா, லக்ஷ்மியை மட்டும் கொஞ்சம் கவனிச்சுக்கோ.''

சிறு பிராயத்தில் கணவனை இழந்த தமையன் மகளிடம் பகவானின் கருணையைப் பாருங்கள் !

அன்று சாரதையின் உள் மனம் அமங்கள நிழல்களை உலகெங்கும் பார்க்கத் தொடங்கிவிட்டது. சகடம் கழன்ற வண்டி போல் சகல பிரபஞ்சமும் சமநிலை தடுமாறிவிட்டது போல் அவளுக்கு ஓர் அச்ச உணர்வு !

குழந்தைகளுக்காகக் கிச்சடி தயாரித்தாள். அதன் அடிப் பிடித்துக் காந்திப் போயிற்று. சமையலிலே சமயத்தை வாழ்ந்த சாரதையின் வாழ்வில் நடந்திராத விஷயம் ! குழந்தைகளுக்குக் கிச்சடியின் மேல் பாகத்தைப் பரிமாறி விட்டு, அடிக் காந்தலில் சிறிதை மட்டும் தான் உண்டாள். கூரையில் அவள் உலர்த்தியிருந்த மங்கள வஸ்திரம் எங்கோ காணவில்லை. மண் சட்டி ஒன்றை அவள் எடுக்கும்போது தடாலென்று விழுந்து சுக்கு நூறாயிற்று.

மண்ணினால் செய்து கொண்ட சரீரத்தை அன்று பகவான் உடைத்துக் கொண்டு விட்டார்.

இரவு ஒரு மணி இரண்டு நிமிடம். பரமஹம்ஸ ராமகிருஷ்ண குருமகராஜ், ''காளி, காளி காளி'' என்று மும்முறை கூறிவிட்டுப் பிரம்ம சக்தியினுள் ஐக்கியமாகிவிட்டார்.

பரமசுமங்கலியாக வெளி மனிதர்கள் முன்வந்திராத தேவி, மங்கலியம் பறிபோன அந்த நிமிஷத்தில் தன்னை மறந்து உள்ளேயிருந்து ஓடி வந்தாள்.

ஆனந்த முறுவல் இழைய தேஜோமயமாகக் கிடந்த தேவ தேவனின் தேகத்தருகே வந்து நின்றாள்.

மங்கல மாதாவைக் கண்ணால் காணாமல் முதல் முறையாக அவளை அமங்கல மாதாவாகப் பார்த்த அடியார்கள்,— அவளது மெல்லிய மதுரக் குரலை இது வரை கேட்டதில்லை. இன்று அவளது அலறலைக் கேட்டனர் !

''என் அம்மா, காளி! நான் என்ன தப்பு செஞ்சேன்னு என்னை விட்டுட்டுப் போயிட்டே ! அம்மாமா, என்னை ஏன் கைவிட்டுப் போயிட்டே?'' — சாரதாமணியின் இதயம் வெடித்து எழுந்த தீனப் பிளிறல் காசிப்பூர் வீட்டையே உலுக்கிவிட்டது. (தொடரும்)

# எழுக இளைஞனே!

தமிழழகன்

புதுயு கத்தின் இளைஞனே,
பூரிப் போடு களித்து வா!

உதயம் உற்ற காலத்தின்
உண்மை யில்முக் குளித்து வா!

நாளை உலகம் உன்கையில்
நடக்கும் என்று துள்ளி வா!

தோள்உயர்த்திப் பொறுப்(பு) அதைத்
துணிந்து பெற்றுக் கொள்ள வா!

கருதும் பழைமை ஒவ்வொன்றும்
கழிக்கத் தக்க தல்லவே!

பொருதும் புதுமை யாவும் மெய்ப்
புதுமை யன்று, சொல்லவே!

காலம் கடந்த தாஜ்மகால்
காணப் பழைமை கொள்ளுமோ?

கோலம் குலைந்த இன்றையக்
குடிலும் புதுமை துள்ளுமோ?

கடலும் வானும் புதுமைதாம்!
காற்றும்கூடப் புதுமைதாம்!

அடலும் அன்பும் புதுமைதாம்!
அனைத்தும் பண்பால் புதுமைதாம்!

ஆகப் பழைமை புதுமைகள்
யாவும் பயனைப் பொறுத்துதாம்!

போகும் நாட்கள் ஒன்றையே
பொறுத்த தல்ல, மறுத்து தாம்!

பொருந்த இவைநீ உணர்ந்திடின்
பொருள்இல் லாத வைஎலாம்

வருந்திப் புதுமை என்பதாய்
வாழ்த்த வருமோ; பொய்யெலாம்?

எடுப்பாய் அணியும் உடைகளும்
இறங்கும் கேரா முடிகளும்

கொடுப்ப தில்லாப் புதுமைகள்
குறிக்கோ ளில்தான் குடிகொளும்!

இளமை என்னும் திருவையே
ஈசன் உனக்குத் தந்ததும்:

வளமை யாய்அவ் இளமையை
வரலா(று) ஆக்கு, சந்ததம்!

வாழ்க்கை என்பது நீண்டநாள்
வந்து யிர்க்கும் செயல்இல்லை,

ஆக்கும் நல்ல பணிகளே
அன்றி ஏதும் உயர்வில்லை!

சென்ற நாட்கள் செல்லட்டும்
சிறக்க நாட்கள் இனியுண்டு!

வென்று நீயும் புவியிலே
விறு கொள்ளப் பணியுண்டு!

இமயச் சிகரம் தொட்டதும்
ஏறி விண்ணை அளந்ததும்

அமையும் கோள்மீன் ஆய்ந்ததும்
அண்ட வெளியைப் பிளந்ததும்

இளைஞன் உன்கைச் சாகசம்!
ஏதும் மறுக்க ஒண்ணுமோ?

முழுமை யான உலகும் உன்
மூச்சில் லாமல் நண்ணுமோ?

உன்னை ஈன்ற தாயகம்
உனையே நம்பி உள்ளது!

தன்னை ஆளும் பொறுப்பையும்
தாங் துடித்துக் கொள்ளுது!

எனவே நாளைத் தலைவனே,
எழுமா றின்று வேண்டினேன்!

கனவே இல்லை அனைத்துமுன்
காலம் படைக்கத் தூண்டினேன்!

□ முரளி மனம் கசந்து பேசினான். "கடைசியில் உனக்குன்னு தனியாய் ஏதும் யோசனைகள் நிஜம்மா இல்லே. நீ மினி டிரஸ் உடுத்தினதும் நைட்க்ளப்பில் ஜாஸ் மியூசிக் கேட்டதும், 'நாங்க இளைஞர்களே ஒரு தனி உலகமாக்கும்!' அப்படின்னெல்லாம் விறைப்புப் பேசினதும் எந்தவிதமான நிஜப் புரட்சிக்கும் அறிகுறியாய் இல்லே. சும்மா ஒரு 'திரில்'லுக்காகச் செஞ்சே, அவ்வளவுதானே? அதெல்லாம் முடிஞ்சதும் 'கன்வென்ஷனல்' நடப்புக்கு உடனே திரும்பி வந்துட்டே!" அவன் குரல் உடைந்தது. "நீ என்னோடு வரப்போறேன்னு நினைச்சிருந்தேனே, தீபா!" □

# உலகத்தினிடம் என்ன பயம்?

## சூடாமணி



முரளி சாப்பிட்டு முடித்து எழுந்து கை கழுவிக் கொண்டு தன் அறைக்குள் சென்றான். யாரோடும் ஒரு வார்த்தை பேசவில்லை.

பாஸ்கரன் அவன் மௌனத்தைக் கலைக்கத் தயங்கினார். சொந்த மகன்தான் என்றாலும் அந்த இளம் முகத்தின் மீது கவிந்திருந்த சலனமற்ற திரை இலேசாக மருளூட்டியது. அவன் பி. ஏ. பரீட்சை எழுதி முடித்த தினத்திலிருந்தே ஒரு வகையில் ஒதுங்கினாற் போல் காணப்பட்டான். முடிவுகள் வெளியாகித் தேர்வில் வெற்றி யடைந்துவிட்ட தகவல் தெரிந்த பிறகோ இந்தப் புதிய, அச்சுறுத்தும் மௌனத்தினுள் தவத்துள் யோகி போல் புகுந்து கொண்டு விட்டான். அவன் மனத்தில் என்னதான் இருந்ததோ?

போகட்டும். அவருக்கேயல்லவா அவனுடன் பேச ஒரு விஷயம் இருந்தது! ஒருவாறு திடத்தை வரவழைத்துக் கொண்டு




அவனது அறைக் கதவண்டை உள்ளே வந்து எட்டிப் பார்த்தார்.

குறியின்றிச் சுவரைப் பார்த்து வெறித்துக் கொண்டே முரளி தலைக்குப் பின் கரங்களை மடித்து அண்டை கொடுத்துக் கட்டிலில் மல்லாந்து படுத்திருந்தான். இருபது வயது வாலிபர்களிடையே பரவலாகக் காணப்படும் உடை விசேஷம் அப்படி யொன்றும் அதிக மாய் அவனிடம் இல்லை. இறுக்கமான கால் சராய்தான். ஆனால் இந்நாளில் யார்தான் அப்படி உடுத்தவில்லை? நன்கு மழிக்கப்பட்ட முகம். செவிப்புறங்களில் மட்டும் பக்கவாட்டுக் கிருதா நீளமாக இருந்தது. அதற்கும் ஹிப்பித்தனத்துக்கும் சம்பந்தமில்லை என்று அவன் சொல்லி அவர் அறிந்திருந்தார்.

"முரளி!" என்று மெல்ல அழைத்தார் பாஸ்கரன்.

"ம்?" அவன் எழுந்திருக்கவில்லை.

அவர் உள்ளே புகுந்தார். ஒரு நாற்காலியை அவன் அருகில் இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார். சிறிது நேரம் மௌனம் தங்கியது. பிறகு, "பி. ஏ. பாஸ் பண்ணிட்டே" என்று மெள்ள ஆரம்பித்தார்.

"ம்" என்றான் அவன் அவரிடம்.

"பரீட்சை எழுதி முடித்ததுமே தொந்தரவு பண்ண

வேணும்னு இருந்தேன். இப்பத்தான் ரிஸல்ட் கூட வந்தாயிடுத்தே. இனிமேல் பேசலாம்னு நினைக்கிறேன்.''

அந்த 'ம்'கூட இப்போது வரவில்லை.

''மேலே என்ன பண்ணப் போறே?''

பட்டென்று பதில் வந்தது: ''ஒண்ணுமில்லே.''

''டோண்ட் பி ஸில்லி. நான் ஸீரியஸாய்க் கேக்கறேன்.''

''நானும் ஸீரியஸாத்தான் சொல்றேன்.''

''நீ எம். ஏ. பண்ணிட்டு, ஐ.ஏ. எஸ். பரீட்சை எழுதணும்.''

''யார் சொல்றா அப்படி?''

''நான்தான்.''

''நீங்கதானே!'' முதல் முதலாக அவன் கண்களைத் திருப்பி அவரைப் பார்த்து, புன்னகையில் ஏளனம் நெளிய, ''நான் சொல்லலையே!'' என்றான்.

''டே, நான் உன் அப்பாடா!''

''ஸோ வாட்?''

அவர் அடங்கிப் போனார். தம்மைச் சமாளித்துக் கொள்ளச் சிறிது நேரம் ஆகியது. ''நீ புத்திசாலிடா முரளி! மனசு வைச்சியானா ஐ. ஏ. எஸ். ரொம்பச் சுலபமாய் பாஸ் பண்ணிடுவே'' என்றார் தாழ்ந்த குரலில்.

''இருக்கலாம். ஆனால் நான் ஐ. ஏ. எஸ். எழுதறதாக இல்லையே!''

''நீ எழுதணும்னு நான் ஆசைப்படறேன்.''

''நீங்க மறுபடியும் இருபது வயசுக்கு ஆசைப்படறேன், அதுதானே?''

பாஸ்கரனுக்குத் திடுக்கிட்டது. எத்தனை நுட்பமாக அவன் ஊகித்து விட்டான்! உண்மையிலேயே தம் இளமைப் பருவத்தில் தம்மைப் போட்டிப் பரீட்சைக்கு அனுப்பாமல் தம் தந்தை தொழில் துறையில் இழுத்து விட்டு விட்டாரே என்ற குறை அவருக்கு இருந்தது. அதைத்தான் மகனின் மூலம் இப்போது நிறைவு செய்துகொள்ள விரும்பினார். முரளி அப்படி வெளிப்படையாகக் கேட்டுவிடுவானென்று அவர் எதிர்பார்க்கவில்லை.

முரளி மிருதுவாகக் கூறினான்: ''உங்க விருப்பத்தை என்மேல் திணிக்கப் பார்க்காதீங்க அப்பா. என் வாழ்வைத்தான் நான் வாழ முடியும். நான் நானாய்த்தான் இருக்க முடியும். உங்க லட்சியங்களுக்கு என்னை வடிகாலாக்க முயற்சி செய்தால் அது நடக்காது.''

''என்னடா பிரமாதமாய் வாய் கிழியப் பேசறே? ஐ. ஏ. எஸ். பாஸ் பண்ணி அதிகாரியாய் வந்தால் வலிக்கிறதோ? எவ்வளவு பேருக்கு அந்த அதிருஷ்டம் வாய்க்கிறதுடா? எத்தனை பேருடைய அப்பாவாலே அப்படிப் பணம் கட்டிப் பரீட்சை எழுதுன்னு சொல்ல முடிகிறது?''

ஒரு துள்ளுத் துள்ளி எழுந்து நின்று அவரை விழித்துப் பார்த்தான் முரளி. ''நீங்க எனக்காக ஒண்ணும் செய்ய வேணும்ப்பா! பரீக்ஷை எழுத வைக்கிறதென்ன, அவசியமானால் என்னைப் பாஸ் பண்ண வைக்கறதுக்கும் பல இடங்களில் உங்களுக்கு அந்தரங்கச் சலுகை இருக்குன்னு எனக்குத் தெரியும். ஆனால் எனக்கு அதெல்லாம் வேணாம். உங்களுக்குப் பிடிச்சதுதான் எல்லோருக்கும் பிடிக்கணும்னு அவசியமில்லே.'' சட்டென்று அவன் ஆத்திரம் தணிந்தது. எங்கேயோ நிலைத்த பார்வையுடன், கண்களில் ஏதோ துடிப்புடன், அவன் தன்னுள் முணுமுணுத்துக் கொள்வது போன்ற குரலில் உயிர்த்தான்: ''இன்னாருடைய பேரன், இன்னாருடைய பிள்ளை அப்படின்னெல்லாம் இல்லாமல் நான் என்கிறது தனியாய் என்ன? நான் யார்? என்றால் என்ன செய்ய முடியும்? அதைத் தெரிஞ்சுக்கணும் எனக்கு.''

பாஸ்கரன் சிறிது நேரம் அவனைக் குழப்பத்துடன் பார்த்தார். ''ஏன்டா, வாழ்க்கையில் வசதிகள் வேணுமா? பதவி, பாதுகாப்பு அதெல்லாம் வேணுமா? நீ கஷ்டமில்லாமல் வாழணும்கிறதுக்காகச் சொன்னால் என்னென்னமோ பேசறியே?''

''பாதுகாப்பு எங்கே அப்பா இருக்கு? நாளுக்கு நாள் அடிப்படையே மாறிண்டு வர உலகத்திலே எதை நிலையான பாதுகாப்புன்னு சொல்ல முடியும்? அது போகட்டும். கஷ்டமில்லாமல் வாழணும்னா ஐ. ஏ. எஸ். அதிகாரியா யிருந்தால்தான் முடியுமா? ஓர் ஆளுக்கு வேண்டியதைச் சம்பாதிச்சுச் சாப்பிட்டுண்டு வாழ்க்கையில் சந்தோஷமாய் இருக்க முடியாதா?''

''ஏன்டா, நாலு பேருக்கு நடுவில் சமூகத்தில் கௌரவமாய்....''

''கௌரவம் என்கிறதுக்கு நீங்க கொடுக்கிற விளக்கம் நான் கொடுக்காம லிருக்கலாமில்லையா? உங்க அபிப்பிராயங்களும் மதிப்பீடுகளும்தான் உங்க பின்னேங்கறதுக்காக எனக்கும் இருக்கணும்னு அவசியமில்லையே?'' அவன் அறையில் மேலும் கீழும் அமைதியின்றி நடை பயிலத் தொடங்கினான்.

இந்நாள் இளையவர்களின் முதல் பிரச்னை பெற்றோருடன் அவர்கள் உணரும் மோதலும் பிளவும்தானா? பாஸ்கரன் பிரமித்துப் பார்த்தவாறு அமர்ந்திருந்தார்.

அவன் என்ன கேட்கிறான்? முதலிலிருந்தே அவன் சிந்தனை தனி விதமாய்த்தான் இருந்திருக்கிறது. பதினைந்து வயதில் பள்ளிக் கல்வியை முடித்ததுமே மேலே படிக்க மறுத்து விட்டான். ''கை காலை வச்சுண்டு பிழைக்கப் போறேன்'' என்றான். ''வேலையில்லாத பட்டதாரியாய்த் தெருவில் அலையறதைவிட மாடு மேய்ச்சாவது சம்பாதிக்க முடியறதான்னு பார்க்க ஓர் இடையனைத் தேடிண்டு போகப் போறேன்'' என்றான். பல விஷயங்களைக் குறித்த பொது நூல்கள் நிறையப் படித்தான். ''இத்தனை படிக்க முடியறவனுக்கு ஒரு டிகிரி கோர்ஸ் பண்ணறதுதானாடா கஷ்டம்?'' என்றால் ''எனக்கு அதில் சுவாரசியமில்லே. பட்டம் வாங்கத்தான் படிக்கணுமா என்ன?'' என்றான். இவ்வாறெல்லாம் ஆட்டம் காட்டி ஓராண்டைக் கழித்த பின், அவர் மிகவும் கெஞ்சிய தன்பேரில் ''சரி, உங்களுக்காக ஒரு பி.ஏ. எடுக்கிறேன்'' என்று கூறிக் கல்லூரியில் சேர்ந்தான். எனினும் அவன் இயல்பாக இல்லையே!

அவர் பேச வாய் திறந்தார். அதற்குள் அவர் மனைவியின் குரல் வெளி அறையிலிருந்து ஒலித்தது: ''டேய் முரளி, உன் சிநேகிதர்கள் யார்யாரோ வந்திருக்கா, பார்.''

முரளி ஆவலாக வெளியே வந்தான். 'சிநேகிதர்கள் என்றால் தீபாவும் வந்திருப்பாளோ?'



## விளையாட்டல்ல!

லண்டனில் உள்ள ''கிரிஸ்டல் பேலஸ் நேஷனல் ஸ்போர்ட்ஸ் ஸென்டர்''ரின் விஸ்தீரணம் 36 ஏக்கர்! இதில் என்ன வெல்லாம் இருக்கின்றன தெரியுமா? எண்ணிக் கொள்ளுங்கள் :

12000 மக்கள் அமர்ந்து பார்க்கும் வசதி பொருந்திய ஒரு பிரதான ஸ்டேடியம்; 2000 பார்வையாளர்கள் அமரும் வசதி உள்ள விளையாட்டுக்கூடம்; ஒலிம்பிக் நீச்சல் குளங்கள் போன்று விசாலமான நீச்சல் குளங்களைத் தன்னகத்தே கொண்ட பெரிய நீச்சல் கூடம்; நீச்சல் கற்றுத் தருவதற்கான குளம் - அதையொட்டி 2000 பேர் அமர 'காலரி' வசதி; மேற் கூரை கொண்ட கிரிக்கெட் பள்ளி; மற்ற பல விளையாட்டுக்களில் பயிற்சி பெற அறைகள்; 140 மாணவர்களுக்கான ஹாஸ்டல்; உபாத்தியாயர்களுக்கான குடியிருப்புக்கள்.

அப்பாடா! மூச்சு விட்டீர்களா?

---

வந்திருந்தவர்கள் ஸ்ரீதர், அருண், சுரேஷ், மூவர்தாம். அவனுக்கு ஏமாற்றமாகிவிட்டது. காட்டிக் கொள்ளாமல், ''ஹாய்! எல்லாரும் உட்காருங்க. என் அப்பா அம்மாவைத் தெரியும் அல்லவா?'' என்றான்.

அவனைத் தொடர்ந்து அங்கு வந்திருந்த பாஸ்கரனைக் கண்டதும் அவர்கள் ஏதோ தடைப் பட்டாற்போல் செயற்கையாய்ச் சிரித்து வணக்கம் தெரிவித்தார்கள்.

''டேய் முரளி! உனக்குத் தெரியுமா? அந்தச் சேகர் மெடிக்கல் பாஸ் பண்ணிட்டான்'' என்று பொருள் பொதிந்த பார்வையுடன் தகவல் சொன்னான் சுரேஷ்.

''என்ன ஆச்சரியம் அதில்?'' என்று முரளி சிரித்தான். உள் இழையாக ஓடும் அர்த்தம் புரியாமல் விழித்த தந்தையைப் பார்த்ததும், அவனுக்குத் திடீரென்று ஆவேசம் தளும்பியது. ''என்ன விஷயம் தெரியுமாப்பா? அந்தச் சேகருக்கு மெடிகல் அட்மிஷன் ஆனதே ஒரு தினுசு. புரியறதில்லையா? அவன் அப்பா கொழுத்தபணக்காரர்னு வைச்சுக்குங்களேன். இந்த வருஷம் ஃபைனல் பரீட்சையின்போது தலையில் கையை வைச்சுண்டு உட்கார்ந்திருந்தான். ஏன்னா, காலேஜில் சேர்ந்தபோது எத்தனை தெரியுமோ, அத்தனைதான் இந்த அஞ்சு வருஷ முடிவிலும் அவனுக்குத் தெரியும். ஆனா இந்த அஞ்சு வருஷத்திலே வெளிவந்த ஒவ்வொரு சினிமாவின் விவரமும் தலைகீழ்ப் பாடம். இப்போ அதனாலே என்ன நஷ்டமாயிடுத்து அவனுக்கு? பரீட்சை பாஸ்! அப்பா பணக்காரர்னு சொன்னேனில்லையா? நாளைக்கு டாக்டர்னு போர்டு போட்டுண்டு தொழில் நடத்தப் போறான். இவன்மாதிரி ஆளுங்க கையில்தான் நோயாளிகளின் உயிர் இருக்கப் போகிறது.''

அந்தக் குரலின் இகழ்ச்சித் தீவிரம் தாங்காமல் பாஸ்கரன் தலை கவிழ்ந்தார். இது போன்ற ஊழல்களை — போலிகளை — நாணயமின்மைகளைப் — பார்த்துத்தான் இளைஞர் சமுதாயம் மனம் பொறாமல் கொதித்து எழுகிறது. சம்பிரதாய விதியினின்று வேறுபடும் உடை முறைகள், ஒழுக்கச் சரிவுகள் இவையெல்லாம் அவர்கள் அவ்வாறு மனம் குமுறும் புரட்சியின் சின்னங்கள்தாமோ? அந்த இளைஞர்களின் பெல் பாட்டம் சராயையும் நீண்ட தலைமுடியையும் குறுந்தாடியையும் அவர் ஒரு தரம் ஏற இறங்கப் பார்த்தார். இன்னும் கறுப்புக் கண்ணாடி, குருஷர்ட், 'ஸீ த்ரு' ஷர்ட், மணிமாலை, 'க்யூபன் ஹீல்ஸ்' காலணிகள் — இவ்வாறு அவர்களைக் கண்டிருந்த நினைவும் அவர் பார்வையில் பட்டது.

அவரையே ஒரு கணம் உற்றுப் பார்த்த ஸ்ரீதர் திடீரென்று சிரித்தான்.

''ஏம்ப்பா சிரிக்கிறே? இப்போ என்ன அவ்வளவு வேடிக்கையாய்த் தெரியறது?'' என்றார் பாஸ்கரன்.

''இல்லே ஸார்! நீங்க பார்த்த விதத்திலிருந்து எங்க உடை உங்களுக்கு அவ்வளவு பிடித்தமில்லேன்னு தெரியறது.''

''சேச்சே, அதெல்லாம் ஒண்ணுமில்லே.''

''பரவாயில்லே ஸார்! நீங்க மட்டும் இப்படி இல்லே. ரொம்ப அப்பா அம்மாக்கள் இப்படித்தான். ஃபார் இன்ஸ்டன்ஸ், என் பேரண்ட்ஸையே எடுத்துக்குங்களேன்! நான் இந்த மாதிரி உடுத்துக்கிட்டா அவங்களுக்குப் பிடிக்காது. காலேஜில் ஏதானும் ஸ்ட்ரைக்கில் பங்கெடுத்துக்கிட்டால் பிடிக்காது. 'கர்ல் ஃபிரெண்ட்ஸ்' வச்சுக்கிட்டா பிடிக்காது, காலேஜிலிருந்து கொஞ்சம் லேட்டாய் வந்தால் ஆயிரம் கேள்விகள்...''

''அதிலே என்ன தப்பு?'' என்று பாஸ்கரன் அதற்கு மேலும் அடக்க மாட்டாமல் கேட்டார்.

''என்ன தப்பா?'' ஸ்ரீதரின் முகம் ஆவேசமுற்றது. ''நாங்க என்ன, குழந்தைகளா? கெட்டுப் போறதாயிருந்தால் இந்த அப்பா அம்மாவால் தடுத்துவிட முடியுமா? எங்களை நம்பவேணுமா? அர்த்தமில்லாமலா ஸ்ட்ரைக் செய்வோம்? பெல் பாட்ஸும், கர்ல் ஃப்ரண்ட்ஸும் இந்தக் காலத்தின் ஓர் அம்சம். அது ஒரு பாவமா? பழங்காலத்து 'அவுட் மோடட்' கருத்துக்களையும், கண்ணோட்டங்களையும் இன்னும் பிடிச்சுக்கிட்டு பேரண்ட்ஸ் எங்களை அடக்குமுறை செய்யக் கூடாது ஸார்! எங்களுக்கு அவங்க சுதந்திரம் கொடுக்கணும். இல்லேன்னா, இதோ இருக்கானே அருண், இவன் அண்ணன் செஞ்ச மாதிரிதான் செய்யும்படி ஆகும்.''

பாஸ்கரன் கேட்பதற்கு முன்னால் அருண் தானாகவே சொன்னான்: ''என் அண்ணன் என்ன செஞ்சான்னு கேக்கறீங்களா? எங்கப்பா ரொம்பப் பழங்காலம். எதுக்கெடுத்தாலும் 'இதைச் செய், அதைச் செய்யாதே' அப்படின்னு இதே மாதிரி கட்டுப்பாடுகள்தான். அது அதிகமாய்ப் போகவே, அண்ணன் வீட்டைவிட்டே ஓடிவிட்டான். அதில் பயந்து போய் எங்கப்பா என்னை ஏதும் கண்டிக்கிற இல்லை. வெறும் பயத்தால்தான். மத்தபடி என் மனசைப் புரிஞ்சுகண்டதாலோ என்னையும் ஒரு தனி மனுஷனாய் மதிக்கிறதாலோ என்கிட்ட நம்பிக்கை இருக்கிறதாலோ இல்லை.''

அவன் குரலின் ஓரத்தில் தெறித்தே உயர்ந்து நிற்கும் ஓர் ஆற்றாமை. பாஸ்கரன் சஞ்சலம் அடைந்தார். பெற்றோர்கள் தம்மைப் புரிந்து

கொள்ளவில்லை என்று உள்ளே இந்தக் குழந்தைகளுக்கெல்லாம் இத்தனை வருத்தமா?

'நான்கூட முரளியைப் புரிந்து கொள்ளத் தவறிவிட்டேனு?' அவர் பார்வை சட்டென்று மகனின் மீது தாவியது. மகன்... கூடவே, தனியொரு மனிதனுமல்லவா? அவனுக்கென்று ஏதோ சிந்தனைகள், திட்டங்கள்... உண்மையாகத்தான், சென்று போன ஒரு யுகத்தின் வார்ப்பில் இந்தப் புது உயிர்களை எப்படித் திணிக்க முடியும்? 'இவன் என் மகன், ஆகவே என்னுள் அடக்கம்' என்ற மனப்பான்மையேதான் 'தலைமுறை இடைவெளி' என்பதோ?

கலக்கமான எண்ணங்களை விலக்கிக் கொண்டு அவர் அவர்களிடம், ''நீங்களெல்லாம் பி.ஏ. தேறியாச்சே, மேலே என்ன செய்வதாக உத்தேசம்?'' என்று பேச்சை மாற்றினர்.

வாலிபர்கள் மௌனமாய் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். அருண்தான் முதலில் பேசினன். ''உத்தேசம் என்ன ஸார், உத்தேசம்? வேலைக்குத்தான் போகணும்... ஆனல் வேலை என்ன உடனே ரெடியாகவா இருக்குது? எங்கே பார்த்தாலும் 'அன் எம்ப்ளாய்மெண்ட்' வெளிநாடுகளுக்குப் போய்ப் பிழைக்கலாம்னு அங்கங்கே அந்தந்த ஊர்க்காரனே வேலையில்லாமல் திண்டாடுறன். இதில் யாரை விட யார் தேவலே? மனசு முறிஞ்சு ஒரேயடியாய்ச் சோர்ந்து போயிடுது'' என்றான்.

''ஆனு அதுக்காகச் சும்மாவுந்தான் இருக்க முடியுதா? வேலைக்குப் போய்த்தான் தீர வேண்டியிருக்கு. கண்ணில் பட்ட இடத்துக்கெல்லாம் நான் மனுப் போட்டிருக்கேன். நீங்களும் ஏதாவது வேலை காலின்னு கேள்விப்பட்டால் சொல்லுங்களேன்!'' என்றான்ஸ்ரீதர்.

சுரேஷின் முகம் விறைப்பாக இருந்தது. ''ஏதாவது வேலைன்னு எப்படி? நாமெல்லாம் கிராஜுவேட்ஸ். அதுக்குத் தகுந்த அந்தஸ்து வேணுமா? பி.ஏ. படிச்சுட்டு ஒரு நூறு ரூபாய் வேலைக்குப் போக முடியுமா?''

''நான் போவேன்!'' என்றான் ஸ்ரீதர். சிரித்துக் கொண்டே பேசிய அவன் குரலில் பாதுகாப்பை அவாவும் பயம் தொனித்தது. ''தெருவுக்கு நூறு கிராஜுவேட்ஸ் இன்று படறுங்க. நம்மை யாருடா கேக்கறுன்?''

''உண்மை. வாழ்க்கைத் தேவைக்கு உபயோகமில்லாத படிப்புத்தானே படிக்கிறோம்?'' என்ற முரளி, தந்தையைப் பார்த்தவாறே, ''இந்த பி. ஏ., எம். ஏ. பட்டங்கள் மாஞ்சாக் கயிறு கட்டி ஆகாயத்திலே பறக்க விடறதுக்குத்தான் லாயக்கு'' என்றான்.

''அது எப்படியானாலும் நான் கண்டைக்காய் வேலைக்கெல்லாம் போக மாட்டேன். என் அப்பா கூட எந்த வேலை கிடைச்சாலும் ஏத்துக்கச் சொல்றர். ஆனல் எனக்கு இஷ்டமில்லே. குறைஞ்சது முந்நூறு ரூபாயாவது சம்பளமுள்ள வேலை கிடைச்சால்தான் நான் போவேன்'' என்றான் சுரேஷ்.

''அது வரைக்கும்?'' என்று பாஸ்கரன் கேட்டார்.

''சும்மாத்தான் இருப்பேன். அப்பா தான் சோறு போடணும்.''

''அவர் விருப்பப்படி நீ நடக்காதபோதும் கூடவா?''

''ஆமாம், என்ன சந்தேகம்? பெத்தவங்க கடமைதானே அது?''

''பிறந்தவங்களுக்கு ஏதும் கடமை இல்லையா?''

''நாங்க பிறக்கணும்னு கேட்டோமா?''

பாஸ்கரனுக்கு ஆத்திரம் பீறி வந்தது. அதைச் சமாளித்துக் கொள்வதற்காக அவர் ''நீங்கள்ளாம் இப்படியே உட்கார்ந்து பேசிண்டிருங்க. நான் உள்ளே போய் எல்லாருக்கும் கூல் ட்ரிங்க் அனுப்பறேன்'' என்றவாறு அங்கிருந்து விரைந்தார்.

முரளி, ''அப்பாடா! வாங்கடா எல்லாரும் என் ரூமுக்கு'' என்று நண்பர்களைத் தன் அறைக்கு அழைத்துச் சென்றான். அங்கு சென்றதும் முதல் செய்தியாக ஸ்ரீதர் அவனிடம் ''விஷயம் தெரியுமா முரளி? தீபாவுக்குக் கல்யாணம் நிச்சயமாயிடிச்சாம்'' என்று அறிவித்தான்.

முரளியின் முகம் களை இழந்தது.

இரண்டு நாட்களுக்குப் பின் முரளி தீபாவை அவளுடைய வீட்டுத் தோட்டத்தின் வெளியே சந்தித்து விசாரித்தபோது அவள் அந்தத் தகவலை ஊர்ஜிதப்படுத்தினள்.

முரளி பிரமித்துப் போய் அவளையே சிறிது நேரம் பார்த்தவாறு இருந்தான். தீபா அவனுடைய சக மாணவி. அவளும் பி. ஏ. தேறிவிட்டாள்.

தோளிலிருந்து நழுவி நழுவி விழும் குட்டையான சேலைத் தலைப்பைச் சமாளித்துக் கொண்டே அவள் அவனை நேராகப் பார்க்காமல் தெரு மூலையில் தென்பட்ட ஓர் அரசியல் சுவரொட்டியைப் பார்த்தவாறு நின்றாள். பெரும்பாலும் மினி ஸ்கர்ட், ஸ்ட்ரெச் பான்ட், எலி(ஃபென்ட்) பான்ட், லுங்கி, குருஷர்ட் இப்படியே ஏதாவது உடுப்பவள் இன்று புடவையில் காட்சி யளித்ததே மாறுதலுக்குக் கட்டியம் கூறியது.

''என்னென்னமோ புரட்சிகரமா யெல்லாம் பேசினியே நீ! உன் விருப்பத்துக்கு விரோதமாய் யாரும் உன்னைக் கட்டுப்படுத்த முடியாதுன்னெல்லாம் சொன்னியே!'' என்றான் முரளி கடைசியில்.

''நான் சம்மதிச்சுத்தான் என் அப்பா அம்மா கல்யாணம் நிச்சயம் செய்திருக்காங்க'' என்றாள் தீபா. கையற்ற, இறந்த கழுத்துப் பச்சைச் சோளியும் நெற்றியின் பச்சைத் திலகமும் வேர்வையில் நனைந்தன.

''என் மாதிரியே நீயும் நினைக்கிறதாச் சொன்னியே தீபா! நான் வீட்டை விட்டுப் போற தினம் நீயும் என்கூட வருவதாகச் சவால் விட்டியே! கல்யாணத்துக்கெல்லாம் என்ன அவசரம்னு கேட்டியே! கடைசியில்..''

''அப்பாதான் சொன்னர், பி. ஏ. முடிச்சாச்சு, இனிமேல் கல்யாணம்தானு. அதனலே....''

''அதனலே சரின்னு ஒத்துண்டுட்டே, இல்லையா?'' முரளி மனம் கசந்து பேசினன். ''கடைசியில் உனக்குன்னு தனியாய் ஏதும் யோசனைகள் நிஜம்மா இல்லே. நீ மினி டிரெஸ் உடுத்தினதும், நைட் கிளப்பில் ஜாஸ் மியூசிக் கேட்டதும், 'நாங்க இளையவர்களே ஒரு தனி

# கோகுலம்

முதல் இதழ்
வெளிவந்துவிட்டதே!
வாங்கிவிட்டீர்களா?



உலகமாக்கும்' அப்படின்னெல்லாம் விருப்பப் பேசினதும் எந்த விதமான நிஜப் புரட்சிக்கும் அறிகுறியாய் இல்லே. சும்மா ஒரு 'த்ரில்'லுக்காகச் செஞ்சே, அவ்வளவுதானே? அதெல்லாம் முடிஞ்சதும் 'கன்வென்ஷனல்' நடப்புக்கு உடனே திரும்பி வந்துட்டே''. அவன் குரல் உடைந்தது. ''நீ என்னோடு வரப்போறேன்னு நினைச்சிருந்தேனே தீபா!''

''ஒண்ணும் குறியில்லாமல், தெரிஞ்சதையெல்லாம் பின்னே விட்டுட்டு, பரந்த உலகத்துக்குள் துணிஞ்சு நுழையறதுன்னு சுலபமா முரளி? நீயே யோசிச்சுப் பாரு...''

''பயம்! கடைசியில் வெறும் பயம்!'' முரளி இகழ்ச்சியுடன் சிரித்தான். ''நீ வெறும் கோழைன்னு நான் புரிஞ்சுக்காமப் போயிட்டேன். பழக்கமானதின் பாதுகாப்புத்தான் கடைசியில் உனக்கு வேண்டியிருக்கு, இல்லையா? தனிச்சு நின்னு கேள்வி கேக்கற தைரியம் உனக்கு வராது, இல்லையா?'' அவன் ஆத்திரமாய் அவள் தோளைப் பற்றினான்.

தீபா வெகுண்டாள். தோளை விடுவித்துக் கொண்டு தள்ளி நின்று அவனைச் சினத்துடன் நோக்கினாள். ''எனக்கா தைரியம் இல்லே? அவ்வளவு சுதந்திரமான மாணவ வாழ்க்கை முடிஞ்சதும் முடியாததுமாய் ஓர் ஐதிக வாழ்க்கைக்கு என்னை நான் 'அட்ஜெஸ்ட்' பண்ணிக்கணுமே! அதைச் சமாளிக்கத் தைரியம் வேணுமா?'' என்று கண்ணீர் ததும்பக் கூறிவிட்டு வீட்டுக்குள் ஓடினாள்.

கேள்வி கேட்பதனால் வரும் ஆத்ம வேதனையை வகிக்கத் திராணி இல்லாததால் கேள்வி கேட்கும் மனத்தையே கொன்றுவிட்டுச் சம்பிரதாயத்தின் தடம் பதிந்து போன சுவட்டையே தீர்வு என்று ஏற்றுக் கொண்டு விட்டாளா?

முரளி வெகுநேரம் யோசனையோடு அசையாமல் நின்றான். பிறகு மெதுவாகத் தன் வீட்டை நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

போரும் அழிவும் அச்சுறுத்தும் யுகம். போலியும் பாரபட்சமும் வறுமையும் மலிந்த சமூகம். இதயமற்று வெறும் யந்திர கதியில் ஸ்தூல வெற்றியையும் லௌகிகச் செழிப்பையும் மட்டும் நாடிப் பறக்கும் போட்டி வெறி கொண்ட சீலமிழந்த சமூகம். இதில் உண்மையான மதிப்புக்கள் எங்கே? தனி மனிதனின் தகுதி எங்கே? அதைக் கண்டுபிடிக்காவிட்டால், தன்னைத் தனக்கே நிரூபித்துக் கொள்ளாவிட்டால், அழுகிப் போன சமூகத்தோடு சமரசம் செய்து கொண்டோ அல்லது மனக்கசப்பு காரணமாகத் தானும் தீமையில் இறங்கியோ தரமிழந்து போவோரைப் பின்பற்ற மறுக்காவிட்டால் உண்மையான மனிதனாக எப்படி இருக்க முடியும்? பெரியவர்களுக்கு அந்த மானிட நிரூபணம் தேவையில்லாமல் இருக்கலாம். ஆனால் இளையவர்கள் தம் ஆத்மாவை இழக்க முடியுமா?

பரிச்சய வாழ்வு முறையை விட்டு விட்டு அவன் தன்னுள்ளிருக்கும் மனிதனைத் தேடிப் போய்த்தான் ஆக வேண்டும். அப்படிப் போவதில் சுய ஆதாரம், சுதந்திரம் இவற்றோடு கூடப் பழைய சம்பிரதாய அமைப்பில் அதிகாரத்தின் உருவகமாய் நிலவும் 'தந்தை' என்பவரின் வட்டத்தை நீத்துச் செல்வதில் இளமையின் புரட்சி உணர்வுக்கு நிறைவும் கிட்டியது.

வீட்டை விட்டுப் போய்த் தன்னைத் தானே பரீட்சித்துக் கொள்ள வேண்டும் என்ற தாபம் இன்று நேற்று ஏற்பட்டதல்லவே! பதினைந்து வயதிலேயே அதை நடப்பில் கொண்டு வர எண்ணினான். பிறகு பெற்றோரின் தீவிர விருப்பம் காரணமாக அவர்களுக்குத் தான் இயற்றும் ஒரு பிரதியுபகாரமாக எண்ணி அவர்கள் கோரியபடி பட்டப் படிப்புப் படித்தான். இனி அவன் தன் பக்கமாகத் திரும்பிக் கொள்ள வேண்டும். தீபா வராவிட்டால் அவன் தனியாகவே செல்வான்.

வீட்டை அடைந்தபோது, இரவு பத்து மணி. உள்ளே நுழைந்தபோதே அம்மா, ''என்னடா இத்தனை நேரம் ஊர் சுத்திட்டு வரே? இந்தக் காலத்துப் பசங்களே...'' என்று இரைந்தாள்.

முரளி கோபத்தை அடக்கிக் கொண்டு, ''ஒரு சிநேகிதனைப் பார்த்து விட்டு வந்தேன்'' என்றான். பாவம், அம்மாவை விட்டு விட்டுப் போகப் போகிறேனே, அவளோடு இப்போது ஏன் வாக்குவாதம்?

பெற்றோருக்குத் தெரியாமல் அவன் போவதாக இல்லை. அது குற்றமாகும். அவர்களிடம் சொல்லிவிட்டு, தன் கருத்தை விளக்கிவிட்டு மீண்டும் வந்து அவர்களைப் பார்க்கும் எண்ணத்துடன்தான் விடைபெற்றுக் கொண்டு போவான்.

எங்கே போவது?

எங்கானால் என்ன? தான் ஒரு தனி மனிதனாக அவனால் பிழைக்க முடியாதா என்ன? ஒற்றை வயிறு நிரம்பப் போதுமானதைச் சம்பாதிக்க முடியாதா என்ன? எந்த நேர்மையான உழைப்பிலும் இழிவில்லை என்று நம்புவோருக்கு உலகத்தினிடம் என்ன பயம்?

சுரேஷ் அப்படி நம்பவில்லையே என்று முரளி வருந்தினான். அவன் தன் தகப்பனார் சொன்னார் என்பதற்காகத் தனக்குப் பிடிக்காத ஒரு வேலையை ஏற்றுக் கொள்ளத் தயாராயில்லை என்பதை முரளி தவறாகக் கருதவில்லை. ஆனால், பெற்றோரிடம் தனக்கு ஏதும் கடமை இல்லை என்று கருதும் சுரேஷ் தன்னிடம் மட்டும் அவர்களுக்குக் கடமை இருப்பதாக எப்படி நினைக்கலாம்? தன் விருப்பம் ஈடேறும் வரை அவர்கள்தான் சோறு போட வேண்டும் என்று எப்படி எதிர்பார்க்கலாம்?

நான் அவன் மாதிரி அப்படி எதிர்பார்க்கவில்லை. அப்பாவின் பேச்சை நான் கேட்கப் போவதில்லை. ஆகவே, அவருக்கு என்பால் உரிமையை மறுக்கும் நான் அவர் மீது கடமையையும் திணிக்கப் போவதில்லை. அவருக்கு விருப்பமில்லாத வாழ்வை வாழ்வதற்கு நான் என் கால்களிலேயே நின்றுகொள்வேன்.

அந்த எண்ணத்தில் அவனுள் இனிமை படர்ந்தது. ''சாப்பிடப் போகலையாடா முரளி?'' என்ற பாஸ்கரனின் தூக்கம் வழியும் கேள்விக்கு ''இதோ போறேம்ப்பா!'' என்று பதில் தந்தபோது, தந்தை — மகன் உறவைத் தாண்டி இரு மனிதர்கள் என்ற சமத்துவ உணர்ச்சியினால் அவரிடம் அவனுக்குப் புதியதோர் அன்பு பிறந்தது.

# கண்கவர் எழில்விருந்து '72

# கைத்தறி கண்காட்சி





ஒவ்வொரு வழியிலும் விலைமதிக்க
முடியாத சேகரிப்பு!
தேர்ந்தெடுக்கப்பட்ட கையிருப்பு.
வெவ்வேறு தறிகளிலிருந்து
வந்திருக்கும் கைத்தறி ரகங்கள்.
கைத்தறி பிரியர்களுக்கு
அனுகூலமான பகட்டான
பரவசமூட்டும் ஆடைகள்.

கைத்தறிக் கண்காட்சி
ஆண்டுக்கு ஒரு முறையே வரும்.
தகுதிவாய்ந்த தேர்ந்தெடுப்புக்கே
இந்த காத்திருப்பு. நேர்த்தியான
கைத்தறி ஆடைகள்: புடவைகள்,
வேட்டிகள், லுங்கிகள், படுக்கை
விரிப்புகள், மற்றும் ரெடிமேட்
ஆடைகள் பிரத்தியேக தள்ளுபடியில்
கிடைக்கும். இவ்வாண்டு
ஏப்ரல் மாதம் நடைபெறும்
கைத்தறிக் கண்காட்சி
இவ்வாண்டின் மிகச்சிறந்த சிறப்பு
நிகழ்ச்சியாகும்.

எல்லா

**கோ-ஆப்டெக்ஸ்**



**கைத்தறி துணிகளுக்கும்**
**10% விசேட தள்ளுபடி.**

2.4.'72 முதல் 16-4-'72 வரையில்.

இடம்: 34/1-A, பாந்தியன் ரோடு,
எழும்பூர், சென்னை-8.

Criterion CO 2697 TM B



அவள் மீது அவனுக்குக் கொள்ளை ஆசை. அவளை ஆசைப் பட்டு, 'என்னைக் கல்யாணம் செய்து கொள்வாயா?' என்று கேட்டான்.

பிறகு அவர்கள் நீண்ட காலம் ஆனந்தமாக வாழ்ந்தார்கள். ஏனென்றால் அவன் கேட்ட கேள்விக்கு அவள் அளித்த பதில்: ''மாட்டேன்?''



''சாதாரணமா எனக்கு ஹோட்டல் டிபன்னுலே ருசிக்கிறதில்லே. என்னமோ தெரியல்லே இன்னைக்குப் பிரமாதமாயிருக்கு.''

''எனக்குப் புரியறது! பில்லே நான் கொடுக்கப் போறேன் பாரு!''





''எம்மா அடிக்கடி 'நாழி யாக்க ஸோம்பு'ன்னு கூப்பிடறே? 'இதோ இரண்டு நிமிஷத்திலே ஸெம்பறேன்'னுதான் ஒரு மணி நேரமா சொல்லிண்டிருக்கேனே!''

# இளம் சிரிப்பு!






''டேய்! ஒளிவு மறைவு இல்லாமல் சொல்லு! ஒன்னையும் மறைக்காதே! 'ஸ்டிரிப் டீஸ்' டான்ஸ் பார்த்துட்டு வந்தியா, இல்லேயா?''

சாமா

# பெண்மையின் மென்மையை உணர ஆண்களைப் போல் 'ஷேவ்' செய்யாதீர்!

ஆன் பிரெஞ்சு ஹேர் ரிமூவர் தடவி பெண்மை வழியிலே உரோமத்தை வழித்தெறியுங்கள். அது மென்மையானது, இன்மணம் கொண்டது. உரோமங்களின் வேர்கள் வரை ஊடுருவிச் செயல் புரிகிறது. வெட்டுக்கள் இல்லை, உரோமத் துகள்கள் இல்லை. வாரக் கணக்கில் வழவழப்பான சருமம்.




## பட்டுப்போன்ற கரங்களுக்கும் கால்களுக்கும்.

## ஆன் பிரெஞ்சு ஹேர் ரிமூவர்

ட்ரேட்மார்க்கின் ரெஜிஸ்டர்ட் யூஸர்: ஜெப்ரி மேனர்ஸ் & கம்பெனி லிட்.    95-AF-172-Tam.




"நம் நாட்டில் நாற்பது சதவிகிதத்தினர் தான் படித்தவர்கள். அப்படியிருந்தும் நமக்கு வேலையில்லாத் திண்டாட்டம் உள்ளது. இதற்குக் காரணம் நமது மோசமான கல்வித் திட்டமே ஆகும். ஆகையால் கல்வித் திட்டத்தைத் தொழிற் கல்வித் திட்டமாக மாற்ற வேண்டும். அதற்குப் பொதுமக்கள் ஆதரவு தரவேண்டும்" என்று கல்வி அமைச்சர் திரு நெடுஞ்செழியன் அவர்கள் குத்தாலம் அரசினர் உயர்நிலைப் பள்ளி பொன்விழாவின் போது குறிப்பிட்டார்கள்.

இதையே திரு ராஜாஜி அவர்கள் கூறிய போது எதிர்த்த திராவிடக் கழகத்தாருக்கு ஜப்பான் போன்ற வெளிநாட்டுப் பயணத்தால் ஞான உதயம் தோன்றியுள்ளது. இப்போதாவது உணர்ந்தார்களே என்று பாராட்ட வேண்டும். இதனை விரைவில் செயல்படுத்துவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

அரையபுரம்
31—3—72 எஸ். சந்திரசேகரன்

இலங்கை மக்களால் 'மலைநாட்டுக் காந்தி' என்று போற்றப்பட்டவரும், பாட்டாளி வர்க்கத்தினரின் வழிகாட்டியும் தலைவருமான அமரர் திரு கே. இராஜலிங்கம் அவர்கள் மறைந்து ஆண்டுகள் ஒன்பது உருண்டு விட்டன.

மறைந்துவிட்ட அந்தப் பெரியவர், பேராசிரியர் "கல்கி" அவர்களின் ஆத்ம நண்பராவார். பேராசிரியர், 'கல்கி'யில் அடிக்கடி தம் நண்பரின் தன்னலமற்ற சேவையைப் பாராட்டி எழுதியும், கல்கியின் அட்டையில் அன்னவருடைய படத்தைப் பிரசுரித்தும் கௌரவித்தார்.

இலங்கையின் மலைப் பகுதிகளில் வாழும் இந்தியத் தொழிலாளருக்காகவே தம் வாழ்நாட்களை அர்ப்பணித்த அந்தத் தியாக சீலரின் நினைவாக, அவருடைய பணியைத் தொடர்ந்து, இன்று வாழ்ந்து கொண்டிருக்கும் தலைமுறையினரும், நாளை வாழப் போகும் தலைமுறையினரும் உணரும் பொருட்டு, "இராஜலிங்கம் ஞாபகார்த்தக் குழு" கடந்த 23—1—72 அன்று கொழும்பில் அமைக்கப்பட்டது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தக் குழு அவருடைய மிக நெருங்கிய நண்பர்களுடைய தீவிர முயற்சியால் ஏற்படுத்தப்பட்டது.

மேற்படி 'குழு'வின் தலைமைப் பொறுப்பைப் பிரபல சமூக சேவையாளரும், இமக் இலங்கை காகிதக் கூட்டு ஸ்தாபனத்தின் தலைவருமான திரு கே. சி. தங்கராஜா அவர்கள் ஏற்றுள்ளார்கள். மற்றும் பல பிரமுகர்கள் குழுவில் முக்கிய அங்கம் வகிக்கிறார்கள்.

ஆர். சகாதேவன்
கொழும்பு — 2 இணைச் செயலாளர்,
23—3—72 இராஜலிங்கம் ஞாபகார்த்தக் குழு

'ரயில் வண்டிகளில் மதுபானம் அருந்துவதற்குத் தடை ஏதும் கிடையாது. ஆனால் பயணிகள் ரயில்களில் ஒழுங்கினமாக நடந்து கொள்வதற்குத் தடை உண்டு' என்று ரயில்வே துணை மந்திரி ஜனாப் முகமது ஷாஃபி குரேஷி சில தினங்களுக்கு முன்னால் பார்லிமெண்டில் தெரிவித்தார்.

நான் எனது சகோதரி குழந்தைகள் சகிதம் வால்டேரிலிருந்து சென்னை வரும்போது, ரயிலில் வந்த ஒரு பயணி குடித்துவிட்டுச் செய்த செயல்கள், சக பிரயாணிகளை, குறிப்பாகப் பெண்களையும், குழந்தைகளையும் மிக்க கலவரத்தில் ஆழ்த்தின.

தூக்க மருந்தை ஒருவனுக்குக் கொடுத்து விட்டு அவனை நீ தூங்கினால் தவறு என்பது போல் இருக்கிறது மந்திரி அவர்களின் பதில். எப்படி சினிமா அரங்குகளிலும், பஸ்களிலும் புகை பிடிப்பது கண்டிப்பாகத் தடுக்கப்படுகிறதோ, அது போல் ரயில் வண்டியில் மதுபானம் அருந்துவதும் தடை செய்யப்பட வேண்டும்.

சென்னை — 31
24—3—72 எஸ். சிவசுப்பிரமணியன்

ஒவ்வொரு வருடமும் அரசாங்கத் துறை தொழில்களில் நஷ்டம் அதிகரித்து வருகிறது. அத்தொழிலகங்களில் அரசாங்கம் சுமார் 4,200 கோடி ரூபாய் முதலீடு செய்துள்ளது. சென்ற ஆண்டு அரசாங்கத் தொழிலகங்களில் ஏற்பட்டுள்ள நஷ்டம் 3.5 கோடி ரூபாயாகும்.

தொழிலகங்களில் பல அவற்றின் மூலதனத்தையும்விட அதிக நஷ்டத்தை இதுவரை அடைந்துள்ளன. உதாரணமாக, போபாலில் உள்ள ஹெவி எலக்ட்ரிகல்ஸ் தொழிலகத்தின் மொத்த மூலதனம், ஐம்பது கோடி ரூபாய். இதுவரை இது அடைந்துள்ள நஷ்டம் ஐம்பத்தேழு கோடி ரூபாய். இதுபோல் ராஞ்சியிலுள்ள கனரக எஞ்சினீரிங் தொழிற்சாலை 113 கோடி ரூபாய் நஷ்டத்தை அடைந்துள்ளது. இந்தத் தொழிற்சாலையின் மூலதனம் நூறு கோடி ரூபாய்.

இந்த நிலை மத்திய அரசாங்கத்தால் நடத்தப்பெறும் தொழிலகங்களுக்கு மட்டுமல்ல, மாநில அரசுக்குச் சொந்தமான தொழிலகங்களுக்கும் பொதுவானதாகும்.

பெருத்த முதலீட்டுக்குப் பிறகும், அரசுக்குச் சொந்தமான தொழிலகங்கள் வருடா வருடம் நஷ்டத்தை அடைந்து வருவதும், நஷ்டத்தை ஈடு செய்ய அரசாங்கம், மேலும் மேலும் வரியை உயர்த்தி அதன் மூலம் கிட்டும் வருவாயை இத்தொழிலகங்களில் விரயமாக்குவதும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இதற்கு ஒரு முடிவு கிடையாதா?

சென்னை
25—3—72 ரா. ஜெயராமன்

# ஏக்கங்கள், எதிர்ப்புகள்; முயற்சிகள், வெற்றிகள்!

## 1

இன்றைய இளைஞர் தலைமுறையைச் சேர்ந்தவர்களை, சிலர் வருங்காலத் தலைவர்களாகக் கருதுகிறார்கள். சிலர் அவர்களை ஒரு பிரச்னையாகவே நினைத்து அஞ்சி ஒதுங்குகிறார்கள். சிலர், அவர்களின் சித்தஸ்வாதீனத்தையே சந்தேகிக்கிறார்கள். எஞ்சிய சிலர் ஒரு சபாஷ் போட்டு ஷொட்டும் கொடுக்கிறார்கள். திடீரென்று மாறி வரும் அவர்களுடைய நடை உடை பாவனைகள், எதிலும் பற்றற்ற போக்கு, பழைமையைத் துறக்கும் வேகம், பகட்டான, பற்றுக்குறையான ஆடை அலங்காரங்கள் எல்லாமே இவ்வாறு மாறுபட்ட அபிப்பிராயங்களை எழுப்ப வழிகோலுகின்றன என்று சொல்லலாம். இந்தத் திடீர் மாறுதல்களுக்குப் பல காரணங்கள் சொல்லப்படுகின்றன. 'எங்கள் தனித்துவத்தைக் காண்பிக்க இதுதான் வழி' என்று சொல்பவர்களும் 'நாங்கள் புரட்சி விரும்பிகள்' என்று அறிவிப்பவர்களும் 'புது வழி நடந்தால் புகாரா?' என்று பொருமுபவர்களும், இன்றைய இளைஞர் சமுதாயத்தில் ஒரு பகுதி இருக்கிறார்கள். "இந்தப் புரட்சியும் போலிப் புதுமையும் எங்கு போகிறோம் என்று தெரியாத வழியும் நமக்கு அவசியம் தானா?" என்று கேட்பவர்களும் ஒரு பகுதி இருக்கத்தான் செய்கிறார்கள்.

சுதந்திரத்தை விரும்புகிறோம் என்று பகட்டாகக் கூறும்போதே இவர்கள் சில தருணங்களில் வன்முறைகளில் ஈடுபட்டுப் பிறரது சுதந்திரத்துக்கு ஊறு விளைவிக்கிறார்கள்.

அன்று குறுநில மன்னர்கள் இருந்தார்கள். இன்று குறுந்தாடி மாணவர்கள் இருக்கிறார்கள். அன்று குடுமி கட்டிய பெருநிலக் கிழார்கள் இருந்தார்கள். இன்று கட்டாத குடுமியாகத் தொங்கும் நீளக் கேசத்துடன் பருவக் காளைகள் சுற்றி வருகிறார்கள். அன்று முழங்கையையும் மறைக்க ஆடையணிந்த பெண்மணிகள் இருந்தது போல் இன்று முழுமுதுகையும் மறைக்க முடியாத விதத்தில் ஆடையணியும் பெண்ணரசிகள் வளைய வருகிறார்கள்.

'ஏதோ வேகம்?' என்று ஒதுக்கவும் முடியாது. 'ஏன் இந்த வேகம்? வேஷம்' என்று ஆராயவும் முடியாது. இந்த நிலையில் வாழ்க்கையில் வெவ்வேறு துறைகளைச் சேர்ந்த, இன்றைய இளைஞர் சமுதாயத்தின் பிரதிநிதிகளை சந்தித்தபோது, அவர்களுடைய ஆசாபாசங்கள், விருப்பு வெறுப்புகள், வெற்றி தோல்விகள், வாழ்க்கை நடைமுறைகள் முதலியவற்றைத் தெரிந்து கொள்ள முடிந்ததோடல்லாமல், இன்றைய மாறுதல்களை அவர்கள் எவ்வளவு தூரம் ஏற்றுக் கொள்கிறார்கள், எதிர்க்கிறார்கள் என்றும் உணர முடிந்தது.

நீங்களும் அவர்களைச் சந்தியுங்கள்!





### "தாடி அல்ல 'கோட்டீ'"

எல். வி. ஸ்ரீநாத்
பி. ஏ., பி. எல்.

ஏன் சார்! என் மனைவியே என் தாடியைப் பற்றி ஒன்றும் குறை சொல்லவில்லே! கோபித்துக் கொள்ள வில்லே. நீங்க ஏன் அதை ஒருமாதிரி வேண்டா வெறுப்பாகப் பார்க்கிறீங்க? பை தி பை, அதைத் தாடின்னு குறிப்பிடாதீங்க. என்னவோ, பண்டாரம், பரதேசி, சாமியார் என்ற ரக ஆசாமிகளோடு இணைந்த பொருளாக ஒலிக்கிறது! இதற்குப் பெயர் இளைஞர் வட்டாரத்திலே 'கோட்டீ'. ஆடு இல்லே ஆடு? அந்த டைப்!

எனக்கு மற்றவர்களிடமிருந்து தனித்து நிற்க வேண்டும் என்று ஓர் ஆசை. எனக்கு ஒரு தனி 'இண்டிவிஜுவாலிடி' வேண்டும். அந்த நோக்கத்திலேதான் இந்தத் தாடி, நீள முடி எல்லாம் வைத்திருக்கிறேன்.

உடனே ஹிப்பி என்று முடிவு கட்டிவிடாதீர்கள்! பாகவதர் கிராப், 'கோட்டை' — வைத்திருப்பவர்கள் எல்லாம் ஹிப்பிகள் இல்லை! அவர்கள் எல்லாம், பொறுப்புக்களை ஏற்கப் பயந்து தன்னம்பிக்கை இல்லாமல் தான் தோன்றித்தனமாகச் சுற்றுபவர்கள். ஹிப்பிகளுக்கும் 'மாடர்ன் யூத்'களுக்கும் வித்தியாசம் தெரியாமல் ரொம்பப் பேர் குழப்பிக் கொண்டு அவஸ்தைப்படுகிறார்கள்.

நான் ரொம்பப் பொறுப்புள்ளவன். சட்ட சம்பந்தமான புத்தகங்கள் வெளியிடும் நிறுவனத்தில் பொறுப்பான உத்தியோகம் பார்க்கிறேன். என் தோற்றம் எனக்கு ஒருவித கௌரவம் அளிக்கிறது என்று நம்புகிறேன்.

ஆரம்ப நாட்களில் என் வீட்டிலுள்ள பெரியவர்கள் இந்தக் கோலம் பற்றி முணுமுணுத்தது உண்டு. அப்புறம் கம்மா இருந்து விட்டார்கள். "இந்தப் பாழும் தாடி எதற்கு?" என்று என் மனைவி இதுவரை ஒரு சந்தர்ப்பத்திலும் கேட்டது இல்லை. காதல் கல்யாணங்களில் எனக்கு நம்பிக்கை இல்லை. பெரியவர்கள் பார்த்து ஏற்பாடு செய்யும் திருமணங்கள்தான் நல்ல உறவுகளுக்கும் வருங்காலத்துக்கும் வழிகோலுகின்றன. எனக்குச் சிறு வயதிலேயே திருமணம் செய்து வைத்து விட்டார்கள்.

படிக்கும்போது ஓர் எழுத்தாளனாக வர ஆசைப்பட்டேன். சட்டம் பயின்றுவிட்டு நான் வழக்கறிஞராகத் தொழில் நடத்தவில்லை. ஆனால் சட்டம் சம்பந்தப்பட்ட சஞ்சிகை ஒன்றில் ஆசிரியர் பகுதியில் வேலை செய்கிறேன்.

## தெய்வப் பணியில் மன நிறைவு —

**திரு சந்தானம்**

உங்களுக்கு வியப்பாகக்கூட இருக்கலாம். பதினாறு தலைமுறைகளாக எங்கள் குடும்பம் அர்ச்சகர் பணி செய்து வருகிறது. நான் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருக்கும் போதே இந்தப் பணியில் பழக்கம் பெற்று விட்டேன். வேறு தொழிலைப் பற்றி நான் நினைத்ததுமில்லை. அதற்கு அவசியமும் இல்லை. ஒன்பதாம் வகுப்போடு பள்ளிப் படிப்பை நிறுத்திக் கொண்டு முழுநேர அர்ச்சகராக மாறிவிட்டேன். இந்தத் துறையில் எனக்குப் பதினைந்து வருட சர்வீஸ் ஆகிவிட்டது. மன நிம்மதியான தெய்வப் பணி.

இளைஞர்களும், யுவதிகளும், அவர்கள் கோரா, கிருதா வைத்திருந்தாலும் சரி, சல்வார் கம்மீஸ் போட்டிருந்தாலும் சரி, சமீப காலமாக அதிக எண்ணிக்கையிலேயே கோயிலுக்கு வருகிறார்கள். பக்தி உணர்ச்சி அவர்களிடம் வளர்ந்திருப்பதை நேரிடையாகப் பார்க்கிறேன். இப்போது ஒரு கல்லூரி மாணவர் தினசரி காலை ஒரு மணி நேரம் இங்கே வந்து ஒவ்வொரு சந்நிதியிலும் நின்று மனம் விட்டுப் பிரார்த்தனை செய்துவிட்டுப் போகிறார். முன்பெல்லாம் கல்லூரி இளைஞர்கள் கோயிலுக்கு வந்தால் ஏதோ ஃபாஷனாக, நாசுக்காக நின்றுவிட்டுப் போவதை நான் பார்த்திருக்கிறேன். இந்த வகையில் ஒரு மாற்றமே நிகழ்ந்திருக்கிறது.

அவர்கள் இப்போதெல்லாம் சனிக்கிழமை தவறாமல் நவக்கிரகப் பிரதட்சிணம் செய்கிறார்கள். எனக்குத் தெரிந்து சாமியாவது பூதமாவது என்று நாஸ்திக வாதம் பேசிய குடும்பத்தைச் சேர்ந்த இளைஞர்களும் அதில் ஒரு பங்கு.

மனத்தில் நினைத்தது நிறைவேற வேண்டும் என்ற ஆர்வத்தில் தரிசனத்துக்கு வந்தாலும் சரி, நினைத்தது நடக்கவில்லையே என்ற ஏக்கத்தில் நவக்கிரகத்தைச் சுற்றினாலும் சரி, கோயிலுக்குப் போக வேண்டும் என்ற எண்ணம் அவர்களுக்குத் தோன்றியிருப்பதே வரவேற்கப்பட வேண்டிய அம்சம்.





## நினைத்தது ஒன்று: நடந்தது ஒன்று!

**திருமதி சரஸ்வதி நாராயணன்**

"கல்லூரியில் நுழைந்த ஆண்டில், டாக்டராக விளங்க வேண்டும் என்ற நோக்கத்தில் பாடங்களை எடுத்துக் கொண்டேன். ஆனால் அந்த ஆண்டு முடிவதற்குள் என் மனத்தை மாற்றிக் கொண்டேன். பி. எஸ்ஸி. வகுப்பில் ரசாயன பாடத்தை எடுத்துச் சேர்ந்தேன். தொடர்ந்து எம். எஸ்ஸி. படித்து ஆராய்ச்சித் துறையில் சேர வேண்டும் என்று அப்போதைய பிளான். ஆனால் எம்.எஸ்ஸி. ஸீட்டுக்காக மனுப் போட்டபோது அந்த ஆண்டு எனக்குக் கிடைக்கவில்லை. சரி, பாதையை மீண்டும் மாற்ற வேண்டும்

என்று தீர்மானித்து உடனே ஆசிரியர்கள் பயிற்சி வகுப்பில் பி.டி.க்காகச் சேர்ந்துவிட்டேன். ஆசிரியை உத்தியோகம் பார்க்க வேண்டும் என்பதற்காக இல்லை. அந்தப் படிப்பையும் படிக்கலாம் என்ற ஆர்வத்தினால்தான்!

நான் ஒரு பி. டி. ஆகிவிட்டேன். ஆனால் உத்தியோகம் தேடவில்லை! கற்றுக் கொண்டதை வீணாக்கவுமில்லை. வீட்டிலிருந்து கொண்டே பல குழந்தைகளுக்கு டியூஷன் சொல்லிக் கொடுக்கிறேன்.

என் குழந்தைகளுக்கு நான் ஒரு வழிகாட்டியாகத்தான் இருக்க விரும்புகிறேன். அவர்கள் சுதந்திர மனப்பான்மையில் குறுக்கிடமாட்டேன். ஆரம்பத்திலேயே பல நல்ல பண்புகள் மனத்தில் பதிந்து விட்டால், அவர்களுடைய சுதந்திர எண்ணங்களும் அந்தப் பண்புகளுக்குள் அடங்கினதாகத் தானே இருக்கும்?

நான் டாக்டராக விளங்க வேண்டும் என்று ஆரம்பத்தில் கொண்டிருந்த ஆசை வேறு விதத்தில் நிறைவேறி விட்டது. என் கணவர் ஒரு டாக்டர்!



## சட்டம் தெரியும்; சமையல் தெரியாது!

குமாரி கே. குகம்குமாரி
பி. எஸ்ஸி.

பிரசண்டேஷன் கான்வெண்டிலும் பின்னர் கணித பாடத்தை எடுத்துக் கொண்டு ஸ்டெல்லா மேரி கல்லூரியிலும் படித்துப் பட்டம் பெற்ற குகம் குமாரிக்கு ஆசை, ஐ. ஏ. எஸ். பரீட்சையில் வெற்றி பெற வேண்டும் என்பதுதான். அதற்காகத் தயார் செய்து கொண்டு பரீட்சை எழுதினார். எழுத்துப் பகுதியில் வெற்றியும் கண்டார். ஆனால் இதுவரை துணை வந்த அதிருஷ்டம், அவர் 'இண்டர்வியூ'வுக்குப் போனபோது துணை வரவில்லை. ஆகவே, ஐ. ஏ. எஸ். பட்டம் இவர் பெயருடன் இணைந்து கொள்ளவில்லை.

வீட்டில் சும்மா இருக்க வேண்டாம் என்ற நோக்கத்துடன் சட்டக் கல்லூரியில் சேர்ந்தார். "நான் அரசியல்வாதி ஆகவேண்டும் என்ற ஆர்வத்தில் சட்டக் கல்லூரியில் சேரவில்லை. நம் அளவில் ஏதாவது நாட்டுக்குச் சேவை செய்ய வேண்டும் என்ற நோக்கம் தான். இரண்டு வருடப் படிப்பு முடிந்து விட்டது. இப்போது மூன்றாவது வருடம். ஆரம்பத்தில் சட்டத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளலாம் என்ற ஆசையில்தான் சேர்ந்தேன். இப்போது வழக்கறிஞர் தொழிலையும் நடத்திப் பார்க்கலாம் என்ற எண்ணம் தோன்றியிருக்கிறது" என்கிறார் குகம் குமாரி.

இன்றைய நவீன மோஸ்தர் நாகரிகத்தையும் உடை அலங்காரங்களையும் கண்டு ஒதுங்கும் மனப்பான்மை கொண்டவர். "நம சம்பிரதாயத்தில் நாகரிகத்துக்கு ஒன்றும் குறைவில்லையே? எதற்காக இந்த இறக்குமதி வேஷங்கள்?" என்று கேட்கிறார் அடக்கம் மிகுந்த இவர். சம்பிரதாயத்துக்குட்பட்ட எந்த நாகரிக அம்சங்களையும் ஏற்றுக் கொள்ளத் தயங்குவதில்லை.

புத்தகம் படிப்பது, பறவைகள் வளர்ப்பது இவருடைய பொழுதுபோக்கு. "சமையற் கலையைப் பற்றி எனக்கு அதிகம் தெரியாது. இனிமேல்தான் கற்றுக் கொள்ள வேண்டும்" என்கிறார்.

## ஒரு நடுநிலைவாதி:

கே. சிவகுமாரி
பி. ஏ.

ஆங்கில இலக்கியத்தைப் பிரத்தியேகப் பாடமாக எடுத்துக் கொண்டு பி. ஏ. பட்டம் வாங்கி, மாநிலக் கல்லூரியில் எம். ஏ. வகுப்பில் சேர்ந்தபோது ஓர் இடையூறு ஏற்பட்டது. வேறொன்றுமில்லை. நல்ல உத்தியோக வாய்ப்பு. கால்நடை மருத்துவக் கல்லூரியில் முதல் ஆண்டு மாணவர்களுக்கு ஆங்கில பாஷா ஞானத்தை அபிவிருத்தி செய்யும் 'டியூட்டர்' பதவி! மாநிலக் கல்லூரி வகுப்பறைகளுக்கு ஒரு 'டாட்டா' சொல்லிவிட்டுச் சிவகுமாரி இந்த உத்தியோகத்தை ஏற்றுக் கொண்டார். பள்ளி நாட்களிலிருந்தே அவர்



ஆசிரியை ஆக வேண்டும் என்றுதான் திட்டம் இட்டிருந்தார். அந்தத் திட்டத்துக்கு வெற்றி.

இவர் ஒரு நடுநிலைவாதி. அதாவது பழைமையிலிருந்து வழுவாமல் இருக்க உதவும் நாகரிக அம்சங்களை ஏற்றுக் கொள்ளத் தயார். பெண்கள் 'பெல்பாட்டம்' பாண்டுகள் அணிவது பற்றி இவர் அபிப்பிராயம், ''பள்ளிச் சிறுமிப் பருவம் வரையில் அந்த அலங்காரம் இனிமை; அதற்கு மேல் கோரம்.''

சிவகுமாரியின் சிநேகிதிகளில் பலர் நவீன நாகரிக வாதிகள். ஆனால் அவர்களின் வேகம் இவரைப் பாதிக்கவில்லை.

இவருடைய மாணவர்களில்கூட வெகு சிறுபான்மையோர்தான் நவீன மோஸ்தர் முத்திரையுடன், நீண்ட தலைமுடி, பகட்டான கட்டம் போட்ட சட்டைகள் முதலிய அலங்காரங்களுடன் காணப்படுகிறார்களாம். ''இதெல்லாம் ஓர் அலைபோல! எந்த வேகத்தில் வருகிறதோ, அந்த வேகத்தில் போய் விடும்! நம் பண்பாடுகளுடன் ஒன்றிணைந்து சிரஞ்சீவித்துவம் பெறும் தன்மை இவைகளுக்கு இல்லை'' என்று ஓங்கி அடிக்கிறார்.

தபால் தலைகள் சேகரிப்பது, புத்தகம் படிப்பது இவருடைய பொழுதுபோக்கு.



## இரண்டாயிரத்தில் ஒருவர்!

**கார்ப்போரல்**
**டி. ஆர். ஜெயசந்திரன்**

இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட என். ஸி. ஸி. கேடட்டுகள் குழுமியிருக்கும் வேளையில் ஒரு நபரைப் பார்த்து, ''தம்பி! நீதான் இவர்கள் அனைவரிலும் சிறந்த காடெட்'' என்று குறிப்பிட்டால் அந்த மாணவனுக்கு எப்படிப்பட்ட உணர்ச்சிப் பிரவாகமும் உற்சாகமும் ஏற்படும்? சர் எம். ஸிடி. எம். முத்தையா செட்டியார் உயர்நிலைப் பள்ளி மாணவனை ஜெயசந்திரனுக்குச் சுமார் பதினொரு ஆண்டுகளுக்குமுன் இந்த வாய்ப்புக் கிட்டியது.

ஜெயசந்திரனுக்கு நன்றாகச் சலவை செய்து கஞ்சி போட்டு மடித்த என். ஸி. ஸி. யூனிபாரங்களை அணிந்து கொள்வதில் ஒரு தீவிர ஆர்வம். பள்ளிப் படிப்பை முடித்ததும், விமானப் படைப் பிரிவில் சேர்ந்துவிட்டார். இன்று விமானப் புகைப்படப் பிரிவில் இவர் கார்ப்போரல். சீக்கிரமே இவர் சார்ஜெண்ட் ஆகலாம்.

கடந்த டிசம்பர் மூன்றாம் தேதி இரவு பாகிஸ்தானிய விமானங்கள் திடீரென்று பாரத விமான நிலையங்களில் குண்டு வீசிய நேரத்தில் இவர், ஆக்ரா விமான நிலையத்தில் பணியாற்றி வந்தார். இரவு ஏழரை மணி சுமாருக்கு இவர் விமான நிலையச் சாப்பாட்டு விடுதியில் உணவருந்திக் கொண்டிருந்தபோது பக்கத்து விமானப் பாதையில் பயங்கர ஒலியுடன் குண்டுகள் வெடித்தன. ஆயிரம் பவுண்டு குண்டு ஒன்று வீசப்பட்டால், பதினைந்தடி அகல நீளம், இருபது அடி ஆழத்துக்குப் பள்ளம் ஏற்பட்டுவிடும்! அன்று இரவோடு இரவாக விமானப் படையைச் சேர்ந்தவர்கள் பாதையைச் சரி செய்துவிட்டு உஷாராயினர். விமான எதிர்ப்புப் பீரங்கிகளும் தயார்ப்படுத்தப்பட்டன. அப்புறம் எதிரி விமானப் படைகள் இரண்டொரு நாள் அனுப்பினாலும் அவைகளால் விமான தளத்தை நெருங்க முடியவில்லை.

அறுபத்து இரண்டாம் ஆண்டு சீனப் போரின்போது இவர் தில்லி பாலம் விமான தளத்தில் பணியாற்றினார். அறுபத்து ஐந்தாம் ஆண்டு பாகிஸ்தான் போராட்டத்தின் போது கௌஹாத்தியில் இருந்தார்.

ஒரு சமயம் விடுமுறையில் பெற்றோர்களைப் பார்த்துப் போகச் சென்னைக்கு வந்திருந்தார். மறுநாட் காலையில் தீபாவளி. ஆனால் முதல் நாள் காலையில் உடனே புறப்பட்டு வந்து வேலையில் சேரும்படி உத்தரவு வந்துவிட்டது.



அன்றைக்கே புறப்பட்டு விட்டார். ரயிலில் தான் தீபாவளி கொண்டாடினார்.

''இன்றைய இளைஞர்கள் வண்ண வண்ண ஆடைகளின் மீது ஆசைப்படுகிறார்கள். தலையை எப்படியெல்லாமோ சிங்காரித்துக் கொள்கிறார்கள். என் போன்றவர்களால் தூர இருந்து அவற்றை ரசிக்க முடியுமே தவிர அவர்களைப் போல் செய்து பார்க்க முடியாது. நாங்கள் ஒருவித கட்டுப்பாடான வாழ்க்கைத் திட்டத்தைச் சேர்ந்தவர்கள்'' என்கிறார் ஜெயசந்திரன்.

தம் மகன் நாட்டுக்குச் சேவை செய்யும் பணியில் ஈடுபட்டிருப்பது பற்றி அவர் தந்தை ராமச்சந்திரனுக்கு ரொம்பப் பெருமை!

ஜெயசந்திரனுக்கு, ஹிந்தி, பஞ்சாபி, மலையாளம் எல்லாமே சரளமாக வருகிறது. ஆக்ரா நிலையத்திலுள்ள ஐம்பது தமிழர்களுக்கும் மேலானவர்கள், பொழுதுபோக்குக்காக 'முத்தமிழ் மன்றம்' ஒன்றை அமைத்துக் கொண்டு அவகாசம் கிடைத்தபோதெல்லாம் தமிழ் சஞ்சிகைகளையும் புத்தகங்களையும் படித்துத் தள்ளுகிறார்கள்.

# ஹென்னால்

## மீண்டும் கிடைக்கிறது

**வெகுகாலமாகவே அமோகமாக விற்பனையாகி வரும் கேசத்தை கருமையாக்கும் சாதனம். உங்கள் கேசத்தை இயற்கையான மற்றும் நிரந்தரமான கருமையுடனும் பளபளப்பாகவும் இருக்கச் செய்கிறது.**

உடல்நலக் குறைவினால் ஏற்படும் இளமை நரையைப்பற்றியோ, அல்லது வயோதிகத்தில் ஏற்படும் நரையைப்பற்றியோ கவலையடைய வேண்டாம். ஹென்னால் தற்போது உங்களுக்கு மீண்டும் கிடைக்கிறது. அது உங்களது கேசத்துக்கு இயற்கையான கருமை நிறத்தை அளிப்பதுடன், பூரண ஆரோக்கியத்துடன் இளமையான தோற்றத்தை அளிக்கிறது.

கேசத்தின் அடி வேர்களுக்கு போஷாக்கு அளித்து, செழிப்பாக வளரவும், காலக்கிரமத்தில் கேசம் இயற்கையான கருமையுடன் கூடியதாக இருக்க உதவுமாறும், அனேக பொருட்கள் சேர்த்து தயாரிக்கப்படுவது ஹென்னால்.

சாதாரணமாக கடைகளில் கிடைக்கும், கேசத்தை கருமையாக்கும் இதர சரக்குகளை போல அல்ல, ஹென்னால். இது தனித்தன்மை வாய்ந்தது.

1. நிரந்தரமாக நரையை தடுப்பதுடன், உங்களைப் பல வருடங்கள் இளமையான தோற்றத்துடன் விளங்கச் செய்கிறது.

2. இயற்கையான கருமையுடன் செழிப்பாக புது கேசம் வளர உதவுவதோடு, அதை வலுவடையவும் செய்கிறது.

**ஹென்னால் உபயோகிக்கும் முறை:**

ஹென்னாலில் உள்ள, கேசத்துக்கு போஷாக்கு அளிக்கும் சத்துக்கள் கேசத்தின் வேர்க்கால்களில் நன்கு ஊறி, கேசத்துக்கு இயற்கையான கருமை நிறத்தை அளிக்க வேண்டி, போதிய கால அவகாசம் அளிக்க வேண்டும். மூன்று மாத காலம் போதுமானது. இந்தக் கால கெடுவில் கேசம் இயற்கையான கருமை நிறத்தை அடைகிறது. ஹென்னால், கேசத்தை கருமையடையச் செய்வது மட்டுமல்ல, அது கேசத்திற்கு போஷாக்கும் அளிக்கிறது; கேசத்தை அழகுறச் செய்ய மிகவும் முக்கியமான சாதனம்.

ஹென்னாலை உபயோகிக்க ஆரம்பித்த ஒரு சில வாரங்களிலே ஒரு புதிய மாறுதலைக் காண்பீர்கள். இதற்கு முன்பு காணப்படாத ஒரு பளபளப்புடன் உங்களது கேசம் பிரகாசிக்கும். உங்களது நண்பர்கள் உங்களைக் கண்டு பிரமித்துப் போவார்கள். உங்கள் தன்னம்பிக்கையின் சக்தி வளர்ந்து பல மனிதர்களையும், விஷயங்களையும் நிர்வகிக்கும் திறமையைப் பெறுவீர்கள். எவ்வளவு வயது அடைந்தவராக இருப்பினும், ஹென்னால் கைவசமிருந்தால் கவலை வேண்டாம். உங்களது தொழிலில் மற்றும் சமூகத்தில் வெற்றி வாய்ப்பு நிச்சயம்.

உங்களது கேசம் தொடர்ந்து கருமையாக இருக்க ஹென்னாலை வழக்கமாக உபயோகியுங்கள். நீங்கள் தேர்ந்து எடுக்க மூன்று ரக ஹென்னால் உள்ளன. ஹென்னால் (எண்ணெய்) ஹென்னால் (பசையற்றது) ஹென்னால் பொமேட் இந்த மூன்று ரகங்களும், யாவருக்கும் ஏற்றவாறு, வாசனை சேர்க்கப்பட்டுள்ளது. ஹென்னால் (எண்ணெய்) வறட்சியான, மற்றும் குத்திட்ட கேசத்திற்கு விசேஷமாக ஏற்றது. நீண்டகால நரைக்கு நல்ல பலனளிக்கக் கூடியது ஹென்னால் பொமேட்.

நல்ல பயனை அடைய தலையை சுத்தமாகக் கழுவ வேண்டும். வாரம் இருமுறை பியர்லேன் பாரிஸின் விசேஷ தயாரிப்பான சில்கோ ஹேர் ஷாம்பு போட்டுத் தலையை சுத்தம் செய்யுங்கள்.

இன்றே ஹென்னால் வாங்குங்கள். வருங்காலத்தில் இளமையுடன் விளங்குவீர்கள்.

**தயவுசெய்து கடிதப் போக்குவரத்தை ஆங்கிலத்தில் வைத்துக் கொள்ளவும்**

**ஹென்னால் தயாரித்து வெளியிடுபவர்கள்:**

**பியர்லேன் - பாரிஸ் பிரைவேட் லிமிடெட், தபால் பெட்டி எண் 493, பம்பாய்-1**

# தேசம் வேறு; நேசம் ஒன்று!

பல்வேறு நாடுகளில் உள்ள இளைஞர்களைக் கடலும் கானும் மலையும் மடுவும் பிரித்து வைக்கின்றன. ஆயினும் அவர்கள் அனைவரும் ஒரே குலம் — இளைஞர் குலம். இந்த ஜெட் யுகத்தில் பல்வேறு நாடுகளைச் சேர்ந்த இளைஞர் சமுதாயங்களிடையே நாளுக்கு நாள் நட்பும் நேசப்பான்மையும் மிகுந்து வருவதில் வியப்பில்லை. அறிவுக்கு மதிப்பும் திறமைக்கு வரவேற்பும் இருக்கும்வரை இந்த இணக்கம் மேன்மேலும் அதிகரிக்கவே செய்யும்.

அயல் நாட்டு இளைஞர்கள் பலரை அடுத்து வரும் பக்கங்களில் புகைப்படங்கள் மூலம் அறிமுகப்படுத்துகிறோம். சுதந்திர வாழ்க்கையை மேற்கொண்ட மேனாடுகள் பலவற்றுள் மேற்கு ஜெர்மானிய இளைஞர்களைப் பற்றி மட்டும் இங்கே விவரித்தால் போதும். சுதந்திர வாழ்முறையை மேற்கொண்டுள்ள மேல் நாடுகள் பலவற்றிலும் நிலைமை ஏறத்தாழ இதுவேதான்.

ஜெர்மனியில் சென்ற தலைமுறையினருக்கும் இன்றைய இளைஞர்களுக்கும் இடையில் முக்கியமான ஒரு வித்தியாசம் உண்டு. இரண்டாம் உலகப் போரை ஆரம்பித்து வைத்தவர்கள் என்ற அளவில் ஜெர்மனியில் கடந்த தலைமுறையினரின் மனம் ஒருவித குற்ற மனப்பான்மையுடன் குறுகுறுத்துக் கொண்டிருந்தது. இந்தத் தலைமுறையினரிடம் அந்தத் தாழ்வு மனப்பான்மை இல்லை.

தங்களுடைய திறமைக்கும் அறிவாற்றலுக்கும் சவால் விடுகிற மாதிரியான காரியம் என்ன இருக்கிறது என்று கேட்கிறார்கள் ஜெர்மானிய இளைஞர்கள்.

சுதந்திர உணர்வு இவர்களிடம் எந்த அளவுக்கு வளர்ந்திருக்கிறது என்பதை ஜெர்மானியப் பெண் ஒருத்தி கூறும் பின்வரும் வாசகத்திலிருந்து நன்றாக அறியலாம்.

''நான் எக்ஸைக் காதலிக்கிறேன் என்பதால் ஒய்யுடன் பழகக் கூடாது என்று எதிர்பார்ப்பது சரியல்ல. ஒய்யுடன் பழகும்போது எக்ஸை விட இவன் சிறந்தவன் எனக் கண்டு கடைசியில் எக்ஸைப் புறக்கணிக்க நேர்கிறது என்றே வையுங்கள். அதனால் என்ன தவறு? எக்ஸைக் கல்யாணம் செய்து கொண்ட பிறகு அவன் எனக்கு ஏற்றவனில்லை என்று புரிந்து கொள்வதைவிட முன்கூட்டியே தெரிந்து கொள்வது நல்லதல்லவா?''

காதல் விஷயத்தில் மட்டுமல்ல இந்தச் சுதந்திர உணர்வு. வேறு பல துறைகளிலும் தங்கு தடையின்றிச் செயல்படுகிறது.

ஓர் இளைஞன் சொல்கிறான்: ''அரசியல் வெறும் குப்பைக் கூளம்தான். மந்திரிகளின் பிரயாணங்களால் எந்தவிதமான பயனும் இல்லை. அவர்கள் சதா பேசுகிறார்கள், சாப்பிடுகிறார்கள். அவ்வளவுதான். எந்த விஷயத்திலும் ஓர் உடன்பாட்டுக்கு வருவதில்லை. டெலிவிஷன் மட்டும் அவர்களைப் பிரமாதப் படுத்துகிறது.''

உழைப்புக்குப் பெயர் பெற்றவர்கள் ஜெர்மானியர்கள். ஆனால் வாழ்க்கையே உழைப்புக்காகத்தான் என்ற கருத்து மாறி வருகிறது. உழைப்பும் ஓய்வு நேரம் போல் வாழ்வின் ஓர் அம்சம் என்ற கருத்து வளர்ந்து வருகிறது.

பதினாறு வயதிலேயே ஜெர்மானிய இளைஞர்கள் வேலைக்குப் போவார்கள். இன்று இந்த நிலைமை சற்று மாறியுள்ளது. பள்ளிப் படிப்பை ஓராண்டு அதிகரித்திருக்கிறார்கள். இந்த ஓராண்டு எந்த வேலை தமக்கு உகந்த வேலை என்று தேர்ந்தெடுப்பதில் கழிகிறது.

பள்ளிகளிலிருந்து வெளியே வந்ததும் உடலால் உழைத்து வேலை செய்ய இளைஞர்கள் தயாராய் இருக்கிறார்கள். வீடு, அணை போன்ற கட்டுமான வேலைகள், மோட்டார், டிராக்டர் போன்ற உற்பத்தித் தொழிற்சாலைகள், பழுது பார்க்கும் இடங்கள் — இங்கெல்லாம் வேலை செய்யச் செல்கிறார்கள். இதற்கென்று வேலையை அனுசரித்துப் பயிற்சி அளிக்கும் நிலையங்கள் ஜெர்மனியில் ஏராளமாய் உண்டு. இதே போல் பெண்கள் நர்ஸ்களாகவோ, உபாத்தியாயினிகளாகவோ, உதவியாளர்களாகவோ பணியாற்றத் தயாராய் உள்ளார்கள்.

ஜெர்மனியில் இன்று இளைஞர்களுக்கு உள்ள பெரிய பிரச்னை: ஓய்வு நேரம். மாலைப் பொழுதில் ஒவ்வொரு நாளும் ஆறு மணி நேரம், வாரக் கடைசியில் இரண்டு நாட்கள், இவை தவிர விடுமுறை தினங்கள். சென்ற நூற்றாண்டில் வாரம் 85 மணி நேரம் வேலை செய்தார்கள். இன்று 40 மணி நேரம் தான் உழைக்கிறார்கள். ஓய்வு நேரத்தைத் திறமைகளையும் அறிவாற்றல்களையும் கலை உணர்ச்சிகளையும் வளர்த்துக் கொள்ளப் பயன்படுத்துகிறார்கள். இதைச் செய்யத் தவறும் சிலர் கெட்டலையவும் செய்கிறார்கள். எல். எஸ். டி., கஞ்சா, ஆண் — பெண் உறவுகளில் துர்நடத்தை ஆகியவை இதன் விளைவுதான்.

ஜெர்மானிய அரசு நாட்டின் எதிர்காலம் இன்றைய இளைஞர் சமுதாயத்திடம்தான் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது என்பதை நன்றாக உணர்ந்திருக்கிறது. ஆகவே அது 1950 முதல் 1968 வரை பதினெட்டு ஆண்டுகளில் ஓராயிரம் மில்லியன் மார்க்குகளுக்கு மேல் இளைஞர் சமுதாயத்துக்கென்று (கல்வி, தொழில் பயிற்சி நீங்கலாக) செலவழித்திருக்கிறது. இந்தப் பெருந் தொகை விளையாட்டுக் குழுக்கள், இளைஞர் சங்கங்கள், சர்வதேச இளைஞர் கூட்டங்கள், சுற்றுப் பயணம் போன்றவை வளரத் தரப்பட்டுள்ளது.

இளைஞர் சங்கங்களுக்கு அரசு பண உதவி செய்யுமேதவிர அச்சங்கங்களின் மீது எள்ளளவும் ஆதிக்கம் செலுத்தாது. செலுத்த இளைஞர்கள் விடவும் மாட்டார்கள்!





## பிரிட்டன்







1. டாக்டர் பட்டம் பெற்றுள்ள ஓர் இளம் விஞ்ஞானி சந்திரனிலிருந்து வந்த கல்லை ஆராய்கிறார்.

2. பிரிட்டனின் பெரிய ஏற்றுமதி ஆங்கில மொழிதான். ஆப்பிரிக்காவில் 'லிங்குவாஃபோன்' என்ற சாதனத்தின் துணையுடன் ஆங்கிலம் போதிக்கப்படுகிறது.

3. கூடைப்பந்தாட்டம்.

4. ஸ்கௌட் இயக்கத்தை ஆரம்பித்தவரே பாடென் பௌவல் என்ற ஆங்கிலேயர்தான். படத்தில் புயல், பனி, மழை, குளிர் எதையும் பொருட்படுத்தாமல் கடமையே கண்ணாகச் செயலாற்றும் ஸ்கௌட்களைக் காண்கிறோம்.

5. ஸ்காட்லாந்தில் சுத்தியைச் சுழற்றி வீசுவதென்பது ஒரு விளையாட்டு.









அமெரிக்கா

1., 2. எந்நாட்டவராயினும் சரி, அறிவூட்டவும் அறிவாற்றலைப் பயன்படுத்திக் கொள்ளவும் அமெரிக்கா என்றுமே தயங்கியதில்லை. இயற்கை வளம் தவிர இந்த ஞான வளம் அமெரிக்காவின் வளர்ச்சிக்கு ஒரு முக்கிய காரணம். இப்படங்களில் அமெரிக்க மாணவருடன் அயல் நாட்டு மாணவர்கள் அளவளாவுவதைப் பார்க்கலாம்.

3. விளையாட்டுக்களுக்கும் நிரம்ப முக்கியத்துவம் உண்டு. நீச்சல் போட்டியில் முதல் பரிசைத் தட்டிக்கொள்ள முனைந்திருக்கும் ஓர் இளநங்கை.

4 அமெரிக்க இளைஞர்கள் திரைப் படங்கள் எடுக்க ஊக்குவிக்கப்படுகிறார்கள். ஹாலிவுட் பாணியில் அல்லாமல் இவை யதார்த்த ரீதியில் அமைகின்றன. நீக்ரோ சேரி வாழ்க்கையை இருவர் திரைப்படமாக்குகின்றனர்.

5. டெலிவிஷனில் மாணவர் மாணவியருக்கான குவிஸ்' நிகழ்ச்சி ரொம்பப் பிரபலம்.

6. கல்வி பெற்றபடியே உழைத்துச் சம்பாதிப்பது அமெரிக்க இளைஞர் உலகில் சர்வ சாதாரணம்.










1. மோட்டார் கார்கள் மிகுதியாகி, சாலை களில் நிறுத்தி வைக்கவே இடமில்லாத காரணத்தால் மோட்டார் சைக்கிள்களைப் பயன்படுத்துங்கள் என்று பிரசாரம் செய்யப் படுகிறது ஜெர்மனியில்!

2. தொழிற் பயிற்சி நிலையங்கள் பள்ளிப் படிப்பு முடித்த இளைஞர்களை வரவேற்கின் றன. மோட்டார் சைக்கிள் எஞ்சினை ஆராய்கிறார்கள் மாணவர்கள்.

3. ஒலிம்பிக் பந்தயங்கள் இவ்வாண்டு மேற்கு ஜெர்மனி மியூனிக் நகரில் நடக்க விருக்கின்றன. ஹர்டில் ரேஸில் ஒரு ஜெர்மானிய ஒலிம்பிக் வீராங்கனை.

4. ஓய்வு நேரத்தை உல்லாசமாகக் கழிக் கும் யுவதி.

5. உயர் கல்வியில் ஈடுபட்டு ஆராய்ச்சி யில் இறங்கியுள்ள மாணவி.



## மேற்கு ஜெர்மனி













## ருஷ்யா

1. தொழிற்பயிற்சி அளிக்கும் பள்ளிகள் ருஷ்யாவில் மிகுதி. அளவில் சிறியதான ஆனால் நன்றாக இயங்குகிற மோட்டார் லாரியை மாணவர்கள் தயாரித்துள்ளனர். போதகர் மகிழ்கிறார்.
2. கல்லூரியில் விரிவுரையைக் கேட்கும் மாணவர்கள்.
3. கூடைப்பந்தாட்டம்.
4. பாலே நடனத்தில் ருஷ்யர்களின் தேர்ச்சி உலகப் பிரசித்தம். பள்ளியில் ஆரம்பப் பயிற்சி நடக்கிறது.
5. பல்கலைக் கழகங்களில் பிற மொழிகளைக் கற்பதில் ஈடுபாடு காட்டுகின்றனர். இங்கே ஜப்பானிய மொழி பயிலுகின்றனர்.
6. ருஷ்ய ஸர்க்கஸ்.





# கம்பனுக்குக் கவினுறு மண்டபம்



''யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவன்போல் இளங்கோவைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை''

என்று முரசறைந்த கவியரசர் பாரதிக்கு அமரர் கல்கி, எட்டயபுரத்தில் மண்டபம் எழுப்பினர். பாரதி போற்றிய, கவிச் சக்கரவர்த்தி கம்பனுக்கு மணி மண்டபம் எழுப்பும் திருப்பணியைச் சா. கணேசன் மேற்கொண்டிருக்கிறர். முப்பத்து மூன்று ஆண்டுகளாகக் கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்த்து வரும் காரைக்குடியிலே, இம்மணி மண்டபம் மாபெரும் கலைக் கோவிலாக உருவாகி வருகிறது. சுமார் 12 லட்சம் ரூபாய் மதிப்பீட்டில் கடந்த மூன்று ஆண்டுகளாக நடைபெற்றுவந்த இப்பெரும் பணியின் ஒரு பகுதியான, அரங்க நிர்மாணம் நாலரை லட்சரூபாய் செலவில் அமைந்துள்ளது. ''அடுத்த ஆண்டு எப்படியும் புதிய மண்டபத்தில் கம்பன் விழாவை நடத்தியே தீருவேன்'' என்று திரு சா. கணேசன் சென்ற ஆண்டிலேயே அறிவித்தார். சா. கணேசன், ஒன்றைத் தீர்மானித்து விட்டால் அதை யாராலாகிலும் மாற்றமுடியுமா என்ன?

தமிழ்த் தாயின் அற்புத ஆலயமாக இலங்கப்போகும் கம்பன் மணி மண்டபத்தின் மனை மங்கல விழா, 26–3–1972 அன்று மரபு நெறிப்படி கோலாகலமாக அமைந்தது. கவிச் சக்கரவர்த்தியின் மண்டபத்தைத் திறந்து வைக்கப் புவிச் சக்கரவர்த்திகளாகப் பொலிந்தவர்களையே அழைத்திருந்தார்கள். 'சரியாக நான்கு மணிக்கு மங்கல வாத்தியங்கள் முழங்கின. செட்டிநாட்டரசர் முத்தையா செட்டியார் விழாத் தலைவராக முன்வர, இராமநாதபுரம் சேதுபதி மன்னரும், சிவகங்கை சமஸ்தான மன்னரும் உடன்வர, மக்கள் வெள்ளம் திரண்டது. மண்டபத்தின் நுழைவாயிலாகிய 'சடையன் பெருவாயி'லில் இருந்து 'சேர, சோழ, பாண்டியத் திருவாயில்'கள் வழியாகத் தலைவர்கள் அழைத்து வரப்பட்டனர். கம்பன் புகழ் பாடிய அமரர்களான டி. கே. சி. வெள்ளகால் முதலியார், பால் நாடார், சேதுப்பிள்ளை முதலிய தமிழறிஞர்களின் பெயரால் அமைந்த பதினெட்டு வாயில்கள் வழியாகவும் மக்கள் திரண்டு எழுந்தனர்.

வந்தாரையெல்லாம் 'வாயார வாழ்த்தி, தலையாலே வணங்கி, மனமார வரவேற்ற' சா. கணேசன், மணி மண்டப எடுப்பு வரலாற்றை நன்றிப் பெருக்கோடு விவரித்தார். 1939ல் காரைக்குடி நகரச் சிவன் கோவில் வடக்கு வீதியில், கீற்றுக் கொட்டகையிட்டுத் தொடங்கப்பெற்ற கம்பன் விழா சிறப்பின் சிகரமாக இவ்வாண்டு, மணி மண்டபத்தில் நிகழ்கிறது என்றும், ''என்னப்பன் கம்பன் மணி மண்டபத்தைத் தலமாகக் கொண்டு இனி விழாக் கோலம் புனைவான்'' என்றும் உணர்ச்சி விம்ம முழங்கினர். கம்பனுக்கு என விழா எடுக்குமாறு தூண்டித் துணை நின்ற ரசிகமணி டி. கே. சி. அவர்களையும் பிறரையும் நெஞ்சாரப் போற்றினர். கம்பன் கழகத்தில், ''பணியாளன்'' என்னும் 'செயலாள'ராகத் தொண்டாற்றி வந்த தமக்கு மூன்றாண்டுகளுக்கு முன் மணி விழா நடத்தக் கருதிய அன்பர்கள் வழங்கிய ஒரு லட்சம் ரூபாயை

● இராமநாதபுரம் சேதுபதி மன்னர் திரு சா. கணேசனுக்குப் பொன்னாடை போர்த்துகிறர்.

● கம்பனின் திருஉருவப் படத்தைத் திறந்துவைத்துச் சிவகங்கை மன்னர் பேசுகிறர். அமர்ந்திருப்போர் வரிசையில் தெ. போ. மீ., க. கு. கோதண்டராமன், ஸ்ரீமதி உமையாள் இராமநாதன், (வள்ளல் அழகப்ப செட்டியார் மகள்) தலைவர்: செட்டிநாட்டரசர், இராமநாதபுர மன்னர், வாரியார், சி.வி.சிடி.வி. வேங்கடாசலம் செட்டியார் ஆகியோரைக் காணலாம். திரு சா. கணேசன் பின்னல் கைகட்டியபடி நிற்கிறர்.







● திருமுருக கிருபானந்த வாரியார் திருவிளக்கேற்றி மணிமங்கலம் செய்கிறார்.

● கான மழை பொழிந்த சங்கீத கலாநிதி எம். எஸ். எஸ். அவர்களின் இசையரங்கு.



முன் பணமாகக் கொண்டு கம்பனுக்கு மண்டபம் சமைக்கும் எண்ணம் அரும்பிற்று என்று விவரித்தார். 'கம்பன் அறநிலை' என்னும் பெயரில் 'டிரஸ்ட்' ஒன்று அமைக்கப்பட்டுள்ளதென்றும், திரு சி. வி. சிடி. வேங்கடாசலம் செட்டியார் அதன் துணைவராக, மண்டப நிர்மாணம் விரைவாக நிறைவேறிற்று என்றும் விளக்கினார்.

மணி மண்டபத்துக்குரிய தமிழ்த் தாய் ஓவியத்தைத் திறந்து வைத்தார் இராமநாதபுர மன்னர், இராமநாத சேதுபதி அவர்கள். கம்பன் சமாதியுள்ள சிவகங்கைப் பகுதியின் மன்னர் திரு கார்த்திகேய வேங்கடாசலபதி, கம்பனின் திரு உருவப் படத்தைத் திறந்து வைக்கப் பொருத்தமாக அமைந்தார்.

அருட்பெருஞ் ஜோதியைப் பரப்பும் திருப்பெருஞ் செல்வராகிய திருமுருக கிருபானந்த வாரியார், மரபுப்படி குத்துவிளக்கேற்றி மண்டபத்தைத் திறந்து வைத்து ஒளி பெருகச் செய்தார்.

வாழ்த்துரை வழங்கிய பேரறிஞர் தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், இம்மண்டபம் ஒரு பல்கலைக் கழகமாக, ஆராய்ச்சிப் பண்ணையாக மாற வேண்டும் என்றார். ''கம்பன் மட்டும் ஆங்கில நாட்டில் பிறந்து இப்படி ஓர் அமர காவியத்தைச் சமைத்திருந்தால் அவனுடைய புகழ் அவனி யெல்லாம் எதிரொலித்திருக்கும். ராஜாஜி அவர்கள் ஆங்கிலத்தில் கம்பனை அறிமுகப்படுத்திய அரும் பணியினை மேலும் தொடர இந்த ஆராய்ச்சி நிலையம் ஆவன செய்யலாம். அப்போது கம்பன் புகழ் உலகெலாம் பரவும்'' என்றார். திரு க. கு. கோதண்டராமனும், திரு வேங்கடாசலம் செட்டியாரும் பாராட்டுரை வழங்கினர். தலைமையுரை ஆற்றிய செட்டிநாட்டரசர் திரு முத்தையா செட்டியார், காரைக்குடியில் கம்பன் பெயரால் பல்கலைக் கழகம் ஒன்றை நிறுவும் நாள் நெருங்கிவிட்டதென்றும், இத்தகைய நற்பணிகள் நாடெங்கும் பரவினால், தீய சக்திகள் மடியும் என்றும் கூறி, கம்பன் டிரஸ்டுக்கு நன்கொடையாக ரூ. 15,000 வழங்கினார். கம்பனுக்கே தொண்டு செய்யத் தம்மை ஆட்படுத்திக் கொண்ட சா. கணேசனைப் பிடித்திழுத்துக் கழுத்தில் மாலை சூட்டி மகிழ்ந்தார்.

இராமநாதபுரம் மன்னர், சட்டை போடாத கணேசனுக்குப் பூம்பட்டாலான பொன்னாடை போர்த்திக் கௌரவித்தார்.

நன்றி நவின்ற சா. கணேசன், கம்பன் மணி மண்டபச் சிறப்பியல்புகளை விண்டுரைத்தார். கம்பன் விழா ஆண்டுதோறும் நடைபெறும் நாட்களில் சூரிய ஒளி தமிழ்த் தாயின் மீது பட்டுப் பரவும் வகையில் நுட்பம் அமையமைய மண்டபம் எழும்பும் என்றார். 140 அடி நீளமும் 100 அடி அகலமும் கொண்ட மண்டபத்தில் நடுவே தூண்களே இல்லாது அமைந்துள்ள கட்டிடக் கோப்பைச் சுட்டிக் காட்டினார்.

பின்னர், மன்னவர் இருந்த மணி மண்டபத்தில் ''சீதை திருமணத்தை'' இசை உரையாக நடத்தினார் திரு முருக வாரியார். நகைச்சுவையும் இலக்கியச் சுவையும் எதிரொலிக்க அருள்மழை பொழிந்தார்.

மண்டபத் திறப்பு விழாவின் மணி முடியாக அமைந்தது சங்கீத கலாநிதி எம். எஸ். சுப்புலட்சுமி அவர்களின் இசையரங்கு. மூன்றரை மணி நேரம் கான மழை பொழிந்தார். 'கொஞ்சிக் கொஞ்சி வா குகனே, முருகனே' என்ற பாட்டின் எடுப்பும் 'ஆர்த்த பிறவித் துயர் கெட' என்னும் திருவெம்பாவைப் பாட்டின் சங்கராபரணத் தொடுப்பும், ஆழ்வார் பாசுர முதலாயிரப் பாட்டின் முத்தாய்ப்பும், 'வடவரையை மத்தாக்கி' என்ற சிலப்பதிகார இசைக் கோப்பும், 'தோள் கண்டார் தோளே கண்டார்' என்ற கம்பன் பாடலும் தமிழாரங்களாக அமைந்தன.

'கம்பன் என்றொரு மானிடன்' வாழ்ந்ததைத் தமிழ் மக்கள் நினைத்து நினைத்தும் பூரிப்படைய வழி வகுத்த திரு சா. கணேசனின் தொண்டு வாழ்க! – இப்படிச் சொன்னால் அவர் இசைவாரா? அவரோடு சேர்ந்து நாமும் சொல்வோம்: '' கம்பன் வாழ்க! கம்பன் புகழ் வாழ்க! கன்னித்தமிழ் வாழ்க!''

—க. குழந்தைநாதன்

நம்பினால் நம்புங்கள் நம்பாவிட்டால் போங்கள். இது ஒரு நகைச்சுவைக் கதையேதான்! உண்மைக்கதை அல்ல!

□

பத்திரிகை பெரிய தலைப்பில் இப்படிச் செய்தி வெளியிட்டது:

"நகரசபைத் தலைவருக்குக் கல்தா!"

"கழுத்தைப் பிடித்துத் தள்ளப்பட்ட தலைவர்!"

இத்துடன் விடாமல், "கழுத்தைப் பிடித்துத் தள்ளப்பட்ட நகரசபைத் தலைவர் இவர்தான்" என அவருடைய புகைப்படத்தையும் வெளியிட்டது.

ஊர் ஒரே பரபரப்புடன் காணப்பட்டது. நகரசபைத் தலைவரின், வீட்டில் ஓர் அவசரக் கூட்டம் கூட்டப்பட்டது.

"என்னங்க இது. நம்ம தலைவர் நீங்க. உங்க படத்தையும் போட்டுக் கழுத்தைப் பிடித்துத் தள்ளப்பட்ட' தலைவர் என்றும் போட்டிருக்காங்களே!"

## நகைச்சுவைக் கதை




"இது அபாண்டம்."

"எது அபாண்டம்?"

"நம்ம தலைவருக்குத்தான் முதுகெலும்பு இல்லேங்கறது பங்களா தேஷ் உதயம் மாதிரி தெரிஞ்ச விஷயம். அவருக்கு ஏது கழுத்து? நசுங்கிய சயச் செம்பு மாதிரி தலை வந்து மார்புக் கூட்டிலே பொருந்தி யிருக்கு. அப்படி இருக்கும்போது எப்படிக் கழுத்தைப் பிடித்துத் தள்ளியதாய்ப் போட முடியும்?"

"மான நஷ்ட வழக்குப் போடணும் பத்திரிகைக்காரன் மீது."

"ஏன்? படத்தைப் பிரசுரம் செய்ததற்காகவா?"

"இல்லே. 'கழுத்தைப் பிடித்து' என்று கழுத்தே இல்லாதபோது எப்படி அவன் எழுதினான்? இல்லாததை எழுதினால் மான நஷ்டம் தானே?"

"முன்பு ஒரு தடவை நம்ம தலைவர் இதே மாதிரி கழுத்தைப் பிடித்துத் தள்ளப்பட்ட போது மட்டும் இதே பத்திரிகைக்காரர் இருட்டடிப்புச் செய்தாரே!"

''அப்போது அந்தப் பத்திரிகை நம்ம கட்சி அநுதாபி.''

''சும்மா விடக் கூடாதுங்க இந்தப் பத்திரிகை ஆசிரியரை.''

''தலைவர் ஏதும் வாய் திறக்கக் காணோமே!''

கடைசியில் தலைவரும் அவருடைய அந்தரங்கக் காரியதரிசியும் அந்தப் பத்திரிகை ஆசிரியரைப் பார்த்துக் கண்டித்து விட்டு வர வேண்டியது என முடிவாகியது.

மறுநாள் காலையில் தலைவர் சென்னை வந்து சேருவார் எனத் தலைவரின் கட்சியைச் சேர்ந்தவர்கள் சென்னைத் தோழருக்குச் செய்தி அனுப்பினார்கள். மாலைகளுடன் எழும்பூர் வரும்படி அன்பு(!)க் கட்டளை இடப்பட்டது.

அன்று இரவு தலைவரும் காரியதரிசியும் சென்னைக்குப் புறப்பட்டார்கள்.

ரயிலுக்குப் புறப்படு முன்பு ஒரு சிறிய வழியனுப்பு விழா கொண்டாடப்பட்டது.

''மானங் காத்த தலைவர் வாழ்க!''

''மானங்கெட்டவர்களை மடக்கப் புறப்பட்ட மாமன்னரே, சென்று வாரும்! வென்று வாரும்!''

கழுத்தே இல்லாத தலைவர் கழுத்தில் மாலைகள் போடப்பட்டன.

''தங்கள் பயணம் வெற்றியடையட்டும்!''

''வாழ்க தலைவர்!''

வண்டி புறப்பட்டது.

வழியனுப்ப வந்த கூட்டம் திரும்பியது. ரயிலில் டிக்கட் இல்லாது வந்திறங்கிய ஒரு சிலரும் அந்தக் கூட்டத்துடன் கலந்து தப்பினர்.

நகரசபை மண்டபம். உள்ளே முக்கிய கூட்டம். வெளியே ஒரே பரபரப்பு.

ஆயுதம் தாங்கிய போலீசார் எந்த நிலையையும் சமாளிக்கத் தயாராய் நிறுத்தப்பட்டிருந்தார்கள்.

பத்திரிகை நிருபர்கள் கூட்டத்துக்கு அனுமதிக்கப்படவில்லை. பல கட்சிகளின் அனுதாபிகள் கூடி ஆரவாரம் செய்து கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு கட்சியினரும் மாலைகளைக் கையில் கொண்டு வந்திருந்தார்கள்.

முடிவு தங்கள் கட்சிக்கு எப்படியும் சாதகமாய் இருக்கும் என்று நிச்சயித்துக் கொண்டு வாண வேடிக்கைக்கு (மத்தியானம் பன்னிரண்டு மணிக்கு) ஏற்பாடு செய்திருந்தது ஒரு கட்சி.

அந்த நகரசபையின் அத்தியாயத்தில் மிக முக்கிய கூட்டம் அது.

ஆம். கிட்டத்தட்ட பதினைந்து ஆண்டுகளாய் அந்த நகரசபைத் தலைவராய் இருந்து வந்த திருவாளர் திருவாழத்தானை எப்படியும் தூக்கி எறிந்து விடுவது என்று கங்கணம் கட்டிக்கொண்டு பல கௌன்சிலர்கள் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்தார்கள். தலைவரின் கட்சியைச் சேர்ந்த சில கௌன்சிலர்களைக் கூட எதிர்க் கட்சிக்காரர்கள் வலை போட்டுப் பிடிப்பதில் முனைந்திருந்தார்கள்.

சில கௌன்சிலர்கள் தங்கள் நண்பர்கள் கல்யாணத்துக்காக ஊரை விட்டு இரண்டு மூன்று நாட்கள் போயிருந்ததைச் சில பத்திரிகைகள் திரித்து, ''கௌன்சிலர் கடத்தப்பட்டார்'', ''தலைவருக்கு ஜன்னி நடுக்கம்'', ''இதுதான்



# ஒரு திருத்தம்!

ஸ்ரீவத்ஸன்

வண்டியில்:

''தலையைக் கொஞ்சம் சாய்க்கிறியா, தம்பி?'' — காரியதரிசி கேட்டார்.

தனிமையில் இருக்கும்போது ஏக வசனத்தில் பேசும் காரியதரிசி பலர் முன்னிலையில் ''நீங்க'' என்பார்.

இவர்கள் சென்னைப் பிரயாணத்துக்குக் காரணமாய் இருந்தவை, முதல் நாளைக்கு முதல் நாள் நடந்த நிகழ்ச்சிகள்தாம்.

ஜனநாயகமா?'' ''நீதி விசாரணை தேவை'' எனப் பெட்டிச் செய்திகள் வெளியிட்டன.

கல்யாணத்துக்குப் போனவர்கள் அவர்களாகவே திரும்பி வந்ததும் அதே பத்திரிகைகள் ''தலைவர் முகத்தில் கரி'', ''கடத்தப்பட்ட கவுன்சிலர் மீட்கப்பட்டார்'' என்று மறுபடியும் செய்திகள் வெளியிட்டன.

சில விஷமிகள், மாவட்டத் தலைவர், நீதிபதி, மந்திரிகள், மத்திய மந்திரிகள், பிரதமர்,

ஆளுநர், குடியரசுத் தலைவர் இவர்களுக்குத் தந்திகள் அடித்துத் தபால் தந்தி இலாகா வைப் பிழைக்க வைத்தார்கள்.

இப்படிப்பட்ட நிலையில்தான் — பதற்றச் சூழ்நிலையில்தான் - நம்பிக்கை யில்லாத் தீர் மானம் விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளப் பட்டது.

காலை எட்டு மணிக்கு ஆரம்பித்த விவாதம் பன்னிரண்டு மணியைக் கடந்து மத்தியானம் மூன்று மணிக்கு முடிந்தது.

ஒரே வோட்டில் தலைவர் பிழைத்தார். நம் பிக்கையில்லாப் பிரேரணை தோற்றது.

தலைவர் கோஷ்டியினர் வானைப் பிளப்பது போல் கோஷமிட்டார்கள்.

உணர்ச்சி வசப்பட்டிருந்தார் நகரசபைத் தலைவர். நம்பிக்கை யில்லாத் தீர்மானம் கொண்டுவர முக்கிய காரணஸ்தராக இருந்த திருவாளர் தகிடுதத்தம் தலைவரைப் பாராட்ட வந்தார்.

''என் வாழ்த்துக்கள் திருவாழத்தான்'' என்று சொல்லிக் கை குலுக்கக் கையை நீட்டினார்.

''ஏண்டா பொறுமைக்காரப் பயலே! நம் பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்து அவமானப் படுத்திவிட்டு, வாழ்த்துக்களா சொல்ல வருகிறாய்?'' என்று சொல்லி அவரைக் கன்னத்தில் உணர்ச்சி வேகத்தில் அறைந்து விட்டார் தலைவர்.

அடுத்த நிமிடம் திருவாளர் தகிடுதத்தத் தின் அடியாள் ஒருவர் தலைவரைக் கழுத்தைப் பிடித்து, யாரும் எதிர்பாராத வகையில் ஹாலுக்கு வெளியே தள்ளி விட்டார்.

ஒரே பதற்றம்.

போலீஸார் தலையீடு.

தலைவரையும் மற்றவர்களையும் போலீசார் பத்திரமாய் வீட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

மறுநாள் பத்திரிகையில், ''நகரசபைத் தலைவருக்குக் கல்தா'', ''கழுத்தைப் பிடித்துத் தள்ளப்பட்டவர் இவர்தான்'' என்று அவ ருடைய படமும் பிரகரமாகி யிருந்தது.

அதனால்தான் தலைவரும் காரியதரிசியும் சென்னைக்குப் புறப்பட்டார்கள்.

**ம**றுநாள் காலை ஐந்தரை மணி.

சென்னை எழும்பூர் ஸ்டேஷன். தலைவர் இறங்கியதும் கூட்டம் ''வாழ்க தலைவர்'', ''பழி வாங்கப் புறப்பட்ட அஹிம்ஸையின் மறு பதிப்பே வருக!'' என்று அலறியது.

''தொலைந்தான் பத்திரிகை ஆசிரியன்!''

''விடாதே விடாதே, ஆசிரியனை விடாதே!''

''செய் அல்லது செத்து மடி!''

''வாழ்க தலைவர்!''

பத்திரிகைக் காரியாலய வாசலில் ஓர் ஆட் டோவில் வந்து தலைவரும் காரியதரிசியும் இறங்கினர்.

''கோன் ஹை?'' என்று கேட்டான் கூர்க்கா.

''இந்தி ஒழிக!'' — தலைவர் கூவினார்.

''வடக்கே இருந்து வந்து, தமிழ் நாட்டிலே தமிழனைப் பார்த்து 'கோன் ஹை' என்று இந்தியில் கேட்கிறானே? என்ன திமிர்!'' என்றார் காரியதரிசி.

கூர்க்காவுக்குத் தமிழ் வராது.

இவர்களுக்கு இந்தி, ஆங்கிலம் தெரியாது. தமிழும் கொச்சைத் தமிழ்தான் வரும்.

யாரோ மொழிபெயர்ப்புச் செய்து அவர் களை ஆசிரியர் அறைக்கு அழைத்துப் போனார்கள். ஆசிரியர் இல்லை; ஆபீஸ் பையன்தான் இருந்தான்.

தலைவர் வாயைத் திறந்தார்; சுகமான கொட்டாவி அவரிடம் இருந்து வெளிப்பட்டு விடுதலை அடைந்தது.

அடுத்த நிமிடம் பண்பு குறையாத இங்கித மான மரியாதைச் சொற்கள் தலைவர் வாயி லிருந்து உதிர்ந்தன.

''எங்கேடா அந்த ஆசிரியன்?''

இந்த ஏகவசன மன்னனின் பேச்சு ஆபீஸ் பையனைத் திடுக்கிட வைத்தது.

''எதுக்கு ஸார் ஆசிரியரைத் தேடறீங்க? ஏதாவது காணாமற் போனவரைப் பற்றி விளம்பரம் போடணுமா?''

''ஆமாம். உங்க ஆசிரியரைக் காணோம் என்று விளம்பரம் போடணும். போடா, டேய், இழுத்தாடா அந்த ஆசிரியனை'' — ஒரு பெரிய கருட்டை எடுத்துப் பற்ற வைத்தார்.

பையன் பார்த்தான். வந்திருப்பவர்கள் இராவணன் பரம்பரை என்பதைத் தெரிந்து கொண்டு உள்ளே வேகமாக ஓடினான்.

ஆசிரியர் புருப் திருத்திக் கொண்டிருந்தார்.

''ஸார்!''

''என்னப்பா, 'டீ' வாங்கி வரட்டுமா என்று கேட்கிறாயா?''

''டீ'யா? 'தீ' வந்திருக்கிறது ஸார்! இப்பத்தான் வெளியே பிடிக்கத் தொடங்கி யிருக்கு.''

''என்னப்பா இது 'டீ', 'தீ' அடுக்கு மொழியில் உனக்கு எப்படி மோகம் ஏற் பட்டது? நீ மலபார் ஸைட் ஆச்சே?''

''உங்களுக்கு எப்பொழுதும் ஸீரியஸ்னஸ் இல்லை ஸார். யாரோ இரண்டு பேர் வந் திருக்காங்க ஸார்.''

''நடக்காது. தமிழ்ப் புத்தாண்டு மலர் போடப் போவதாய் விளம்பரம் மூந்தாநாள் போட்டோமல்லவா? அதற்குக் கதை கட்டுரை எடுத்துண்டு வந்திருப்பாங்க அந்த ரெண்டு பேரும். யாருடைய கதையும் கட்டுரையும் நான் போடப் போவதில்லை. போன வருட மலரில் வெளியான கதை கட்டுரைகளை அப் படியே மறுபடியும் பிரகரம் செய்துவிட்டுப் பின் குறிப்பு எனப் போட்டு 'சென்ற ஆண்டில் மணம் வீசிய மலரேதான் இது' எனப் போடப் போகிறேன். அவர்களைப் போகச் சொல். பார்க்க முடியாது.''

''நீ பார்க்காட்டி, நாங்களே பார்க்க வரோம்'' என்ற கர்ஜனையைக் கேட்டு ஆசிரி யர் திருட்டுக் கதை எழுதிய இலக்கியத் திருடன் போலானார்.

அடுத்த நிமிடம் தலைவரும் காரியதரிசியும் உள்ளே வந்து உட்கார்ந்தார்கள்.

சமாளித்துக் கொண்டார் ஆசிரியர். ''ஹி... ஹி... வாங்க. தங்கள் வரவு நல்வரவாகுக.''

''நீதான் ஆசிரியனா?''

இந்தக் கேள்வியில் மதுரைப் பாண்டியன் எதிரில் நின்று கண்ணகி கேட்ட ''நீதான் மன்னனோ?'' என்ற தொனி தெறித்தது.

# சிந்தால் வாக்குறுதி...

மேனியெழிலுக்கு முழுப் பராமரிப்பு

புதுமை குன்றாத நறுமணம்

துர்நாற்றத்திலிருந்து சிறந்த பாதுகாப்பு




**...சிந்தால் மட்டுமே நிறைவேற்றக்கூடியது**

ஜி-11 அடங்கிய ஒரே சோப் சிந்தால். இந்த அற்புத கிருமி நாசினி உடல் துர்நாற்றத்திற்கும் சருமக்களங்கத்திற்கும் காரணமாக விளங்கும் கிருமிகளை அழித்து விடுகிறது. இவ்வாறு சிந்தால் உங்கள் மேனியெழிலை அப்பழுக்கின்றி வைத்திருப்பதுடன், உங்களை நாள் முழுவதும் புத்துணர்ச்சியுடன் வைத்திருக்கிறது.

Interpub/GSC/5/72R Tam

# வளரும் குழந்தைகளுக்கு இனிய போர்ன்விடா!






சக்தி வளரட்டும்! பள்ளியிலும் விளையாட்டிலும், இன்றும் என்றுமே, வெற்றி அவனுக்கே. ஆம்! அவன் சுவைத்துப் பருகுவது போர்ன்விடா. ஊட்டமளிக்கும் **கோகோ**, பால் மால்ட், சர்க்கரை இவை இனிதே கலந்திட்ட போர்ன்விடாவிலே அடங்கியுள்ளது அவனுடைய ஒளிமிக்க எதிர்காலம்.

**சக்திக்கும் வலிமைக்கும்—மற்றும் தீஞ்சுவைக்கும் *காட்பரிஸ்* போர்ன்விடா!**

''ஆமாம்.''

''எம்புட்டு வருசமா நீ ஆசிரியரும் இருக்கே?''

தமிழ் கொஞ்சி விளையாடியதைக் கண்டார் ஆசிரியர். ''இந்தப் புத்தாண்டில் எனக்கு வெள்ளி விழா நடத்தணும். அவ்வளவு வருஷம் ஆகிறது.''

காரியதரிசி சொன்னார்: ''எங்க தலைவர் நினைச்சா உமக்கும் உம்ம பதவிக்கும் தெவஷம் கொடுத்துடுவாரு.''

ஆசிரியர் 'தமிழ் மொழியே, உனக்கு எப்போது கிரகணம் பிடித்தது' என்று மனத்துக்குள் கேட்டுக் கொண்டார்.

''நான் யார் தெரியுமா?''

''தெரியாது.''

''இந்தப் படத்தில் இருப்பது நான்தான்'' எனப் பத்திரிகையில் படத்தைக் காட்டினார்.

உடனே ஜெனரல் ஆஸ்பத்திரியிலிருந்து அவ்வளவு பிராணவாயு ஸிலிண்டர்களையும் ஆம்புலன்ஸில் வரவழைத்துத் தமக்கே எல்லாவற்றையும் செலுத்த வேண்டிய ஆபத்தான கட்டம் தம்மை நோக்கி வெகு வேகமாய் ஓடிவருகிறது என்பதை ஆசிரியரால் அப்போது உணர முடிந்தது.

''மன்னிக்க வேண்டும்.''

''மன்னிப்பதாவது! நீர் செய்த காரியத்துக்கு என் படத்தைப் பத்திரிகையில் பிரசுரம் செய்ததற்கு மன்னிப்பே கிடையாது.''

''வேண்டும் என்றே கெட்ட எண்ணத்துடன் வெளியிடவில்லை.''

''உமக்கு ஏது என் போட்டோ? திருடினீரா?''

பல இலக்கியத் திருட்டுக்களைத் தினமும் கண்டுபிடிக்கும் ஆசிரியரைப் பார்த்து 'திருடினீரா?' என்று கேட்டதும் ஆசிரியர் மனம் வேதனைப்பட்டது.

''திருடவில்லை. ஐந்து வருடங்களுக்கு முன்பு நீங்க மருத்துவ மனையில் டைபாயிட் வந்து படுத்திருந்தபோது எங்கள் பத்திரிகை நிருபர் உங்களை விசேஷ பேட்டி கண்டார். அப்போது பிடித்த படம்தான் அது.''

''அந்தப் பிளாக்கைக் கொண்டு வா!''

ஆசிரியர் பிளாக்கைக் கொண்டு வந்து கொடுத்தார். அதை தொறுக்கினர் தலைவர்.

''ஏனய்யா தாடியும் மீசையுமாய் இந்த போட்டோவைப் பிரசுரம் செய்துவிட்டீரே? என் மானம் போய்விட்டதே! உலகம் பூராவும் 'இப்படிப்பட்ட அவலட்சணமா நகரசபைத் தலைவர்?' என்று பரிகாசம் செய்யப் போறாங்க. என் போட்டோவை நீர் பிரசுரம் செய்ததில் எனக்கு வருத்தமில்லை. பழைய போட்டோவைப் போட்டு அவமானப் படுத்திவிட்டீரே!

''இதோ பாரும், போன மாதம் நான் இங்கு சென்னையில் 'அவலட்சணத்தையும் எங்கள் காமிரா ஜாலத்தால் அழகனுக்கிக் காட்ட முடியும்' என்று விளம்பரப்படுத்திய ஒரு ஸ்டுடியோவில் எடுத்துக்கிட்ட பல போஸ் போட்டோக்கள். என்னிடம் பிரசுரம் செய்யப் போட்டோ தேவை என்று கேட்டிருந்தால் இதில் ஒன்று கொடுத்திருப்பேன்.

''அதை நீர் பிரசுரம் செய்திருந்தால் 'நகரசபையின் தலைவரா, மன்மதனின் மறு பதிப்பா?' என உலகமே வியந்திருக்குமே!

## வாரம் ஒரு நகைச்சுவைக் கதை:

நகைச்சுவைக் கதைகளை வரவேற்கிறோம். இந்த இளைஞர் மலரில் தொடங்கித் தொடர்ந்து பன்னிரண்டு வாரங்களுக்கு நகைச்சுவைக் கதைகள் கல்கியில் இடம் பெறும். இப்பன்னிரண்டு கதைகளுள் சிறந்த ஒன்று என்று நாங்கள் கருதும் கதைக்கு வழக்கமான சன்மானம் தவிர விசேஷப் பரிசும் உண்டு. (ரூ. 100). இதுவரை வேறு எந்தப் பத்திரிகையிலும் எழுதியிராத புது எழுத்தாளர் இந்த விசேஷப் பரிசைப் பெறுவாரேயானால் எங்கள் மகிழ்ச்சி இரட்டிப்பாவதுடன் விசேஷப் பரிசும் இரட்டிப்பாகும். (ரூ. 200). எழுத்தாள அன்பர்களின் முழு ஒத்துழைப்பையும் வேண்டுகிறோம்.

''பரவாயில்லை. உம்மை மன்னித்தேன். இனி பிரசுரம் செய்வதானால் இந்தப் போட்டோவைப் பிரசுரம் செய்யும்'' என்று ஒரு போட்டோவைக் கொடுத்தார் தலைவர்.

அப்போதுதான் ஆசிரியருக்குப் பிராணவாயு செலுத்தப்படாமலேயே தமக்கு ரொம்பச் சுலுவாக மூச்சு தாராளமாய் வருகிறது என்பதை உணர முடிந்தது.

அவர்கள் புறப்பட்டார்கள். அறையைத் தாண்டும்போது செயலாளர் தலைவரிடம் கேட்டது ஆசிரியரின் காதில் விழுந்தது.

''எப்பவும் உங்களுக்கு உங்க சமாசாரம் தான் முக்கியம். என்னை மறந்துட்டீங்க!— என்னையும் போட்டோ பிடிச்சு அவர் கையிலே கொடுத்துப் பிரசுரம் செய்யச் சொல்லி, 'கழுத்தைப் பிடித்துத் தள்ளப்பட்ட தலைவரின் காரியதரிசி இவர்தான்' என்று போடச் சொல்லி யிருந்தால் எம்புட்டு அளகாய் இருந்திருக்கும்!''

ஆபீஸ் பையன் ஆசிரியரைப் பார்த்துச் சிரித்தான்.

''ஏம்ப்பா சிரிக்கிறே?''

''போட்டோவை எப்படிப் போடலாம்னு சொல்லி அவர் செய்த ஆர்ப்பாட்டத்தைப் பார்த்து இந்தப் பத்திரிகைக்குப் புது ஆசிரியர் கிடைக்க வழி செய்யப் போறார்னு நெனைச்சேன். இப்ப என்னடான்னா...

''அது போகட்டும்; இப்ப என்ன செய்யப் போறீங்க, அந்தப் போட்டோவை வைத்துக் கொண்டு?''

தாம்பூலச் சுவையை அனுபவித்தபடி நகைச்சுவையும் ரசித்தார் ஆசிரியர். பேனாவை எடுத்தார். அடியில் கண்டபடி எழுதினார்:

''ஒரு திருத்தம்: முந்தாநாள் பேப்பரில் கழுத்தைப் பிடித்துத் தள்ளப்பட்ட நகரசபைத் தலைவர் இவர்தான் என்று பிரசுரிக்கப்பட்ட போட்டோ அவருடையதல்ல. பங்களா தேஷ் அகதி ஒருவரின் படத்தைப் பிரசுரம் செய்ய வைத்திருந்தோம். கைத்தவறுதலில் அந்தப் போட்டோவைப் பிரசுரம் செய்து விட்டோம். உண்மையான போட்டோவை இங்கு பிரசுரம் செய்திருக்கிறோம். தவறுதலுக்கு மன்னிக்கவும். கழுத்தைப் பிடித்துத் தள்ளப்பட்ட தலைவர் இவர்தான் என்று பெருமையுடன் அவர் படத்தைப் பிரசுரம் செய்து எடுத்தியம்புகிறோம்.''

# டென்னிஸ் வீரர் மூவர்

புதுதில்லி ஜிம்கானா மத்திய மைதானத்தில் டென்னிஸ் போட்டி முன்னேறிக்கொண்டிருந்தது.

டேவிஸ் கோப்பை நட்சத்திரம் பிரேம்ஜித் லாலைப் பதினெட்டு வயது இளைஞர் விஜய் அமிர்தராஜ் 7–5, 6–2, 8–10, 6–2 என்ணிக்கையில் வெற்றி கொண்டு இறுதி ஆட்டத்தில் அடியெடுத்து வைத்தார். இறுதி ஆட்டத்தில் அமெரிக்க டென்னிஸ் ஆட்டக்காரர் நீலியுடன் விஜய் ஆடினார். 147 நிமிஷங்கள் இவ்விரு ஆட்டக்காரர்கள் வெற்றிக்காகப் போராடினார்கள். நீலிதான் வெற்றி பெறுவார் என்று ரசிகர்கள் எதிர்பார்த்தனர். அவரது தப்பான ஆட்டங்



டென்னிஸ் வீரர்கள் விஜய், அசோக், ஆனந்த்

களை இளைஞர் விஜய் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு விட்டார். கங்கை கொண்ட சோழன் மாதிரி தலைநகரை வெற்றி கொண்ட விஜய் தமிழகம் திரும்பினார். ஆனந்த், விஜய் சகோதரர்களுக்கு இரட்டையர் சாம்பியன்ஷிப்பில் வெற்றி. அசோக் ஜூனியர் சாம்பியன்.

தமிழகத்தில் ஐந்தாவது வரிசையில் வரும் அமிர்தராஜ் சகோதரர்கள் இந்திய டென்னிஸில் இத்தனை அபார சாதனைகளைச் செய்ய முடிந்தது எப்படி?

நுங்கம்பாக்கம் லயோலா கல்லூரிக்கு எதிரில் உள்ள பங்களா. டென்னிஸ் மைதானமும் பங்களாவும் அது டென்னிஸ் சாம்பியன்களின் இல்லம் என்பதைச் சொல்லாமலே விவரிக்கின்றன. ரயில்வே பெரிய அதிகாரி திரு அமிர்தராஜ் அந்தக் காலத்தில் தலைசிறந்த ஓட்ட வீரர்; அவரது மனைவி மாகி மட்டுமென்ன? டென்னிஸ் சாம்பியன்தான். மாகாணக் கல்லூரியின் டென்னிஸ் காப்டனும் கூட. விளையாட்டுக் கலைகளில் ஈடுபாடு மிக்க இத்தம்பதிகளின் புதல்வர்கள் மூன்று பேருமே இன்று டென்னிஸ் உலகைக் கலக்கி வருகிறார்கள்.

அதிகாலையில் ஆறு மணிக்குப் பெற்றோர்கள் புதல்வர்களின் பயிற்சியைப் பார்வையிட வருகிறார்கள். மூன்று இளைஞர்களும் ஸ்கிப்பிங் ஆடுகிறார்கள். மைதானத்தைச் சுற்றி ஓடுகிறார்கள். பஸ்கி எடுக்கிறார்கள். டென்னிஸ் ஆட்டத்துக்கு இவையெல்லாம் தேவைதானா என்று கேட்கிறீர்களா? உடலை 'டிரிம்' ஆக வைத்துக் கொள்ளத்தான். பிறகு இரண்டு மணி நேரம் டென்னிஸ் ஆடப் புறப்படுகிறார்கள். மாலையிலும் டென்னிஸ் பயிற்சி நடக்கிறது. 'சாம்பியன்கள் ஒரு நாளில் உருவாகிவிடுவதில்லை. பல நாட்கள் பயிற்சியின் விளைவு' என்பதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

ஆனந்த் பிறந்த நாள்: 20–3–52; விஜய்: 14–12–53; அசோக்: 22–2–57

''மூன்று பேருமே லயோலாக் கல்லூரி மாணவர்கள். அசோக் பி. யூ. ஸி ; விஜய் பி. காம் பைனல்; ஆனந்த் எம். ஏ. பைனல்

அசோக்





படிக்கிறார்கள்'' என்று அவர்களது அன்னை மாலி பூரிப்புடன் சொல்கிறார்.

''வருஷத்திலே காடாறுமாதம் என்கிறமாதிரி மூன்று பேரும் நாலைந்து மாதங்கள் தங்கள்



கார்ட்டூனிலும் புகைப்படத்திலும் ஆனந்த்

படிப்பை மறந்து மாட்ச் ஆடப் போய்விடுகிறார்கள். விளையாட்டோடு படிப்பும் முக்கியம் என்பதை அவர்களுக்கு நாங்கள் அறிவுறுத்தி வருகிறோம். ஒரு டென்னிஸ் சாம்பியனுக்கு ஒரு பட்டமும் (டிகிரி) தேவை!'' என்கிறார் ரயில்வே அதிகாரி திரு அமிருதராஜ்.

''நாலைந்து மாதங்கள் அவர்கள் கல்லூரிக்குப் போக முடியாதே. பாடத்தை எப்படிச் சரிக்கட்டுகிறார்கள்?'' என்று திகைப்புடன் கேட்கிறோம்.

''சர்வகலாசாலை, விளையாட்டுக்காரர்களான எங்களுக்கு 'அட்டென்டென்ஸ்' தந்து விடுகிறது. பேராசிரியர்களின் விசேஷ வகுப்புக்களுக்குப் போய், விட்டுப்போன பாடங்களை ஈடேற்றிக் கொள்கிறோம். டியூஷன் வேறு உண்டு எங்களுக்கு. பரீட்சை சமயத்தில் டென்னிஸ் ஆட்டத்துக்குக் கொஞ்சம் ஓய்வு தருகிறோம்!'' என்கிறார் இளைஞர் அசோக்.

''விஜய்! நீங்கள் சமீபத்தில் ஜப்பான், ஹாங்காங் சென்றிருந்தீர்களே, உங்கள் வெளிநாட்டு அனுபவங்களைச் சொல்லுகிறீர்களா?''

''ஓ! கொரியாவில் ஜூனியர் சாம்பியன்ஷிப்பை எளிதாக ஜெயித்து விட்டேன். ஆனால் ஹாங்காங்கில் நடைபெற்ற போட்டியில் ஒவ்வொரு படியாகக் கஷ்டப்பட்டு ஆடி முன்னேற வேண்டியிருந்தது. முதல் ரவுண்டில் தாய்லாந்து இளைஞர்; இரண்டாவது ரவுண்டில் பிலிப்பைன் வாலிபர்; மூன்றாவது ரவுண்டில் கொரிய ஆட்டக்காரர். அனைவரும் கடுமையான எதிர்ப்பைத் தந்தார்கள். இவர்களை யெல்லாம் ஜெயித்து விட்டேன். ஆனால் இறுதி ஆட்டத்தில் ஜப்பான் சாம்பியன் ஆட்டக்காரர் ஜே. காமிவாஸுமியோடு ஆடினேன். ஆட்டம் மூன்றரை மணி நேரம் யாருக்கு வெற்றியோ என்ற கதியில் ஊசலாடியது. வெளிச்சமில்லாததால் ஆட்டம் அடுத்த நாள் ஒத்தி வைக்கப்பட்டது. இரண்டாம் நாள் ஆரம்பத்தில் எனக்கு ஆட்டம் சூடு பிடிக்கவில்லை. ஜப்பான் ஆட்டக்காரர் காமிவாஸுமி முந்திக்கொண்டு ஜெயித்துவிட்டார்!'' என்கிறார் விஜய் அமிர்தராஜ்.

விஜய் விம்பிள்டனில் ஜூனியர் சாம்பியன்ஷிப்பில் 1971ல் செமிபைனல் வந்து வார்பாயோடு ஆடியது தெரியுமல்லவா? இந்திய ஆட்டக்காரர்களில் ஆனந்த் 1971ல் விம்பிள்டனில் மேல் ரவுண்ட் ஆடத் தகுதி பெற்றவர் என்பது நினைவிருக்கும். கிருஷ்ணன், லால், முகர்ஜி என்ற டென்னிஸ் பெரும் புள்ளிகளை இந்தச் சகோதரர்கள் ஒரோரு சந்தர்ப்பத்தில் வீழ்த்தி யிருக்கிறார்கள்.

கிருஷ்ணனிடம் விஜய் அமிர்தராஜின் ஆட்டத்தைப் பற்றிக் கேட்டதும், ''விஜய் அகில உலக டென்னிஸ் போட்டிகளில் நம் தமிழகத்துக்குப் பெரும் புகழும் பெற்றுத் தருவோரில் ஒருவரா யிருப்பார். அவருக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது. ஆனால் கடுமையான உழைப்பின் மீதே விஜய் தம் புகழை நிலைத்திருக்கச் செய்ய முடியும்!'' என்று சொல்கிறார்.

டென்னிஸ் தவிர ஷட்டில்காக் பாட்மின்டன், டேபிள் டென்னிஸ் ஆகியவற்றிலும் விஜய், அசோக் இருவருக்குமே பயிற்சி உண்டு. ஆனந்த் டேபிள் டென்னிஸ் நன்றாக ஆடுவார். மூவருக்கும் 'செஸ்' பைத்தியம் உண்டு!

ஆனந்த் ஹிப்பி 'மாதிரி' தலை வளர்த்துக்கொண்டிருக்கிறார். உணர்ச்சிகளை மைதானத்தில் வெளியிட்டு ஆனந்த் 'டெம்பரமெண்டல்' ஆட்டக்காரர் என்ற பேரைப் பெற்றவர். ஒரு பந்தை அடிக்கத் தவறிவிட்டால் மட்டையைக் கையில் ஓங்கி அடித்துக் கொள்வாராம். ஆனால் உணர்ச்சி வேகங்களுக்கு இடம் கொடுக்காமல், ஆட்டத்தில் தோல்வி நிலையிலும் தீவிரமாகப் போராடும் சாமர்த்தியம் விஜய் அமிர்தராஜுக்கு உண்டு. தோல்வி நெருங்கிய வேளையிலும் மனந்தளராமல் ஆடி வெற்றி வாகை சூடிக் கொண்ட இளைஞர் விஜய் அமிர்தராஜ்.

மூன்று சகோதரர்களும் டென்னிஸ் உலகில் தங்கள் பெயரை நிலைநாட்டப் பாடுபட்டு வருகிறார்கள். விளையாட்டுக் கலைகளில் ஈடுபாடு மிக்க பெற்றோர் அவர்களது விளையாட்டுக் கலைகளின் மேன்மைக்கு ஊக்கமும் உற்சாகமும் தருகிறார்கள். வருங்காலத்தில் இவர்களது சாதனைகளால் தமிழகம் பெரும் புகழ் பெற வேண்டும்.

— பி. எஸ். மணி

விஜய்



# அனைவருக்கும் உளங்கனிந்த புத்தாண்டு வாழ்த்துக்கள்

ஒளிமயமான எதிர்காலத்தைச் சுட்டிக்காட்டும் வகையில் புதிய ஆண்டு பரிதாபி - இன்று உதயம் ஆகிறது, வருக, வருக, என்று வாழ்த்திப் பாடுகின்றோம்.

கடந்த ஆண்டு விரோதிகிருது, பசுமைப் புரட்சியில் மேலும் முன்னேற்றம், போர்முனையில் வெற்றி, தன்னிறைவுக்கு விடி வெள்ளி, நாட்டின் ஒருமைப்பாட்டுக்குத் தனி உற்சாகம். நமது சாதனைகளைக்குறித்து மகிழ்ச்சி அடைகின்றோம்.

எழில்மிகு தமிழகம் புதிய தொழில் துறையில் எழுச்சி கொள்ள மதராஸ் ரி:பைனரீஸ் லிமிடெட் - சென்னை எண்ணெய் சுத்திக்கரிப்பு ஆலை- ஒரு வழிகாட்டியாக அமைந்ததற்குப் பெருமை அடைகிறோம்.

அனைவருக்கும் எங்களது உளங்கனிந்த புத்தாண்டு வாழ்த்துக்கள்.

**மதராஸ் ரி:பைனரீஸ் லிமிடெட்**
**சென்னை-68**



# ஏக்கங்கள், எதிர்ப்புகள்; முயற்சிகள், வெற்றிகள்!

## 2



### திடீர்க்கல்யாணவாதி!

**திரு எம். கே. ராமகுமார், எம். பி., பி. எஸ்.**

**‘பா**ல் வடியும் முகம். முகம் மூடிய தலை’ என்று சுலபமாக வருணித்து விடலாம், இந்த இளம் டாக்டரை. தாத்தா ஒரு டாக்டர். பேரனும் டாக்டராக வேண்டும் என்று பள்ளி நாட்களிலேயே திட்டம் இட்டார். அதன்படி மருத்துவக் கல்லூரியில் சேர்ந்தார். இரண்டாவது ஆண்டுப் படிப்பில் இருந்தபோது, டாக்டராகும் ஆசைக்கு ஒரு முழுக்குப் போட்டுவிட்டு ஓடிவிடலாமா என்று எண்ணியது உண்டு. பரிசோதனை சாலைகளில், அவருக்கு மனித உறுப்புக்களைக் கிழிப் பார்க்க வேண்டிய நேரங்களில் ஆர்வத்துக்குப் பதிலாக அருவருப்பே ஓங்கி நின்றது. நல்ல வேளை. அவசரப்பட்டு ஒன்றும் செய்து விடவில்லை. தொடர்ந்து படித்து முடித்துவிட்டார். இப்போது இவர் ஹவுஸ் ஸர்ஜன். இவர் தலைமயிர் இப்போதுள்ளதைவிட நீளமாக இல்லாததற்குக் காரணம் உண்டு. இதைவிட நீளமாய் இருந்தால் ஆப்பரேஷன் நேரங்களில் கொஞ்சம் சங்கடமாக இருக்கும். 'மாஸ்க்' போட்டுக் கொண்ட பிறகு கொஞ்சம் வெளியே நீட்டிக் கொண்டிருக்கும். அது நல்லதல்ல. ஆகவே, அந்த 'மாஸ்க்' அளவுக்கு வெட்டிக் கொண்டு விடுகிறார்!

''நீங்க ஒரு பிரம்மச்சாரி. நீங்கள் காதல் கல்யாணங்களை ஆதரிக்கிறீர்களா ? அல்லது பெரியோர்கள் பார்த்து நிச்சயிக்கும் திருமண முறையை விரும்புகிறீர்களா ?''

'' நான் திடீர்க் கல்யாண முறையை ஆதரிக்கிறேன். ஒரு பெண்ணைப் பிடித்திருக்கிறதா? உடனே காலம் தாழ்த்தாமல் முறைப்படி கல்யாணம் செய்து கொண்டு விட வேண்டும். காதல் கீதல்னு ஆரம்பித்தால் காலம் ஓடுகிறது. பல சந்தர்ப்பங்களிலே 'டிராஜடி'யிலோ, ஏமாற்றத்திலோ முடிகிறது.'' டாக்டர் ராமகுமாருக்கு மிகவும் பிடித்தது காரம். இட்லி அளவைவிட அதிகமாக மிளகாய்ப் பொடி வேண்டும் ! இவர் இப்படிக் காரம் விழுங்கும்போது கூடச் சாப்பிடுபவர்கள் கண்களில் நீர் வழியும்! அத்தனைக்கத்தனை இவர் பேச்சில் இனிமை உண்டு.



### மனைவி சமைத்தாலும்...!

**திருமதி வி. மீனாட்சி பி. ஏ.**

**நா**ன் பொருளாதாரத்தைப் பாடமாக எடுத்துப் படித்துச் சர்வ கலாசாலை டிகிரி வாங்கி விட்டேன். இப்போது எனக்குத் தேவை சமையல் பாடத்தில் ஒரு டிகிரி. இதை எந்தப் பல்கலைக் கழகமும் கொடுத்து விட முடியாது! அந்தப் பட்டம் என் கணவரிடமிருந்து வந்தாக வேண்டும். என்றைக்கு அவர் சாப்பிட்டுக் கை கழுவி விட்டுத் திரும்பும்போது ''பேஷ்! இன்றைக்கு எல்லா அயிட்டங்களுமே பிரமாதம்!'' என்று சொல்லுகிறாரோ அந்த நிமிடமே இந்தப் பட்டம்

வழங்குவதற்கான 'கான்வொகேஷன்' நடந்து விட்டதாக அர்த்தம்!

அவர் சாப்பாட்டுப் பிரியர் இல்லை. ஆனால் ரசிகர். ஒருவிதத்தில் நக்கீரரும்கூட! 'மனைவி சமைத்தாலும் குற்றம் குற்றமே!' என்று விண்டல் செய்யும் நவீன நக்கீரர்.

'மாமியாரைக் காணாமல் தவிக்கும் மருமகளும் உண்டா இந்தக் காலத்தில்?' என்று நீங்கள் ஆச்சரியப்படலாம். நான் அப்படித் தான்! என் மாமியார் இரண்டு மாதங்களாக ஊரில் இல்லை. சமையல் காரியம் அவருடைய ஏகபோக உரிமை. ஆபீஸ் போகும் மருமகள் என்ற காரணத்தால் என்னை அதிகமாக அலட்டிக் கொள்ள விட மாட்டார். அவர் ஊருக்குப் போனாரோ இல்லையோ நான் இவரிடம் அகப்பட்டுக் கொண்டேன்! சட்டசபையில் எதிர்க் கட்சிக்காரர்கள் அவ்வப்போது உரிமைப் பிரச்னைகளைக் கொண்டு வந்து அமர்க்களம் செய்வதுபோல் ''சாதம் குழைந்து விட்டது! என்ன சொல்கிறாய்?'' ''இது என்ன சாம்பாரா? இல்லை புளி சூப்பா?'' என்ற மாதிரியெல்லாம் உப கேள்விகள் போட்டு என்னை நடுங்க வைக்கிறார். இதனாலே என் மாமியார் எப்போது ஊரிலிருந்து திரும்பி வருவார் என்று காத்திருக்கிறேன். ஆனால் அதற்குள் இவரிடமிருந்து 'நீ பாஸ்' என்ற நற்சான்றையும் வாங்கி விடுவேன் என்ற நம்பிக்கையும் உண்டு!



## "பண்பாட்டை அனுசரிக்காத ஃபாஷன் வேண்டாம்!"

**குமாரி வி. திலகம்**

"நவீன டிசைனில் சேலையைப் பார்த்தால், அதை வாங்கி நாமும் உடுத்திக் கொள்ள வேண்டும் என்று ஆசைப்படுவதில் தவறில்லை. ஆனால் யாரோ, 'லோ ஹிப்' வைத்துக் கட்டிக் கொண்டு போகிறார்கள் என்பதற்காக நாமும் அப்படி உடுத்த ஆசைப் படுவது அவசியம்தானா? பண்பாட்டை அனுசரிக்காத எந்த ஃபாஷனையும் நான் அனுசரித்துப் போகத் தயாரில்லை.''

இது குமாரி திலகத்தின் அபிப்பிராயம். மாநிலக் கல்லூரியில் 'சோஷல் சயன்ஸ்' பாடத்தை எடுத்துக் கொண்டு படிக்கும் எம். ஏ. முதல் ஆண்டு மாணவி இவர்.

''மாணவர்கள் சுதந்திரத்தை அதிக அளவில் உரிமையுடன் எடுத்துக் கொள்வதற்கு இப்போதெல்லாம் கல்லூரி ஆசிரியர்கள் மாணவர்களிடையே அதிக வயது வித்தியாசமில்லாதது ஒரு காரணம்'' என்கிறார். ''வீட்டில் கட்டுப்பாடு இல்லாமல் இருந்தால் இத்தகைய சுதந்திர உணர்ச்சி பீறிடும்'' என்றும் சேர்த்துக் கொள்கிறார்.



## டெலிவிஷனுக்குத் தயார்!

**திரு எம். சேஷுபாபு**

ஆந்திராவில் பிறந்து வளர்ந்து கேரளத்தில் மின்துறை இஞ்சினியரிங் கல்வி கற்றுப் பட்டம் பெற்றுத் தமிழகத்தின் தலைநகரில் தனியார் ஸ்தாபனம் ஒன்றில் பணிபுரியும் அன்பர் திரு எம். சேஷுபாபுவுக்குத் தம் தாய்மொழியான தெலுங்கைத் தவிர தமிழ், கன்னடம், மலையாளம் ஆகிய மூன்று மொழிகளும் தெரியும். இவர் மலையாளம் பேசும் வேகத்திலிருந்து பல நண்பர்கள் இவரை இன்றும் ஒரு மலையாளி என்றே நினைக்கிறார்கள்.

கல்லூரி நாட்களில் இவருடைய பொழுது போக்கு, ரேடியோப் பெட்டிகளின் வேலை நுணுக்கங்களை ஆராய்ச்சி செய்வது. இந்த ஆர்வம் இவர் இரண்டாம் படிவம் படிக்கும் போதே தோன்றிவிட்டது. குண்டூரிலுள்ள பள்ளிக்கூடத்துக்குப் போகும்வழியில் புதிதாக ஒரு ரேடியோக் கடை திறந்திருந்தார்கள். அதில் அழகாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த பெரிய பெரிய ரேடியோப் பெட்டிகளைப்

பார்த்ததும் அவை எப்படி வேலை செய்கின் றன என்று தெரிந்து கொள்ளும் ஆர்வம் ஏற்பட்டது. அது சம்பந்தமாக வாசகசாலை யில் கிடைத்த புத்தகங்களை யெல்லாம் படித் தார். இஞ்சினீரிங் கல்லூரியில் சேர்ந்த பிறகு தமக்குக் கிடைத்த நேரத்தையெல் லாம் இந்த ஆராய்ச்சியில் செலவழித்தார். இப்போது ரேடியோ, டிரான்ஸிஸ்டர், — டேப் ரிக்கார்டர் — எதுவாக இருந்தாலும் அநாயாசமாகப் பிரித்துப் போட்டுப் பழுது பார்க்கிறார்.

டெலிவிஷன் பெட்டிகள் விஷயத்திலும் இந்த மாதிரி நுணுக்கங்களைக் கண்டறிய ஆவல் ஏற்பட்டிருக்கிறது. அது சம்பந்தப் பட்ட புத்தகங்களைப் படிக்க ஆரம்பித்துவிட் டார்! டெலிவிஷன் எப்போது வந்தாலும் அதற்கு ஆயத்தமாக இருப்பார்.





## நவநாகரிகத்தில் பயனுண்டு!

குமாரி பி. ஹேமா

"மிஸ் ஹேமா! நீங்கதான் இந்த வட் டாரத்திலேயே மோஸ்ட் அல்ட்ரா மாடர்ன் நங்கை என்று கேள்விப்படுகிறேனே?"

"அஃப்கோர்ஸ்! ஆனால் இங்கே முறைக் கிறவர்கள்தான் ஜாஸ்தியே ஒழிய, ரசிக்கிற வர்கள் குறைவு. ஏன்னு இது கொஞ்சம் பழமை உணர்ச்சி நிறைந்த பகுதி."

"பெண்களின் நவீன நாகரிக உடைகள் பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?"

"இளநங்கையர் பாஷன்களைத் தோற்று விக்கிறார்கள். அதை உடனடியாக வயதான வர்கள் காப்பியடித்து விடுகிறார்கள். அப்படி யாவது தங்கள் வயதின் மதிப்பு பிறர் பார் வையில் குறைந்துவிடாதா என்ற ஆசை!"

"உடல் அமைப்பை அதிக அளவில் அப் படியே வெளிக் காண்பிக்கும் ஆடை அலங் கார ஃபாஷன் நம் ஊர்ப் பெண்களுக்கு அவ சியம்தானா?"

"நீங்க குறிப்பாக லோ ஹிப் சேலை கட்டு வதை மனத்தில் வைத்துக் கொண்டு கேட் கிறீர்கள் என்று நினைக்கிறேன். அது ஒரு கலை சார்! நான் அதை ரொம்ப விரும்பு கிறேன். அது உடலைக் கட்டுக்கோப்பாக வைத்துக் கொள்ள உதவுகிறது. அதற்காக நான் தினசரி தேகப்பயிற்சிகூடப் பண்ணு கிறேன்! இடுப்பு கொஞ்சம் பருத்துவிட் டாலும் லோ ஹிப் ஃபாஷனைப் பின்பற்று வதில் அர்த்தமில்லையே!"

"நீங்க லுங்கிகட்டற வழக்கம்உண்டோ?"

"ஓ! ரொம்பச் சௌகரியமான ஆடை சார் அது! அது ஒன்றும் வெளி நாட்டிலிருந்து இறக்குமதியானதில்லை, ஏற்கெனவே மல பாரில் இருந்து வருவதுதானே?"

"நீங்க எதிலுமே ஒரு தீவிரவாதி போல் இருக்கிறது!"

"ஓ எஸ். ஆகார வகைகளில் கூட நான் அலாதிதான்! ரொம்பத் தித்திப்பும் பிடிக்கும்; ரொம்பக் காரமும் பிடிக்கும்!" ■

"உங்கள் பொழுதுபோக்கு?"

"நான் பிரியூனிவர்சிட்டி கோர்ஸை முடித் துக்கொண்டு சும்மாதான் இருக்கிறேன். சமை யல் கலையைக் கற்றுக் கொள்ள ஆசை. அதற்கான குறிப்புக்களைச் சேர்க்கிறேன். நகைச்சுவை மிகுந்த ஆங்கிலப் படங்களைப் பார்ப்பேன். கார் டிரைவிங்கில் ஈடுபாடு உண்டு. மாடலாகப் போக வேண்டும் என்ற ஆசையும் உண்டு."

"ஒளிவு மறைவு இல்லாமல் பேசுகிறீர்கள்! வெரி குட்! உங்கள் அபிலாஷை ஈடேற வாழ்த்துக்கள்!"





## தேங்காய் வியாபாரம் திகைக்கிறது

ஏ. ஷண்முகம்

தர்மபுரி மாவட்ட கிராமம் ஒன்றில் நிம்மதியாகப் பள்ளி ஆசிரியர் வேலை பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்ட ஷண்முகம் இப்போது சந்தடி மிகுந்த சென்னை நகரில் தேங்காய் வியாபாரியாக மாறியிருக்கிறார். இந்த மாறுதலை அவர் மனம் ஒப்பி ஏற்றுக் கொண்டும் விட்டார்.

ஒன்பதாம் வகுப்பில் படிக்கும்போது உபாத்தியாயர் வாழ்க்கைக்கான திட்

டத்தை மனத்தில் வருத்துக் கொண்டார். பத்தாம் வகுப்புக்கு வந்தபோது, விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்த இவர் தகப்பனார் சொந்த ஊரில் ஒரு துணிக்கடை திறந்து வியாபாரம் தொடங்கினார். ஷண்முகத்தின் கவனம் இந்த வியாபாரத்தில் திரும்பியது. ஆகவே, ஆசிரியர் ஆகும் ஆசையைக் கட்டி வைத்துவிட்டுத் துணிக் கடையில் வந்து உட்கார்ந்தார்.

மூன்று வருடங்களுக்குப் பிறகு பல்வேறு காரணங்களுக்காகத் துணிக் கடையை மூடிய போது ஷண்முகத்தின் வியாபார அநுபவம் அவரைச் சும்மா இருக்கவிடவில்லை. சொந்தத்தில் ஊரிலேயே ஒரு மளிகைக் கடையை ஆரம்பித்து நடத்தத் தொடங்கினார். இரண்டு வருடங்கள் இந்த அநுபவம். அதையும் நிறுத்தினார்.

ஏற்கனவே சென்னைக்கு வந்திருந்த இவர் தம்பி, அண்ணனுக்குத் தேங்காய் வியாபார யோசனையைச் சொல்லிக் கடிதம் எழுதினார். ஷண்முகத்துக்குத்தான் வியாபார அநுபவம் உண்டே! புறப்பட்டு வந்துவிட்டார் சென்னைக்கு! இப்போது புரசைவாக்கம் நெடுஞ்சாலையில் தேங்காய்க் கடை உரிமையாளராக அமர்ந்திருக்கிறார் இருபத்திநான்கு வயதான இளைஞர் ஷண்முகம்.

"என்ன மிஸ்டர் ஷண்முகம்! நீங்க கூட இன்றைய நாகரிகத்தைப் பின்பற்றுகிறீர்கள் போலிருக்கே! கிருதா நீளமாக இருக்கு!"

"அதெல்லாம் ஒண்ணுமில்லீங்க! பட்டணத்துக்கு வந்தப்புறம் நம்ப பாஷையையும் கொஞ்சம் மாத்திக்கத்தானே வேண்டியிருக்கு? எங்க ஊரு வாடமங்கலத்திலே பனியனோடேயே காலத்தைக் கழிச்சுடலாம்! இங்கே முடியுமா எத்தனையோ ரக வாடிக்கைக்காரங்க வராங்க! அவங்களுக்குத் தகுந்தாப் போலே...."

"உங்களைப் போன்ற இளைஞர்கள் உங்கள் கடைக்கு வருகிறார்களா?"

"நிறைய வருகிறார்கள். பிள்ளையாருக்கு உடைக்கத் தேங்காய் வேண்டும். விலையைப் பற்றிக் கவலை இல்லை. தேங்காய் நல்லதாக இருக்க வேண்டும்" என்பார்கள். அவர்கள் ஆடை அலங்காரங்களைப் பார்த்தால் நம்ப முடியாது. ஆனால் 'கோயிலுக்கு' என்று சொல்லும்போது அவர்கள் பயபக்தியுடன் பேசுவார்கள். ஆச்சரியமாக இருக்கும்."

"வெரிகுட்! வியாபாரத்தைக் கவனியுங்க" என்று சொல்லி விடைபெறுகிறோம்.

## மாசத்துக்கு நாலு தமிழ்ச் சினிமா!

குமாரி சகுந்தலா

என்னுங்க? போட்டோ பிடிச்சுட்டீங்களா? அடடா! சொல்லியிருந்தா கொஞ்சம் பவுடர் கிவுடர் போட்டுக்கிட்டு வந்திருப்பேனே? என்ன அப்படிப் பார்க்கிறீங்க? பாண்டுஸ் பவுடர் பெரிய டப்பா வாங்கி வைச்சிருக்கேனுங்க! நானு பெரிய மனுஷங்க வீட்டுக்கு வேலை செய்யப் போகணும்னு நறுவிசாப் போக வேணுமுங்களா?

மாசத்துக்கு நாலு தமிள் படமாவது பார்த்துடுவேனுங்க. படம் ரிலீஸான வாரத்திலேயே பார்க்க ஆசைப்படுவேன். சில சமயங்களிலே இரண்டாவது வாரத்திலே தான் முடியுது. நாலு இடங்களில் வீட்டு வேலை செய்யறேன். எல்லாரும் நல்ல மனுஷங்க. அன்பா இருப்பாங்க. என்னிக்காவது நேரத்தோட போகலேன்னு "என்னடி சகுந்தலா? எங்க வீட்டுக்கு வந்து வேலை செஞ்சுட்டு மத்தவங்க வீட்டுக்குப் போகக் கூடாதா?"ன்னு ஒவ்வொருத்தரும் கேட்பாங்க. எனக்குச் சிரிப்பா வரும். அதை அடக்கிகிட்டுப் பதில் பேசாம வேலையை முடிச்சுட்டுக் கிளம்பிடுவேன். அவங்களும் அவங்க கோபத்தை மறுநாளே மறந்துடு



வாங்க! நம்ம பதில் சொன்னாத்தானே அவங்களுக்கும் கோபம் அதிகம் வரும்! அவங்களுக்கும் மெட்ராஸ் வேலைக்காரி மதிப்பு தெரியாமயா இருக்கு?

நாலு இடங்களுக்குச் சாப்பாடு கொண்டு போறேன். எல்லாம் பாரிஸ் கார்னர் பக்கம் தான்! என்னவோ வீட்டுச் செலவு எல்லாம் போக அஞ்சு ரூபா மிஞ்சும். அதை போஸ்டாபீஸிலே போட்டுடுவேன்! நாளைப் பின்னே ஒரு துணியோ நகையோ வேணும்னு உதவுமில்லே!

எனக்கு நல்ல டிசைன் போட்ட வாயில் புடவை பிடிக்கும். அதையும் கஞ்சி போட்டு உலற வைச்சு மடிச்சுத்தான் கட்டுவேன்.

இந்த வீட்டு வேலை விசயத்திலே எங்கம்மா தான் எனக்கு வாத்தியார். அஞ்சாங்கிளாஸ் வரை படிச்சேன். அப்புறம் அம்மாவுக்குத் துணையா வந்துட்டேன்.

எனக்குக் கல்யாணம் பண்ணிப்புடணும்னு அம்மாவுக்கு அவசரம். உறவிலேயே ஆள் இருக்கு. அதுக்கும் வேளையும் பொழுதும் வரணுமில்லே!

நான் போட்டோவிலே நல்லா விழுந்திருக்கேனா? பார்த்துச் சொல்லுங்களேன்.

– கோமதி சுவாமிநாதன்

# தமிழ்நாடு மாநில கூட்டுறவு வங்கி லிமிடெட்

## 19/20, லிங்கி செட்டித் தெரு, சென்னை -1

தந்தி விலாசம் : ''அர்பாங்க்''
தபால் பெட்டி எண் : 226

தொலை பேசி எண் :
20367, 20368, 20369
டெலக்ஸ் எண்: MS. 7225

எங்கள் வங்கியில் நீங்கள் செலுத்தும் டெபாஸிட்டுகள் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படையான விவசாயத்திற்கும், விவசாயத் தொழில்களுக்கும் உதவி செய்யும்.

### வட்டி விகிதங்கள் :

**கரண்ட் அக்கௌண்ட் :** (வருடத்திற்கு) ½%

**ஸேவிங்ஸ் பாங்க் அக்கௌண்ட் :**

(குறைந்தபட்ச மாத நிலுவையின் பேரில் வட்டி கணக்கிடப்படுகிறது) 4 %

**சீசன் டெபாஸிட்டுகள் :** ரூ. 1000-ம் அதற்கு மேலும் (வருடத்திற்கு)

| | |
|---|---|
| 15 நாட்கள் | 2% |
| 46 நாட்கள் | 3% |

**பிக்செட் டெபாஸிட்டுகள் :** ரூ. 100 ம் அதற்கு மேலும்

| | | | |
|---|---|---|---|
| 91 நாட்கள் | 4½% | 24 மாதங்கள் | 6¾ % |
| 6 மாதங்கள் | 5¼ % | 36 மாதங்கள் | 7¼ % |
| 12 மாதங்கள் | 6¼ % | 60 மாதங்கள் | 7½ % |

குறைந்தபட்ச கால அளவாக ஓராண்டு காலத்திற்கு ரூ. 1000/-க்கும் அதிகமாக உள்ள டெபாஸிட்டுகளுக்கு மாதாந்திர வட்டி அளிக்கப்படுகிறது.

மத, தர்ம கல்வி ஸ்தாபனங்களின் டெபாஸிட்டுகளுக்கு மேலே குறிப்பிட்டதைவிட ½% கூடுதல் வட்டி தரப்படும்.

**ரெக்கரிங் டெபாஸிட் :** தவணைகளுக்குப் பெறும் மொத்தப் பணம் :

| மாதத் தவணை | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 84 |
|---|---|---|---|---|---|---|---|
| ரூ.5ம் அதன் மடங்குகளும் | ரூ.62 | 128.50 | 201 | 278 | 362.50 | 452 | 548.50 |

இதர விவரங்களை வங்கியின் கீழ்க்கண்ட கிளை அலுவலகங்களிலிருந்தும் பெறலாம்

| கிளை அலுவலகம் பெயர் | முகவரி | தொலை பேசி எண் |
|---|---|---|
| மயிலாப்பூர் : | 32-A, லஸ் சர்ச் ரோடு, சென்னை-4 | 71262 |
| எழும்பூர் : | 68, எழும்பூர் ஹைரோடு, சென்னை-8 | 20437 |
| திருவல்லிக்கேணி : | 111, பெரிய தெரு, சென்னை-5 | 84692 |
| தியாகராயநகர் : | 19, பாண்டி பஜார், சென்னை-17 | 442852 |
| காந்திநகர் : | 78, இரண்டாவது மெயின் ரோடு, சென்னை-20 | 71132 |
| ஷெனாய்நகர் : | 8-1, செங்குந்த முதலி தெரு, சென்னை-30 | 64834 |
| கெல்லீஸ் : | 2, மாதவாக்கம் டாங்க் ரோடு, சென்னை-10 | 64105 |
| சாந்தோம் : | 110, சாந்தோம் ஹைரோடு, சென்னை-4 | 74300 |
| கிரீன்வேஸ் ரோடு : | 14, கேசவப் பெருமாள்புரம் காலனி, சென்னை-28 | 74215 |
| மயிலாப்பூர் குளம் : | 10, தெற்கு மாட வீதி, சென்னை-4 | 73158 |
| அண்ணாசாலை (''காமதேனு'') | 109 D & E, அண்ணாசாலை, சென்னை-18 | 440292 |
| சாஸ்திரி நகர் : | B-10, சாஸ்திரி நகர், அடையாறு, சென்னை-20 | 76418 |
| அசோக் நகர் : | 273-B, 10வது அவின்யூ, அசோக் நகர், சென்னை-33 | 445843 |
| அண்ணா நகர் : | 280, அண்ணா நகர், சென்னை-40 | |
| அண்ணாசாலை (அண்ணா சிலை) | 776, திருவல்லிக்கேணி நெடுஞ்சாலை, சென்னை-5 | 812859 |
| ஜவஹர்நகர் : | 30, சுந்தரராஜ பெருமாள் கோயில் தெரு, சென்னை-82 | |

**நுங்கம்பாக்கம் கிளை விரைவில் திறக்கப்படும்**

ஆர். கனகசபை
தலைவர்

பி. என். டி. சாரி
செயலர்

# இளைஞர் சமுதாயம்



● கிருஷ்ணநகர் இளைஞர் சங்கம் நடத்தும் வகுப்பு.

## 1. முயற்சி தரும் பெருமை

நாட்டின் வருங்காலமே இளைஞர்கள் கையில்தானே இருக்கிறது! ஆகவே, மகான்கள், வாழை மாம் குலை தள்ளிச் சாய்ந்ததும் தன்னை யொட்டித் தோன்றியிருக்கும் வாழைக் கன்றுகளைப் பார்த்து மகிழ்வது போல் தங்கள் சந்ததியினரைக் கண்டு மகிழ்வார்கள்; தங்கள் முடிவை எண்ணிக் கலங்க மாட்டார்கள். அதனால் தானே கண்ணனையும், முருகனையும், அன்னை பாரத தேவியையும், ஆதி பராசக்தியையும் பாடிய மகா கவி பாரதியார் வருங்கால இளைஞர் சமுதாயத்துக்கு நல்வரவு கூறி அற்புதமாகப் பாடியிருக்கிறார்.

''ஒளிபடைத்த கண்ணினும் வா வா வா
உறுதிகொண்ட நெஞ்சினும் வா வா வா
களிபடைத்த மொழியினும் வா வா வா
கடுமைகொண்ட தோளினும் வா வா வா
தெளிவுபெற்ற மதியினும் வா வா வா
சிறுமைகண்டு பொங்குவாய் வா வா வா
எளிமை கண்டிரங்குவாய் வா வா வா
ஏறுபோல் நடையினும் வா வா வா!''

* * *

''சில நாட்களாக உங்களைப் பார்த்தால் நாலைந்து ஆண்டுகள் குறைந்து விட்டமாதிரி தெரிகிறதே! என்ன சமாசாரம்?'' என்று என் நண்பர் ஒருவர் என்னை அக்கறையோடு விசாரித்தார்.

''இப்பொழுது நான் இளைஞர் சமுதாயத்துடன் நெருங்கிப் பழக ஆரம்பித்திருக்கிறேன் அல்லவா? அதுதான் ஒருவேளை காரணமாயிருக்கும்'' என்றேன்.

அந்தக் காலத்து மன்னன் அதிகமான் இப்பொழுது இல்லை. அவன் அவ்வைப் பிராட்டிக்கு ஈந்த நெடுநாள் வாழ உதவும் அதிசய நெல்லிக் கனியும் இல்லை. ஆனால் அவற்றுக்குப் பதிலாக இளைஞர்கள் இருக்கிறார்கள். அவர்கள் நடத்தும் சங்கங்கள் இருக்கின்றன. இவை போதும், நமக்கு நம் இளமையை மீட்டுத் தந்துவிடும்.



ஸ்ரீமதிகள் ராஜேசுவரி, வசந்தா - வீணை நிகழ்ச்சி.

பல்லாவரம் இளைஞர் சங்கத்தின் (**Youth Federation**) அங்கத்தினர்களை நேரில் கண்டு சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தபோது நான் உண்மையிலேயே அந்த வாலிபர்களுள் ஒருவனாக ஆகிவிட்டேன்.

பம்மல் கிராமத்தின் எல்லையை அடுத்த கிருஷ்ண நகரில் இந்தச் சங்கம் இருக்கிறது என்று அறிந்ததும், 'ஏதோ அங்கத்தினர்கள் என்று பேருக்கு இரண்டொருவர் இருப்பார்கள்' என்ற அலட்சிய மனப்பான்மையே என்னுள் தலைதூக்கியது.

ஆனால் அந்த எண்ணம் அந்தக் கட்டிடத்தை நெருங்குகிற வரையில்தான் இருந்தது. சங்கத்தை அடைந்ததும், சுமார் ஐம்பது பேர்கள் என்னையும், என் நண்பரையும் புகைப்



● கிரிக்கெட் வீரர் எஸ். சேகர்.

படக் கலைஞரையும் இன்முகம் காட்டிவரவேற்றனர். உடனே சங்கத்தைப் பற்றிய என் அலட்சிய மனப்பான்மை என்னை நிமிர்ந்து பார்க்க வெட்கப்பட்டுக் கொண்டு ஓடி ஒளிந்து கொண்டது.

உள்ளே சென்று நாங்கள் அமர்ந்தோம். அந்த ஹால் முழுதும் இளம் அங்கத்தினர்கள் இருந்தார்கள். எனக்கு ஒரே வியப்பாக இருந்தது.

''சென்னையை அடுத்த இந்தப் புறநகரில் இளைஞர் சங்கம் அமைக்கும் எண்ணம் உங்களுக்கு எப்படித் தோன்றியது? குறிப்பாக ஏதாவது இருந்தால் சொல்லுங்கள்'' என்று சங்கத் தலைவர் ஸ்ரீ ஆர். கோபாலகிருஷ்ணனைக் கேட்டேன்.

''நான் தொழில் நுட்பக் கல்வியில் விசேஷப் பயிற்சி பெறுவதற்காகப் பிரான்சுக்குப் போயிருந்தேன். அங்கேயே சில காலம் தங்கியிருந்தேன். அப்பொழுது அங்கு டெலிவிஷன் காட்சியைக் கண்டேன். அதில் இந்தியாவைப் பற்றிக் குறை கூறியும், இந்திய மக்களின் சோம்பேறித் தன்மையை இடித்துக் காட்டியும் சில காட்சிகள் காட்டப்பட்டன. அவற்றைக் காண என் மனசுக்கு மிகவும் வேதனையாக இருந்தது. என் பயிற்சி முடிந்து இந்தியாவுக்குத் திரும்பியதும், இந்த இளைஞர் சங்கத்தை நண்பர்களின் ஒத்துழைப்புடன் தொடங்கினேன். இதன் முக்கியமான குறிக்கோள் இளைஞர்கள் சோம்பேறித்தனமாக இருந்து விடாமல் நாட்டுக்கு உகந்த ஏதாவதொரு பணியை மேற்கொள்ள வேண்டும் என்பதேயாகும்.

''இன்று பெரும்பாலான மாணவர்களும், இளைஞர்களும் கல்வியைத் தங்களுடைய வாழ்க்கைக்கு ஒரு மூலதனமாகத்தான் கருதுகிறார்களே யொழியச் சமுதாயத்துக்கு நற்றொண்டாற்றுவதற்கான ஒரு வாய்ப்பாகக் கருதுவதில்லை. சிலர் புகழை விரும்பிப் படிக்கிறார்கள்; சிலர் பிழைப்பை உத்தேசித்துப் படிக்கிறார்கள். ஆனால் படிப்பதன் உண்மையான நோக்கம் நாம் பெற்ற கல்வியறிவைப் பிறருக்காகப் பயன்படுத்த வேண்டும் என்னும் உயர்ந்த கருத்தாக இருக்க வேண்டும். இந்தச் சங்கத்தின் முக்கியமான கொள்கை இதில் அரசியலுக்கு இடம் இல்லை என்பதுதான்'' என்றார்.

''சங்கம் ஆரம்பமாகி எத்தனை காலமாகிறது?''

''19—12—71ல்தான் ஆரம்பித்தோம்.''

''இந்தப் பகுதியில் உங்கள் சங்கத்தின் மூலம் செய்த ஒரு தொண்டைப் பற்றிக் குறிப்பாக ஏதாவது சொல்ல முடியுமா?''

''இந்த ஊரில் வீட்டு வரி அதிகமாக்கப்பட்டு விட்டது. அதன் காரணமாக வீட்டு வாடகை



● கிருஷ்ணாநகர் இளைஞர் சங்க நிர்வாகிகள், பெரியவர்களோடு ஆலோசனை நடத்துகிறார்கள்.

அதிகமாகி விட்டது. மக்கள் சிரமப்பட்டனர். நாங்கள் எங்கள் கிருஷ்ணா நகர் இளைஞர் சங்கத்தின் மூலம் ஊராட்சி ஒன்றியத்துக்கு மகஜர் அனுப்பி வரியைக் குறைக்க முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறோம். மேலும் இங்கு பஸ் ஸ்டாப் இல்லாமல் தொந்தரவா யிருந்தது. பல்லவா போக்குவரத்துக் கழகத்திடம் தொடர்பு கொண்டு ஒரு பக்கா பஸ் ஸ்டாப்புக்கு ஸாங்ஷன் வாங்கி விட்டோம். ஆனால் அது இப்போது கீற்றுக் கொட்டகையாகத்தான் இருக்கிறது. விரைவில் ஆஸ்பெஸ்டாஸ் ஷீட் கூரையோடு பிரயாணிகள் உட்காரச் சிமெண்ட் பெஞ்சுகள் போடவும் கோரிக்கை விடுத்துள்ளோம்.''

''மாணவர்களாகிய உங்களுக்கு மேலும் அறிவு வளர்ச்சி ஏற்படும் விதத்தில் ஏதாவது செய்கிறீர்களா?''

''பேச்சுப் போட்டி நடத்துகிறோம். பாட்டுப் போட்டி நடத்துகிறோம். ஒரு நல்ல நூல் நிலையம் திறக்க முயற்சிகள் செய்து கொண்டிருக்கிறோம்.

உயர்நிலைப் பள்ளியிலிருந்து பல வகுப்புகளுக்கு எல்லாப் பாடங்களிலும் நாங்களே வகுப்பு நடத்துகிறோம். எங்களில் பெரும்பான்மையோர் பட்டதாரிகள் ஆதலால் வகுப்புகள் நடத்தச் சௌகரியமாயிருக்கிறது.''

''சங்கத்தின் மூலம் நீங்கள் நடத்திய ஒரு நல்ல பொதுப் பணியைக் குறிப்பிட முடியுமா?''

''ஆகா! பேஷாய்க் குறிப்பிட முடியும். நாங்கள் அங்கத்தினர்களின் குடும்பத்தினரைக் கொண்டே ஒரு கதம்ப நிகழ்ச்சி நடத்தினோம். உஷா நாயர் - அம்புஜு ஜோடியின் பரதநாட்டியம்; வசந்தா தேசிகன், ராஜேசுவரி சுப்பிரமணியம் ஆகியவர்களின் வீணைக் கச்சேரி; மாணவர் வி. ராமன் அவர்களின் 'மிமிக்ரி'; இளைஞர் சங்க அங்கத்தினர்களின் நாடகம்; மெல்லிசைச் செல்வன் ஸ்ரீ வி. ஏ. ராமச்சந்திரன், ஞான பாஸ்கரன் இசைச் சுடர் ஸ்ரீரங்கன், ஸ்ரீ கண்ணன் ஆகியவர்களின் இசை நிகழ்ச்சி — இப்படி ஒரு கதம்ப நிகழ்ச்சி நடத்தி அதில் கிடைத்த வசூல் தொகையை இந்தியப் பாதுகாப்பு நிதிக்கு மனமுவந்து கொடுத்தோம்.''

இப்படி எந்தக் கேள்வி கேட்டாலும் இளைஞர் சங்கத்தின் அங்கத்தினர்கள் 'டக் டக்' கென்று பதில் அளித்து எங்களை வியப்பில் ஆழ்த்தினர்.

சங்கத்தின் காரியதரிசி எஸ். கல்யாணராமன் மிகவும் துடிப்புள்ள இளைஞர். அவர், ''எங்கள் சங்கத்தின் இன்னொரு முக்கியமான பணியைக் குறிப்பிடவேண்டும். பல்லாவரத்தில் இந்தப் பகுதிக்குக் 'கிருஷ்ண நகர்' என்ற பெயர் ஏற்பட்டு நெடுங்காலமாக நிலைத்து விட்டது. இந்தப் பெயரை ஊராட்சி ஒன்றியம் திடீரென்று 'பம்மல்' என்று மாற்றி விட்டது. இப்பகுதி பம்மல் பார்டரைச் சேர்ந்தது உண்மைதான் என்றாலும் இந்தப் பெயர் மாற்றம் பல விதத்திலும் குழப்பத்தை ஏற்படுத்தி வருகிறது. இப்பகுதிக்குப் புதிதாக வருகிறவர்கள் தடுமாறிப் போகிறார்கள்; தபால்காரர்களுக்குப் பெரிய சங்கடத்தை ஏற்படுத்தியுள்ளது. இதிலிருந்து நிவாரணம் பெற ஊர்ப் பொது மக்களின் கையெழுத்தோடு மீண்டும் கிருஷ்ண நகர் என்றே பெயரை மாற்ற வேண்டும் என்று ஒரு மகஜர் தயாரித்து ஊராட்சி ஒன்றியத்துக்கு அனுப்பியுள்ளோம். இதில் வெற்றி காண்போம் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருக்கிறது'' என்றார்.

அப்பொழுது அவர் திருக்குறளையும் உதாரணமாகக் கூறினார்: ''அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்; பெருமை முயற்சி தரும்.''

''இன்னும் ஏதாவது பணி உண்டா?''

''இந்தப் பகுதியில் திருட்டுப் பயம் இருப்பதால் இரவு நேரங்களில் நாங்கள் இளைஞர்கள் முறை போட்டுக் கொண்டு 'ரோந்து' சுற்றி மக்களை உஷார்ப்படுத்துகிறோம்'' என்று ஓர் இளைஞர் பதில் அளித்தார்.

''இந்தச் சங்கத்தில் பெரியவர்களுக்கு இடம் இருக்கிறதா? இல்லையானால் அவர்களது யோசனைகளுக்காவது இடம் உண்டா?''

''நன்றாய்க் கேட்டீர்கள் ஒரு கேள்வி. இதில் பெரியவர்களுக்கும் பங்கு உண்டு; அவர்களுடைய யோசனைகளுக்கு இடமும் உண்டு, செவிசாய்க்கும் அங்கத்தினர்களும் உண்டு. எங்கள் சங்கத்தின் சேர்மன் பெரியவர்தான், ஸார். அவர் பெயர் கே. வி. கிருஷ்ணமூர்த்தி. வைஸ் சேர்மன் டாக்டர் வேங்கட சுப்பிரமணியன். இவர் ஜெயின் கல்லூரியில் கெமிஸ்ட்ரி புரொபஸராயிருக்கிறார். இவர்களைத் தவிர எங்களுக்கு ஒரு பெரியவர் அட்வைஸராகவும் இருக்கிறார். திரு மாதவன் நாயர் சென்னை செக்ரிடேரியட்டில் உயர் பதவி வகித்து ஓய்வு பெற்றவர். அவரை எங்கள் ஆலோசகர் என்று சொல்லிக் கொள்வதில் நாங்கள் பெருமையடைகிறோம்'' என்றார் இளைஞர் சங்கத் தலைவர் கோபால கிருஷ்ணன்.

இந்த இளைஞர் சங்கம் மிகவும் நல்ல முறையில் உருவாகியிருக்கிறது என்பதற்குப் பெரியவர்களும் இதில் தொடர்பு கொண்டிருப்பதே போதிய சான்றாகும்.

ஆரம்பித்து மூன்றே மாதங்களில் இவ்வளவு சக்கைப் போடு போட்டிருக்கும் இந்த இளைஞர் சங்கம் வருங்காலத்தில் பிரமாதமாகச் செயல்படும் என்று நிச்சயமாகச் சொல்ல முடியும்.

—ஸோமாஸ்

---

அட்டைப் பட விளக்கம்

## மனத்தின் வர்ண ஜாலம், வானில் வாணம் காட்டும்!

இளமை புதுப் புது உணர்வுகளின் இருப்பிடம். வாண வேடிக்கை நடக்கையில் எத்தனை வித வண்ணங்களில் நட்சத்திர ஜாலங்களைக் காண்கிறோம்! அந்த மாதிரி விதம் விதமான உணர்வுகளின் இருப்பிடமாகிறது இளமை. அதில் கருத்தொருமித்த காதலும் மலர்ந்து விட்டாலோ கேட்கவே வேண்டாம். நவினமானதும், ரசமானதும், விவரிக்கவொண்ணாததுமான இனிய உணர்ச்சிகள் பூத்துச் சொரிகின்றன இளம் உள்ளங்களில். அத்தகைய இளம் காதல் ஜோடியையும் அவர்கள் உள்ளங்களின் பிரதிபலிப்பே போல் வானில் வண்ணக் களஞ்சியமான கோலம் போட்டுக் காட்டும் வாண வேடிக்கையையும் ஓவியர் கல்பனா இந்த இதழ் அட்டைப்படத்தில் வழங்குகிறார்.

---

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

## முடியுமோ மோகன ரோஜா மலர்ச் செண்டு கொண்டு குடும்பத்தை தினமும் மகிழ்வூட்ட முடியுமோ?




## முடியுமே புதிய பினாகா ரோஸ் டால்க் மூலம் முடியுமே



பினாகா, வண்ண
ரோஜா மலரின் வாச
மெல்லாம் வடித்து,
சருமப் பராமரிப்பு சாதனம்
கலந்தெடுத்துப் படைத்து,
எழில் வண்ணப் பெட்டியில்
வழங்குகிறது. ஒரு ரோஜா
மலர்ச் செண்டு—உங்கள்
குடும்பத்தைக் குதூகலப்
படுத்த, தினமும்!

தோட்டம் அவர்க்கு
ரோஜாவில் இல்லை
எனில் நாடிப் பெறுவீர்
அந்நாள் ஒப்பாரும்
கலந்த நறுமணங் கமழ்
புதிய பினாகா
ஸாண்டல்வுட் டால்க்.

**பினாகா**

டால்க்—குடும்பம் முழுக்க விரும்பும்

ULKA-CTP-35 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)